
கல்கி
KALKI 13.2.94 ரூ. 3.00
இந்த இதழுடன்
'தலைவலிக்கு டாட்டா!'
இலவச இணைப்பைக்
கேட்டு வாங்குங்கள்!
காதல் என்பது
எதுவரை?

“அமிர்தாஞ்சன் கோல்ட் ரப் தரும்
இணையற்ற இதமான
விரைவான நிவாரணம்”
(என் இரு ‘குழந்தை’களுக்கும்!)

அவருக்கு ஜலதோஷம்
வந்தா... குழந்தை மாதிரியேதான்...
சிடுசிடுப்பு முரண்டு; ஆறுதலா
இதமா ஏதாவது செய்தே ஆகணும்!

அமிர்தாஞ்சன் கோல்ட்
ரப் தான் குடும்ப
முழுவதுக்கும்
சரியான
கோல்ட் ரப்.
எவ்வளவு இதம்.
எவ்வளவு மென்மை.

அதே சமயம்
ரொம்ப ரொம்ப
திறன்மிக்கது.







குடும்பத்திற்கான
கோல்ட் ரப்

# அமிர்தாஞ்சன் கோல்ட் ரப்

ஜலதோஷத்திலிருந்து துரித நிவாரணம்

HTA-7068-94

# எம்.பி.க்குச் சலுகைகள் எக்கச்சக்கம்!

நமது பிரதிநிதியாக நாடாளுமன்றத்தில் இருக்கிற (எம். பி.) ஒருவருக்குச் சட்டரீதியாகக் கிடைக்கும் வசதிகள் :

சம்பளம் மாதம் ஒன்றுக்கு - ரூ. 1500

தொகுதி அலவன்ஸ் - ரூ. 3000

அலுவலகச் செலவிற்காக - ரூ. 1000

கூட்டம் நடக்கும் காலத்தில் கலந்து கொள்ளும் ஒவ்வொரு நாளும் - ரூ. 200

● உத்தியோக பூர்வமான பிரயாணம் எனில் தங்குமிடத்திலிருந்து டெல்லிக்கு ஒரு முதல் வகுப்பு ரயில் டிக்கெட் மற்றும் ஒரு இரண்டாவது வகுப்பு ரயில் டிக்கெட். அல்லது சாலை வழி எனில் ஒரு கிலோ மீட்டருக்கு 5 ரூபாய் என்ற விகிதத்தில். அல்லது விமானக் கட்டணத்தைக் கணக்கிட்டு அதைப் போல் 125 சதவீதம். அத்துடன் ரூ. 125 சேர்த்து (விமான நிலையத்திலிருந்து தங்கும் இடத்துக்கு டாக்ஸி வாடகையாம்). இதுபோல் ஓர் ஆண்டுக்கு ஒரு துணையுடன் 28 முறை இலவச விமானப் பயணம் செய்யலாம்.

● ஒவ்வொரு கூட்டத் தொடரின் போதும் சொந்த ஊரிலிருந்து டெல்லிக்குப் போகவும் வரவும் எம்.பி. யின் கணவர் அல்லது மனைவிக்குக் குளிர்சாதன வசதியுடன் கூடிய ரயில் கோச் டிக்கெட் உண்டு.

● எம்.பி. ஒரு துணையுடன் தாம் நினைத்த சமயம் இந்தியாவுக்குள் எங்கிருந்து எங்கே வேண்டுமானாலும் குளிர்சாதன வசதியுடன் கூடிய முதல் வகுப்பு ரயில் பயணம் இலவசம்.

● டெல்லியில் தங்குமிடத்தில் ஒன்று, சொந்த ஊரில் ஒன்று என இரண்டு தொலை பேசி இணைப்புகள். ஒவ்வொரு தொலை பேசிக்கும் ஓர் ஆண்டுக்குத் தலா 25,000 உள்ளூர் அழைப்புகள் (Local calls) இலவசம். (நாடாளு மன்றக் கூட்டுக்குழு இது போதாது என்கிறது. மூன்று டெலிபோன்களும் மூன்று லட்சம் இலவச கால்களும் வேண்டுமாம்!)

● குறைந்த வட்டிக்கு 50 ஆயிரம் ரூபாய் கடன் கிடைக்கும். 60 மாத தவணைகளில் திருப்பிச் செலுத்தலாம்.

● டெல்லியில் வசதியான வீடு தங்குவதற்கு. ஆண்டுக்கு 7200 யூனிட்டுகள் மின்சாரம் இலவசம். தண்ணீர் இலவசம். முதல் வகுப்பு வைத்திய வசதிகள் இலவசம்.

● குறைந்தபட்சம் நான்கு ஆண்டுகள் பதவியிலிருந்தாலும் மாதம் ஒன்றுக்கு ரூ. 1400 ஓய்வூதியம். கூடுதலாகப் பதவி வகிக்கும் ஒவ்வோர் ஆண்டுக்கும் ரூ. 250 அதிகமாகத் தரப்படும்.

– மாடன்

ஆதாரம் : 'தி வீக்'



# சிங்கப்பூர் 'காரிடர்' சிக்கலில் தவிக்கிறது!

**சிங்கப்பூர் நாளேடு 'தமிழ் முரசி'ன் ஆசிரியர் திருநாவுக்கரசு, சமீபத்தில் பிரதமர் கோ சாக் டோங் குழுவினருடன் இந்தியா வந்திருந்தார். சென்னையில் அவரைச் சந்தித்துப் பேசினோம்.**

பிரதமருடன் வெளியுறவு அமைச்சர், வர்த்தக-தொழில் அமைச்சர், அயலுறவுச் செயலர் தவிர, 38 பேர் கொண்ட வர்த்தகர் குழுவும் வந்தது. சிங்கப்பூரின் பிரதானமான நாலு வங்கிகளைச் சேர்ந்தவர்களும் வந்தார்கள். ஆக, இது மிகப் பெரிய, முக்கியத்துவம் வாய்ந்த குழு.

சிங்கப்பூரின் அடிப்படைப் பொருளாதாரக் கொள்கையினால், நிறைய உபரிச் செல்வம் இருக்கிறது. அங்கு இனிமேலும் வளர்ச்சி காண முடியாது என்ற நிலை வந்துவிட்டதால் வெளிநாடுகளில் முதலீடு செய்வது ஒன்றே சிங்கப்பூரின் வளர்ச்சிக்கும், வாழ்க்கைத் தர உயர்வுக்கும் ஏற்றதாக இருக்கும்.

முக்கோண வளர்ச்சி - என்ற திட்டத்தில், பக்கத்திலேயே இருக்கிற இந்தோனேஷியா, மலேஷியாவுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, தொழிற்பேட்டைகள், சுற்றுலா மையங்கள், கால்ஃப் மைதானங்கள், அடுக்கு மாடி வீடுகள் எல்லாம் அமைத்துக் கொடுக்க ஆரம்பித்தோம். சிங்கப்பூரிலிருந்து அரைமணி நேரப் படகுப் பயணத்தில் இருக்கிறது பத்தாம் தீவு. இது இந்தோனேஷியாவைச் சேர்ந்தது. இதில் ஓட்டல்கள், தொழிற்பேட்டைகள் எல்லாம் அமைத்து வருகிறோம்.

இப்போது உலகின் கவனம் முழுக்கச் சீனாவின் பக்கம் திரும்பியிருக்கிறது. சேமிப்பில் சீனர்கள் கெட்டிக்காரர்கள். வெளிநாடுகளில் வசிக்கும் சீனர்கள், சீனாவில் கம்யூனிஸ ஆட்சியிலேயே காபிடலிஸத்துக்கு வாயிலைத் திறந்து விட்ட போது, ஏராளமாகத் தங்கள் நாட்டிலேயே முதலீடு செய்யத் தொடங்கிவிட்டனர்.

பல வகைகளில் இந்தியாவை முக்கியமாகக் கருதுகிறது சிங்கப்பூர். முதலீட்டு விஷயத்தில் உச்ச நிலையில் இருப்பதாக உணர்கிறது. இந்தியாவில் இருக்கிற மத்திய தர வகுப்பு மிகப் பெரியது. அதனால் உற்பத்தியாகும் பொருள்களுக்கு மார்க்கெட் இருக்கிறது. வளரும் பொருளாதாரத்தில் லாபம் கணிசமானது. இங்கே சட்டத்துறை நம்பகமாக இருக்கிறது. ஆங்கிலம் பேசப்படுகிறது - சீனாவைப் போல் அல்லாமல். பயிற்சி பெற்ற மனிதவளம் இருக்கிறது. சிங்கப்பூரின் மூன்றாவது பெரிய சமுதாயம் இந்தியர்கள். இதனால் எல்லாம், இந்தியாவில் இனி முதலீடு செய்யும் வழிவகைகளை உருவாக்க வேண்டும் என்று சிங்கப்பூர் நினைக்கிறது.

பல துறைகளில் முன்னேற்றம் காண இந்தச் சூழ்நிலை உதவும். உதாரணமாக, ஏற்றுமதி அதிகரிக்க துறைமுகம் மேம்பாடு அடைய வேண்டும். சாலை, டெலிகம்யூனிகேஷன், வீடுகள் எல்லாம் பெருக வேண்டும். இம்மாதிரி துறைகளில், சிங்கப்பூரின் நிபுணத்துவத்தை முதலீடாகக் கருத முடியும்.

இந்தியா இதுவரை மேற்கை நோக்கித்தான் போய்க் கொண்டிருந்தது. கிழக்கே பார்க்கவே இல்லை. இப்போது ஐரோப்பாவில் பொருளாதார வளர்ச்சி குன்றிப் போய் விட்டது. எனவே அங்கு வாய்ப்புகள் குறைவு.

இந்தியாவில் முதலீடு செய்ய வேண்டும் என்று நாலு-நாலரை வருஷங்களுக்கு முன்னேயே சிங்கப்பூர் இந்தியாவை அணுகியது. இதில் உருவானதுதான் சிங்கப்பூர் காரிடர் என்ற கருத்து. அதாவது சிங்கப்பூர் தொழில் வளாகம். நிலம் எல்லாம் கூட ஒதுக்கினார்கள். ஆனால் இன்னும் பொட்டலாகவே இருக்கிறது அந்த இடம்! முதலில் துணைப் பிரதமரும் பிறகு தகவல் அமைச்சர் தலைமையில் ஒரு குழுவும் வந்து பார்த்தும் ஒன்றும் நகரவில்லை. சிங்கப்பூர்த் தமிழர்களுக்கு இது வருத்தம்தான். சாலை, நீர்வசதி, மின்சாரம் இவை எல்லாம் உறுதிப்பட்டால்தானே யாரும் முதலீடு செய்வார்கள்? தமிழகம் சுறுசுறுப்புக் காட்டவில்லையே?

பக்கத்துக் கர்நாடக மாநிலத்தைப் பாருங்கள். சென்ற வருடம் பெங்களூரிலிருந்து வந்தார்கள். ஆறே மாதத்தில் இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி பார்க் ஆரம்பித்து வைக்கும் வேலையைத் தொடங்கி விட்டார்கள்.

மகாராஷ்டிராவில் பம்பாய் ஜவாஹர் போர்ட்டுக்கு அருகே பிரம்மாண்டமான

பண்டக சாலை கட்ட ஒப்பந்தம் செய்து விட்டார்கள்.

ஃப்ரிஜ், ஏர்கண்டிஷனர் உற்பத்தி செய்ய தனியார் நிறுவனம் ஒன்றுடன் ஒப்பந்தமாகியுள்ளது.

இந்திய அரசுடன் ஷிப்பிங் சம்பந்தமான ஓர் ஒப்பந்தம்.

இந்தியாவில் முதலீடு செய்வதற்கான புள்ளி விவரத் தகவல்கள் சிங்கப்பூரில் உடனடியாகக் கிடைக்க ஓர் ஒப்பந்தம்.

நவீன அடுக்கு மாடிக் கட்டடங்கள் கட்டும் தொழில் நுட்பத் திறனை டில்லி, பிறகு பம்பாய் - சென்னை என்று விரிவுபடுத்தும் ஓர் ஒப்பந்தம்...



✱ தமிழ் முரசின் 'அரசு'

இந்த ஒரு வருடத்தில், இந்திய வர்த்தகர்கள் போக்கு நிறைய மாறியிருக்கிறது. போட்டி போட்டே ஆக வேண்டிய நிர்ப்பந்தம் அவர்களிடம் தெரிகிறது. தன்னம்பிக்கையும் இருக்கிறது. அயல் நாடுகளில் நமது பொருட்களை விற்பனை செய்ய வேண்டும் என்ற துடிப்பு இருக்கிறது. மூன்று வருடங்களுக்கு முன் இப்படி நான் பார்த்த தில்லை. பொருளாதார சீர்திருத்தத்தின் பயனை, வணிகர் உணர்வதாகவும், பயன்படுத்திக் கொள்வதாகவும் தெரிகிறது.

இவை எல்லாம் இறுதியில் மக்களுக்குத்தான் நன்மையாக அமையும். போட்டி இருப்பதால், தரமான பொருள் மட்டுமே சந்தையில் நிற்க முடியும். போட்டி காரணமாக விலை கூட மலிவாகலாம். உற்பத்தி பெருக, வேலை வாய்ப்புகளும் பெருகும். அப்போது தனி மனித வருமானமும் அதிகரிக்கும்.

ஆனால் சாதாரண மக்கள் நிலையிலும், தொழிற் சங்கங்கள் நிலையிலும் இது உணரப்பட்டால்தான் இந்தியா இன்னும் வேகமான வளர்ச்சி காண முடியும். இனி இந்தியா தனித்து, ஒதுங்கி வாழ முடியாது: உலகப் பொருளாதார நோக்கில், ஒன்றை ஒன்று சார்ந்து வாழ வேண்டியதுதான் என்பது ஒப்புக் கொள்ளப்பட வேண்டும்.

தமிழ்நாட்டில் இந்த மாற்றங்களை அறிந்திருக்கிறார்களா? இந்த வாய்ப்புகளை உணர்ந்திருக்கிறார்களா? பயன்படுத்திக் கொள்கிறார்களா? இங்கு பிஸினஸ் கல்சர் - வர்த்தக மனோபாவம் வளர வேண்டும். அரசாங்க வேலைகளை மட்டுமே நம்பி இனி வாழ முடியாது என்பது உணரப்பட வேண்டும்.

இருபத்தைந்து வருடங்களுக்கு முன், மிகத் தாழ்வான நிலையில் இருந்த சிங்கப்பூர், இன்று பெரிய பொருளாதார வளர்ச்சி காண முடிந்திருக்கிறது என்றால், அதற்கு அங்கே இருக்கும் தொழிற்சங்கங்களும் ஒரு காரணம். நிலைமையைப் புரிந்து கொண்டு, வீம்பு பிடிக்காமல், விட்டுக் கொடுத்து நடக்கும் மனோபாவம் அவர்களுக்கு இருந்தது. இன்று அங்கே தொழிற்சங்கங்களே நிர்வகிக்கும் நியாயவிலைக் கடைகளும், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளும், டாக்சி சர்வீசுகளும் எத்தனை வெற்றிகரமாக இயங்குகின்றன! தங்களுக்கும் பொருளாதார வளர்ச்சியில் பங்கு உண்டு என்பதை அவர்கள் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள்.

இந்தியா, குறிப்பாகத் தமிழகம், இதை எல்லாம் கண்டு உணர்ந்தால்தான் தலை நிமிர்ந்து நிற்க முடியும்.

பேட்டி, கட்டுரை : சாருகேசி
புகைப்படம் : பாலாஜி

# Kalki Shopping Page

## NETLON

DO YOU WANT TO BE FREE
FROM MOSQUITO MENACE!
INSTALL NETLON SCREENS
TO YOUR WINDOWS
WASHABLE - DUST PROOF

## RBS & CO

(Authorised Netlon Fabricators)

**Head Office :**
3, 42nd Street,
Nanganallur,
Madras - 600 061.

**Show Room :**
8/2, 3rd Main Road,
Nanganallur, Madras - 600 061.

**Branch Office :**
51-D, Hastinapuram Main Road,
(Opp. MIT Institute)
Chrompet, Madras - 600 044.
Ph : 2346961 (call 24 hours)

## B. M. SILK SAREES

B. M. சில்க் சாரீஸ்
காஞ்சிபுரம்
பட்டுசேலை
தயாரிப்பாளர் :

5, வடக்கு மாட வீதி,
மைலாப்பூர்,
சென்னை - 600 004.

எங்களின் மாதாந்திர சீட்டு
திட்டத்தில் சேர்ந்து
பயனடையுங்கள்.

குறிப்பு : அனைத்து
பட்டு சேலைகளும்
தறி விலைக்கே கிடைக்கும்.

## தங்கள் கனவு நினைவாக வேண்டுமா? வாருங்கள், எங்களிடம்.

1. உங்கள் அதிர்ஷ்டக் கல்லை நீங்கள் பிறந்த ஜாதகம் இருப்பவர்களும் அல்லது ஜாதகம் இல்லாதவர்களும் அணியலாம்.
2. இதுவரை நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் எங்களிடம் ஜாதகம் பார்த்து மகிழ்ச்சியாக உள்ளனர்.
3. மேலும், அனைத்து வகுப்பு திருமணங்களையும் நாங்கள் வெற்றிகரமாக நடத்தித் தருகிறோம்.
4. எங்களிடம் ஹைதராபாத் முத்துக்கள் கிராம் ரூ. 15 முதல் கிடைக்கும்.
5. தாலிபவளம், விதவிதமான பவள மாலைகள் கிராம் ரூ. 50 முதல் கிடைக்கும்.
6. ஜெய்ப்பூர் நவரத்தின மாலைகளும் ரூ. 50 முதல் எங்களிடம் கிடைக்கும்.

தாங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

**Jaipur Gems "N" Jewel,**
(Near Panagal Park)
Opp : A. R. R. Complex,
North Usman Road, T. Nagar,
Madras - 600 017.

எமது புதிய வெளியீடுகளிற் சில :

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ பெரியவாளின் ஆன்மீக அனுபவங்கள் | 12.00 |
| 2. | ஸ்ரீ பெரியவாளின் பொன்மொழி ஐந்நூறு | 12.00 |
| 3. | இந்துமத உபாக்கியானம் (53 ஆம் பதிப்பு) | 20.00 |
| 4. | சீரும் சிறப்பும் பெற சிறந்த யோசனைகள் | 10.00 |
| 5. | மங்கள வாழ்வுக்கு மணியான யோசனைகள் | 10.00 |
| 6. | அர்த்தமுள்ள பொன்மொழிகள் | 17.00 |
| 7. | வாழ்வில் நலம்பெற ஆன்றோர் அருளுரைகள் | 12.00 |
| 8. | தெரிந்த கோயில்கள் தெரியாத விஷயங்கள் | 25.00 |
| 9. | ஞானக் குழந்தைகள் | 22.00 |
| 10. | கி. வா. ஜ. பேசுகிறார் | 24.00 |
| 11. | கதை சொல்கிறார் கி. வா. ஜ. | 20.00 |
| 12. | நவக்கிரகங்கள் - கி. வா. ஜ. | 23.00 |
| 13. | கந்தபுராணக் கதைகள் - பி. ஸ்ரீ. | 26.00 |
| 14. | நாரதர் கதை - பி. ஸ்ரீ. | 16.00 |
| 15. | தசாவதாரக் கதைகள் - பி. ஸ்ரீ. | 21.00 |
| 16. | ராஜரிஷி விசுவாமித்திரர் - பி. ஸ்ரீ. | 19.00 |
| 17. | ஸ்ரீ லக்ஷ்மி வரலாறும் வழிபாடும் - பி. ஸ்ரீ. | 16.50 |

**அல்லயன்ஸ் கம்பெனி**
244, ராமகிருஷ்ணா மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
போன் : 71314

# Kalki Shopping Page

# காதல் என்பது எதுவரை...

● மாதவன் - சபரி

அரசியலில் எப்படியோ, ஆனால் நிஜ வாழ்க்கையில் வடக்கும் தெற்கும் இணைந்து வாழ முடியும் என்று நிரூபித்து வரும் குடும்பங்கள் சில இருக்கின்றன.

அண்ணா நகரில் சுமீதா-ஹரி தம்பதியைச் சந்தித்தோம். (அட்டைப்படம்)

''ஒரே சாதிக்குள் திருமணம் பண்ணிக் கொண்டாலே பிரச்னைகள் பல விதங்களில் எழுகின்றன. உங்கள் விஷயம் எப்படி?''

''நான் கேரளாவைச் சேர்ந்தவன். சுமீதா உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்தவள். ஆனால் அவள் பிறந்து வளர்ந்தது எல்லாமே ஹைதராபாதில். நான் படிச்சது சென்னையில். இருவரும் சந்திச்சது ஒரே அலுவலகத்தில். வருஷம் 85...''

''ஆனா உடனே நிச்சயித்து, கல்யாணம் நடந்திடலை. இரு புறங்களிலிருந்தும் எதிர்ப்பு! குறிப்பா என் பெற்றோரிடமிருந்து! 'நம்முடைய நடைமுறைச் சம்பிரதாயங்களுக்கு வேறுபட்ட கலாசாரத்திலிருந்து ஒரு பெண்ணை மணந்து கொண்டு எப்படி வாழ்க்கையை நடத்த முடியும்?'னு கேட்டாங்க. எங்கள் நெருங்கிய நண்பர்கள் கூட இந்தத் திருமணத்துக்குச் சம்மதிக்கலை. 'வேண்டாம். பிறகு வாழ்க்கையில் வருந்துவீர்கள்' னாங்க!''

சுமீதா சொன்னார் : ''மத்த எந்த ஆணிடமும் காணாத எந்த விசேஷ குணநலனை நீ ஹரியிடம் கண்டாய், சொல்!'' என்று என் தகப்பனார் என் கிட்ட கேட்டப்போ, உண்மையிலேயே எனக்கு வாயடைச்சுப் போச்சு. பதில் சொல்லத் தெரியலை. ஆனா அது, ஒரு வருடம் பொறுமையா யோசிக்க வைச்சது. கல்யாணம் பண்ணிக் கொள்வது என்று நாங்க தீர்மானிச்ச உடனேயே, பெற்றோர் சம்மதமும் கிடைக்காமல் இருந்தது ஒரு விதத்தில் மறைமுகமான நன்மையாத்தான் இருந்தது. நம்மை ஆழமா யோசிக்க வைக்கிற அந்தக் கால கட்டம் மிக முக்கியமானது. யோசித்ததில் வெவ்வேறு கலாசாரப் பின்னணி இருந்தாலும், எங்கள் வேர்களிலிருந்து நாங்கள் எப்போதோ அறுபட்டுப் போய் விட்டோம். அதனால் அன்றாட நடைமுறை வாழ்க்கை இருவருக்குமே பாதிக்கப்படப் போவதில்லை என்பது புரிந்தது....''

வீட்டில் என்ன பாஷை பேசுவது என்பது இவர்களுக்குப் பிரச்னையாக இருக்கவில்லை. ஹிந்தியும், ஆங்கிலமும்



கலந்து பேசுவது ஆரம்பம் முதலே பழகிவிட்டது. "அதிகமாக ஆங்கிலம் தான். ஏன்னா என்னுடைய ஹிந்தி சுமாராகத்தான் இருக்கும்" - என்கிறார் ஹரி.

அதனால்தானோ என்னவோ, மூன்று வயது மகள் ஷ்ருதி முழுக்க முழுக்க ஆங்கிலத்திலேயே பேசுகிறாள். வெகு இயல்பாகவும் இருக்கிறது. ஹிந்தியில் சில வார்த்தைகள்.

அப்படியானால் பிரச்னைகள் என்று எதுவுமே இல்லையா?

இருந்தது. பள்ளிக்கூடத்தில் மகளைச் சேர்க்கப் போனபோது, குழந்தையின் தாய்மொழி எது என்பதற்கு என்ன பதில் சொல்வது? குழந்தை எந்த மாநிலத்தைச் சேர்ந்தது என்பதற்கு என்ன எழுதுவது? ஆனால் பரஸ்பரம் கலந்தாலோசித்து ஒரு முடிவுக்கு வருவதில் சிரமமிருக்கவில்லை.

சாப்பாட்டு விஷயங்களில் எப்படி?

"எனக்கு என்னவோ சப்பாத்தி-பாஜிதான் பிடித்திருக்கிறது; என்றாலும் கவிதா என் அம்மாவிடம் போய் கேரளத்து உணவு வகைகளை விரும்பிச் சாப்பிடுகிறாள்! என் பெற்றோரும் எங்களுடனேயே இருப்பது அவளுக்குச் சௌகரியமா இருக்கு!" என்கிறார் ஹரி, வேடிக்கையாக.

இப்போது மாமியார் மலையாளத்தில் பேச, மருமகள், கவிதாவும் மெல்ல மெல்ல அந்த மொழியைக் கற்றுக் கொள்ளத் தொடங்கிவிட்டார்!

"ஆ ர ம் ப த் தி லேயே ஒருத்தருக்கொருத்தர் முழுமையாப் புரிஞ்சுக்கிறதும், ஒருவருடைய குறைபாட்டை இன்னொருவர் அனுசரித்துப் போக முடியும்கிற தீர்மானமும் இருந்தா, சு மு க ம ா ன வாழ்க்கை நிச்சயம்!" என்கிறார் ஹரி.

**க**ன்னியாகுமரியில் பிறந்து, காஷ்மீரில் திருமணம் செய்து கொண்டவர், புற்றுநோய்ச் சிகிச்சை மருத்துவர் டாக்டர் மாதவன். படிப்பு முழுக்கத் தமிழ் நாட்டில் திருச்சியிலும், சென்னையிலும்தான். மனைவி சஷி, காஷ்மீர் பண்டிட் குடும்பத்தைச் சேர்ந்தவர்.

"உங்கள் முதல் சந்திப்பு எப்படி நிகழ்ந்தது டாக்டர் மாதவன்?" என்று கேட்டோம்.

"எழுபத்தொன்னாம் வருஷம், நான் ஜம்மு ராணுவ மருத்துவமனையில் சர்ஜனாகப் பணிபுரியப் போயிருந்தேன். சஷி அங்கே நர்ஸ். ஆபரேஷன் தியேட்டரிலிருந்து ட்யூடி முடிந்து, அவ திரும்பும் பொழுது எங்கள் முதல் சந்திப்பு நிகழ்ந்தது. ஆனால் அந்த நட்பு ஏழு வருஷம் தொடர்ந்தது!"

"ஏழு வருடமா?"

"ஆமாம்." என்கிறார் சஷி மாதவன். "இரு பக்கங்களிலும் இருந்து எதிர்ப்பு இருந்தது. அதிலும் காஷ்மீரப் பண்டிட்டுகள் வழக்கத்தில், பெண்களை ஏற்றுக் கொள்வாங்களே தவிர, கொடுக்க மாட்டாங்க."

● சாரதா - ராமசர்மா



ஆனால் மாதவனும் சஷியும் பொறுமையாகக் காத்திருந்தார்கள் - ஏழு வருடமும். பெற்றோரின் சம்மதம் இல்லாமல் திருமணம் செய்து கொள்ளுவது இல்லை என்ற உறுதி இருவரிடமுமே இருந்தது. ஆக, 77 ல் தில்லியில் திருமணம் நடந்த போது, ஒரு மகிழ்ச்சிகரமான திருமணமாகவே இருந்தது.

வீட்டில் பெரும்பாலும் பேச்சு மொழி ஆங்கிலமே. கொஞ்சம் ஹிந்தியும் உண்டு. இப்போது சஷி தமிழிலும் சுமாராகப் பேசுகிறார் - நண்பர்கள் உதவியுடன்.

"இதுவரைக்கும் பிரச்னைகள் எதுவும் எழவில்லை!" என்று அழுத்தமாகச் சொல்லும் இந்தத் தம்பதி, "எங்கள் இருவரின் பெற்றோர்களும் எங்களுக்குக் கற்பித்துத் தந்திருக்கும் வாழ்வின் நெறிமுறைகள் சுலபமானவை; திருப்தியுடன் வாழ உதவுபவை!" என்கின்றனர்.

ஒவ்வொரு வருடமும் சபரி மலைக்குச் செல்லுகிறார் டாக்டர் மாதவன். சஷி வருடா வருடம் ஜம்முவுக்குப் போகும் போதெல்லாம், அவரது சகோதரர்களுடன் வைஷ்ணோ தேவி கோவிலுக்குப் போகிறார். "இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை நானும் ஜம்மு போகிறேன். அப்போது நானும்

வைஷ்ணோதேவியைத் தரிசிப்பது உண்டு'' என்கிறார் மாதவன்.

சஷி-மாதவன் தம்பதியின் மகன் நாராயண் ஹிந்தி, ஆங்கிலம், தமிழ் மூன்றும் சரளமாகப் பேசுகிறான். ''ஆங்கிலத்தில் அவன் கவிதையே எழுதுகிறான்!'' என்கிறார் டாக்டர் மாதவன்.

''**சா**ரதாவும் நானும் முதன் முதலாகச் சந்திச்சபோதே தெரிஞ்சு போச்சு - 'இவள்தான் என் மனைவி'ன்னு. நான் முடிவு செஞ்சது போலவே அவளும் மனசுக்குள் முடிவு செய்துட்டா... சீக்கிரமே எங்க எண்ணங்களைப் பரிமாறிக்கிட்டோம். ஆனால் கல்யாணம் பண்ணிக்க இரண்டு வருஷம் காத்திருந்தோம்...'' என்கிறார் ஏ.வி.எஸ். ராம சர்மா.

ராம சர்மா ஆசாரமான தெலுங்குக் குடும்பம். சாரதா மத்திய தர வங்காள பிராமண குடும்பத்துப் பெண். மற்ற வங்காள பிராமணர்களைப் போல் சாரதா குடும்பத்தாரும் மீன் சாப்பிடும் வழக்கம் உண்டு! இரண்டு குடும்பத்திலும் அதுவரை யாருமே காதல் பற்றி மூச்சு விட்டதில்லை.

''எங்க குடும்பங்களை முதல்ல கல்யாணத்துக்குச் சம்மதிக்க வைக்கணும் இல்லையா... அதுக்காகச் சாரதா வீட்டுக்கு என் அம்மாவையும் சகோதரிகளையும் அழைச்சுக்கிட்டுப் போனேன். அவளும் எங்க வீட்டுக்கு வந்து பழக ஆரம்பிச்சா. எங்க காதலை நாங்க ஆரம்பத்திலேருந்தே குடும்பத்தார்கிட்டே மறைக்காம ரொம்பத் தெளிவா வெளிப்படுத்திட்டோம்.''

இரு குடும்பங்களும் பழமையில் ஊறியவை என்னும் போது, இதை எப்படி ஏற்றார்கள்...?

''எதிர்ப்பு இல்லாமலில்லை. நம்ம குலத்துல பெண்ணு இல்லையா? நீ ஏன் இப்படியெல்லாம் செய்யற....''ன்னு சொந்தக்காரங்க என் மனசை மாத்த ரொம்ப முயற்சி பண்ணினாங்க. ஆனால் நான் அதனால கோபப்படவுமில்லை; மனசு தளரவுமில்லை. என்னுடைய காதல் எத்தனை தூரம் போகும்னு அவங்க சோதிக்கப் பார்க்கறதாவே எடுத்துக்கிட்டேன்...''

''எந்தத் திருமணத்திலுமே பெண்தான் அதிகம் விட்டுக் கொடுக்க வேண்டியுள்ளது. அதிலும் கலப்புத் திருமண வாழ்க்கையில் அவள் பேரில் உள்ள பாரம் மிக அதிகம்...'' என்று ராம சர்மா ஒப்புக் கொள்கிறார்.

''சாரதா மீன் சாப்பிடுவதை நிறுத்தினது ரொம்பச் சின்ன விஷயம். மற்ற எத்தனையோ விதங்கள்ல எங்க கலாசாரம் அவ பேர்ல திணிக்கப்பட்டிருக்கு... இதையெல்லாம் ஏத்துக்கிட்டு தன் தனித்தன்மையையும் அவ காப்பாத்திக்கணும்னா எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கணும்னு நான் உணர்கிறேன்....'' என்கிறார் ராம சர்மா.

''கல்யாணத்துக்கு முன் இரண்டு வருஷம் இதையெல்லாம் யோசிச்சு எங்களைத் தயார்ப்படுத்திக்கிட்டிருந்தாலும் நடைமுறையில் ரொம்ப கஷ்டமாத்தான் இருந்தது. இதில் வேடிக்கை என்னன்னா, வீட்டுக்கு திடீர்னு நிறைய உறவினர்கள் வர ஆரம்பிச்சாங்க. எல்லாருக்கும் ஒரே ஆவல் - 'இந்தப் பயல் இப்படி ஒரு கல்யாணம் பண்ணிக்கிட்டிருக்கானே - புதுப் பொண்ணு அட்ஜஸ்ட் பண்ணிக்கிறாளா? இல்லை குடும்பத்துல குழப்பம் வந்துடுச்சா...' அப்படின்னு வம்புக்கு ரொம்ப அலைஞ்சாங்க. எங்களுடைய எல்லா பிரச்னையிலும் பெரிய பிரச்னை இதுவாத்தான் இருந்தது. சராசரியான பிணக்குகளைக் கூட நாங்க வெளியில காண்பிக்கக் முடியாது! ஏன்னா, அதுவே அவங்க வெறும் வாய்க்கு அவலா ஆயிடுமே!''

**சா**ரதா - ராம சர்மா கல்யாணம் இரு வீட்டு வழக்கங்கள்படியும் நடந்தது. கல்யாணம் முடிந்த கையோடு ராம சர்மா வேலை பார்த்த அலுவலகத்திலிருந்து கார் வந்து அவரை வேலைக்கு அழைத்துப் போய் விட்டது! டாடா நிறுவனமான டிம்கெனில் அசிஸ்டன்ட் கம்பெனி செக்ரடரியாக பொறுப்பான வேலை. அதை அவர் மிகச் சிறப்பாகச் செய்து வந்ததால் பிரகாசமான எதிர்காலமும் அவருக்கு இருந்தது. ஆனால்... காலை ஒன்பது மணிக்கு வீட்டை விட்டுக் கிளம்பினால் இரவு பதினோரு மணிக்குத்தான் திரும்புவார்! கூடவே சில அலுவலக நண்பர்கள் வருவார்கள் - விடிய விடிய வீட்டில் வேலை செய்வார்கள்.

ஜில்லு ஜானு

சாதனை தேவதையே வருக! வருக!!

பெங்களூர் சென்று கபில்தேவின் சாதனையை நேரில் கண்டு வாழ்த்தித் திரும்பும் தானைத் தலைவியே வருக! வருக!

என்ன அமர்க்களம் இதெல்லாம்?

ஒவ்வொருத்தர் ஒன்றுமில்லாததுக் கெல்லாம் ஆர்ப்பாட்டம் பண்ணிக்கிறாங்க! நீ கபில்தேவின் சாதனைபடைத்த ... சும்மாவா!

அல்லது பிரைவேட் ஜெட் விமானத்தில் ஏறி, அலுவலக வேலையாக வெளியூர் போய்விடுவார். அனேகமாக ஒவ்வொரு நாளும் இப்படியே!

சாரதாவால் தனிமையைத் தாங்க முடிய வில்லை. குழந்தை விவேக் பிறந்த பிறகு பிரச்னை அதிகம்தான் ஆயிற்று. கைக் குழந் தையை முழுக்க முழுக்க சாரதாவே சமாளிக்க வேண்டியிருந்தது. 'எதுக்காக கல்யாணம் பண்ணிக்கிட்டோம்? கணவ ருக்கு இந்த வாழ்க்கையில் என்ன பங்கு?' ஏதோ வாக்கு கொடுத்துட்டமே, அதைக் காப்பாத்தணும்னுதான் என்னைக் கல்யா ணம் செய்துக்கிட்டாரா? இப்படியே எத் தனை நாளைக்கு வாழ்க்கையை ஓட்ட முடியும்....?' இந்தக் கேள்விகளையெல் லாம் மனசுக்குள் வைத்துக் கொண்டு குழம் பாமல், கணவரிடமே கேட்டு விட்டார் சாரதா.

ராம சர்மா ஆத்திரப்படவில்லை; யோசித்தார். சாரதாவின் நிலையில் தம்மை நிறுத்திப் பார்த்தார்.

''உடனடியாக நடவடிக்கை எடுக்க லைன்னா எங்க இல்லற வாழ்க்கை பெரிய கேள்விக் குறியாயிடும்னு உணர்ந்தேன். என் வேலையை ராஜினாமா செய்துட்டு, சென் னையில் வேற வேலை தேடிக்கிட்டேன். மாலை நேரங்களைக் குடும்பத்தோட செல விடறேன். பழைய வேலையில் எனக்கு அனுகூலங்கள் அதிகம். ஆனால் நான் அது லேயே தொடர்ந்து இருந்திருந்தா என்னு டைய வளர்ச்சி நிஜமான வளர்ச்சியா இருந் திருக்காது. அதோட, சாரதா நிச்சயமா என்னை விட்டு விலகிப் போயிருப்பா. எங்க காதலுக்கும் கல்யாணத்துக்கும் அர்த் தமே இல்லாம போயிருக்கும். போதாக் குறைக்கு 'நான்தான் அப்பவே சொன் னேனே இந்தக் கல்யாணம் சரிப்படா துன்னு...' என்று உறவுக்காரங்க எல்லாரும் சொல்லிக் காண்பிச்சிருப்பாங்க! இப்போ அதுக்கெல்லாம் இடமே இல்லை... இன் னும் சில வருஷங்கள் இப்படியே இருந் துட்டா சாரதாவோட எதிர்பார்ப்புகள் மாறி டும். அப்போ திரும்பவும் வேற பெரிய சவா லான வேலையை நான் தேடிக்கலாம். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கு...'' என்கிறார் ராம சர்மா.

'இப்படி ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து மகிழ்விப்பதில்தானே இல் வாழ்க்கை இன்பத்தின் எல்லையைத் தொடு கிறது' என்று கேட்பது போல் அந்தத் தம்பதி யர் அழகாகப் புன்னகை செய்கின்றனர்.

- சாருகேசி, சீதாரவி

அட்டை வண்ணப்படமும் படங்களும் :
கோபிநாத்

# அதிகரிக்கும் வன்முறையும் அதிசய வழக்குகளும்!



## 'வாஷிங்டன் போஸ்ட்!'

●● அமெரிக்காவில் வன்முறை நுழையாத இடமே இல்லை என்கிற அள வுக்கு நிலைமை கைமீறிக் கொண் டிருக்கிறது. சென்ற ஆண்டில் மட்டும் 24,000 பொது மக்களும் எழுபத்திரண்டு போலீஸ்காரர்களும் வன்முறைக்குப் பலி யாகியிருக்கிறார்கள். சுற்றுலா வந்த வெளிநாட்டுப் பயணிகள் கூட வன்முறைக் குப் பலியாகியிருக்கிறார்கள். முன்பெல் லாம் பேட்டை தாதாக்களும் அவர் களுடைய சிஷ்ய கோடிகளும்தான் வன் முறையில் ஈடுபட்டார்கள் என்கிற நிலை, இப்போது முற்றிலும் மாறிப் போய் விட்டது. இப்போதெல்லாம் சில பள்ளிக் கூடங்கள் கூட தங்கள் மாணவர்கள் துப் பாக்கி, கத்தி போன்றவற்றை எடுத்து வருகிறார்களா என்று மெட்டல் டிடெக்டர் மூலம் சோதனை செய்ய ஆரம்பித்து விட்டன!

இதற்கெல்லாம் என்ன காரணம்? அமெ ரிக்காவில் சுமார் 20 கோடி துப்பாக்கிகள் மக்களிடையே புழக்கத்திலுள்ளது ஒரு காரணமாக இருக்கலாம். இந்த எண்ணிக்கை மேலும் அதிகரிப்பதைத் தடுப்பதற் காக, பத்து டாலராக இருந்த துப்பாக்கி லைசென்ஸ் கட் டணத்தை 66 டாலராக உயர்த்திச் சட்டம் போட்டி ருக்கிறது அரசு. ''இதுவும் போதாது; அறுநூறு டால ராக உயர்த்த வேண்டும்!'' என்று கூறுகிறார் பொருளா தாரச் செயலர் லாயிட் பென்ஸ்டன். ஆனால், ''சட்டம் போடுவ தால் மட்டுமே வன்முறை குறைந்து விடாது. துப்பாக்கி வைத்துக் கொள்வது ஒவ்வொரு அமெரிக்கனின் உரிமை!'' என்று எதிர்ப் பிரசாரம் செய்கிறது நேஷனல் ரைஃபிள் அசோசியேஷன்.

இந்த விவாதங்கள் ஒருபுறமிருக்க, சென்ற கிறிஸ்துமஸின் போது, நியூயார்க் நகரில் ஒரு புது முயற்சி செய்யப்பட்டது. பெர்னாண்டோ மாட்டேயா என்ற ஒரு கார்ப்பெட் கடைக்காரர் தமது பதினான்கு வயதுப் பையன் சொன்னதாக ஒரு ஐடியா வைப் போலீசிடம் கூறினார். பதுக்கல் துப்பாக்கிகளை யார் போலீசிடம் ஒப்ப



> இப்போதெல்லாம் சில பள்ளிக்கூடங்கள் கூட தங்கள் மாணவர்கள் துப்பாக்கி, கத்தி போன்றவற்றை எடுத்து வருகிறார்களா என்று மெட்டல் டிடெக்டர் மூலம் சோதனை செய்ய ஆரம்பித்து விட்டன!

டைத்தாலும் அவர்களுக்கு நூறு டாலர் தரப்படும் என்பதுதான் அந்த ஐடியா. அதைச் செயல்படுத்துவதற்காக ஐயாயிரம் டாலரை நன்கொடையாகவும் தந்தார் டாட் பேகா.

அந்த ஐடியாவை ஆரம்பித்த நான்கு நாட்களிலேயே கைத்துப்பாக்கியிலிருந்து மெஷின் கன் வரைக்கும் ஏராளமாக வந்து குவிந்துவிட்டன. நூறு டாலர் கிஃப்ட் சர்டிபிகேட்டும் தீர்ந்து போனதால், நூ.ஓ.து (பிறகு தருவோம்) என்று தாளில் எழுதித்தர வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது. இதன் வெற்றிகரமாக, இந்தத் திட்டத்தை நாடு முழுவதும் செயல்படுத்தும் வகையில் தேசியத் திட்டமாக்கும் யோசனையும் நடந்து வருகிறது.

●● ஒன்பதாண்டுகளாக ஒவ்வொரு நாளும் தாமதமாகவே வேலைக்கு வந்து கொண்டிருந்தார் ஒரு மெக்கானிக். அதனால் அவரை வேலையிலிருந்து நீக்கியது கம்பெனி. கோர்ட்டுக்கு வழக்குப் போட்டார் மெக்கானிக். விசாரித்த நீதிபதி, "தாமதமாக வருபவரை வேலையை விட்டு விலக்குவது தவறு என்று தீர்ப்பளித்தோம், அந்த மெக்கானிக்குக்கு 38 லட்சம் டாலர் நஷ்டஈடு தர வேண்டுமென்றும் தீர்ப்பளித்தார்.

இதே போல், அரசின் நிலையத்தில் வேலை செய்த ஒரு பெண் 'கன்ட்ரோல் பேனலில்' அடிக்கடி காப்பியைச் சிந்தி இருக்கிறாள். பன்னிரண்டு நாட்கள் இடைவெளிக்குள் 3 பெப்சி, 4 ஆரஞ்சு ஜூஸ், ஆறு பாட்டில் குளிர் பானம் ஆகியவற்றைக் கொட்டியிருக்கிறாள். இதையெல்லாம் பொறுக்க முடியாத நிர்வாகம் அவளை வேலை நீக்கம் செய்யவே, அவள் நீதிமன்றம் போனாள். நிர்வாகம் செய்தது தவறு என்று தீர்ப்பளித்த நீதிமன்றம், அவளுக்கு 15 லட்சம் டாலர் நஷ்டஈடும் தர வேண்டுமென்று தீர்ப்பு கூறியதோடு கூடவே, விலையுயர்ந்த இயந்திரங்களைப் பாதுகாத்துக் கொள்வது நிர்வாகத்தின் பொறுப்பு என்றும் புத்திமதி கூறியிருக்கிறது.

இவை ஒரு புறமிருக்க, இப்போது கோர்ட்டுக்கு வந்திருக்கும் ஒரு வழக்கு என்ன தெரியுமா? ஒரு தொழிலாளி குளிக்காமல் துர்நாற்றத்துடன் வேலைக்கு வந்தார் என்று சொல்லி நிர்வாகம் அந்தத் தொழிலாளியை வேலை நீக்கம் செய்தது தான். முடிவுக்காக அனைவரும் ஆவலுடன் காத்திருக்கிறார்கள்!

- வாஷிங்டன் ஸ்ரீதரன்



"மேட் ஃபார்
ஈச் அதர்"
என்பது போல்
தயிர் சாதமும்
வடு மாங்காயும்
என்பது
ஊர் அறிந்த
ரகசியம்.

# மணக்கும் மாவடு!

**எ**ந்தப் பாட்டியை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள். அவர் வாழ்வில் ஒரு முறையாவது மாவடு ஊறுகாய் போட்டிருப்பார். அதற்குக் கூடவே ஒரு கதையும் வைத்திருப்பார். சில தாத்தாக்கள் வசியமானது கூட மாவடுவால்தான் என்பது பாட்டிகளறிந்த ரகசியம். ''மேட் ஃபார் ஈச் அதர்'' என்பது போல் தயிர் சாதமும் வடு மாங்காயும் என்பது ஊர் அறிந்த ரகசியம்.

இதன் ஜனன காலம் எது என்று கணிக்க முடியவில்லை. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்திலேயே இது தோன்றி விட்டதோ என்னவோ? நமக்குத் தெரிந்து 'மாவடு கண்ணல்லவோ' என்று கண்ணதாசன் பரவசப்பட்டதுதான் இலக்கிய சாட்சி.

**ஊ**றுகாய் என்பது இன்று தொழிற்சாலை அந்தஸ்து பெற்ற பொருள். பத்து வித ஊறுகாய்கள், பத்தொன்பது வித ஊறுகாய்கள் என்று போட்டி மேல் போட்டி. அதில் மாவடு ஊறுகாயும் ஒன்று. முந்நூறு கிராம் உள்ள குட்டி பாட்டில் இருபத்திரண்டு ரூபாய்க்கும் அதிகம். மாவடு விரும்பிகளுக்கு இது கட்டுபடியாகாது. மாவடு ஊறுகாய் மட்டும் வீட்டில் தயாரிப்பது அல்லது வீட்டில் தயாரிப்பதை வாங்குவதுதான் லாபகரமானது.

விசாலாட்சி ராமநாதனும், கௌசல்யா ரங்கநாதனும் வீட்டில் செய்யும் ஊறுகாய்களில் கைதேர்ந்தவர்கள். இவர்களின் ஸ்பெஷாலிடிகளில் மாவடுவும் ஒன்று.

''நாங்க திருவல்லிக்கேணியிலேருந்து மாவடு வாங்கி வருகிறோம். சிங்கராச்சாரி தெரு முனையில் ஒரு பெண் கொண்டு வரும் வடு மிக நன்றாக இருக்கும். மாதவரத்திலிருந்து கொண்டு வருகிறாள்'' என்று விசாலாட்சி சொல்ல ஆரம்பித்தார்.

மாவடு எப்படி இருக்க வேண்டுமாம்? துவர்க்கக் கூடாது. சிறு புளிப்பாக இருக்க வேண்டும். ருமானி வடுதான் சிறந்தது. இறக்கின வடு, அடித்த வடு என்று அதிலும் இரண்டு வகை.

இறக்கின வடு ஊறுகாய்க்கு ரொம்ப உசிதம். இது சிரத்தையாய் காம்போடு வடு ஸ்டேஜிலேயே மரத்திலிருந்து பறிக்கப்பட்டது. அடித்த வடு என்பது மரத்திலிருந்து உதிர்ந்தது. இதில் வெம்பல் வடுக்கள் அதிகமாக இருக்கும்.

வியாபார ரீதியாக மாவடு ஊறுகாய் பெரும் லாபம் தருவதில்லையாம். முக்கிய காரணம், வெம்பல் வடுக்கள்தான். ஒரு படி வாங்கினால் வெம்பல், அழுகல் வகையறாக்களை கழித்து விட்டுப் பார்த்தால், அரைப்படிக்கு மேல் கொஞ்சம் தேறும். சைஸும் இதில் முக்கியம். பிப்ரவரி கடைசியில் சீஸன் துவங்கும். அப்போது வரும் வடுக்களை ரொம்பவும் பொடியாகவும் இல்லாமல், பெரிதாகவும் இல்லாமல் பார்த்து வாங்க வேண்டும்.

வடுமாங்காய் ஊறுகாய் வியாபாரத்தில் வாடிக்கையாளர்கள் நிறையக் குறை சொல்லுவார்கள். 'கடுக்குனு இல்லை, வெடுக்குனு இல்லை' என்பார்கள். ''முடிந்தவரை தரமாகத்தான் பார்த்துச் செய்து தருகிறோம். குறை சொன்னாலும், ஆர்டர் கொடுக்கத் தவறுவதில்லை'' என்கிறார் விசாலாட்சி.

தொடர்ந்து, ''ஊற ஊறத்தான் மாவடுக்கு டேஸ்ட் அதிகம். குறைந்த பட்சம் ஒரு மாசமாவது ஊற வேண்டும். வாங்கிப் போகிறவர்கள் உடனே சாப்பிட்டு விட்டு, துவர்க்கிறது, கசக்கிறது என்பார்கள். இன்னொன்று, மாவடுமேல் ஏடு மாதிரி ஒன்று படியும். அதை நீக்கி விட்டுக் கிளறினால் சரியாகி விடும். அது பலருக்குத் தெரியாது. பூஞ்சைக் காளான் பூத்து விட்டது என்பார்கள்.

வடுமாங்காய் ஊறுகாய் போடுவதிலும் பல ரகம் உண்டு. உப்பு மாங்காய், கடுகு மாங்காய் என்று இரண்டு முக்கிய வகை. உப்பில் ஊறவைக்கப்பட்ட வடுக்களோடு மஞ்சள், கடுகு, சிவப்பு மிளகாய் போன்றவைகளை வழ வழப்பாய் வெண்ணெய் போல் அரைத்துச் சேர்க்க வேண்டும். பெரிய அளவில் செய்யும் போது, மிஷின் அரவை, கலவைகள் தவிர்க்க முடியாதவை.

''**மு**ன்னர் மாவடு ஜாடியில் காற்றுப் புகாமல் வைக்கப்பட்டு இருந்தது. இப்போது ஹார்லிக்ஸ் பாட்டில்தான். ஏர்டைட்டாக வைக்க வேண்டும். உபயோகிக்கவில்லை என்றாலும், இரண்டு மூன்று நாளைக்கு ஒருமுறை கிளறிக் கொடுக்க வேண்டும். ஒரே ஸ்பூனாகப் பயன்படுத்த வேண்டும். வேறு வேறு ஸ்பூன்களை மாற்றி மாற்றிப் போட்டால் கெட்டுப் போகவாய்ப்புண்டு'' என்று டிப்ஸ் வழங்கினார் கௌசல்யா.

கோவை பக்கத்திலிருந்து வரும் மாவடு ரொம்ப வாசனையாம். அதேபோல் திருச்சியிலிருந்து வருவதை மலை வடு என்கிறார்கள். இதை ருசியின் சிகரம் எனலாம்!

**– துளசி**

புகைப்படம் : **பாலாஜி**


மன்மோகன் சிங்
ஐயோ, வயித்துல அடிச்சுட்டீங்களே...


ஐயோ, மண்டை போச்சே...


பெட்ரோல் டீசல் விலை உயர்வு
ஐயோ முதுகு முறிஞ்சு போச்சே...


இனிமே, இதையும் வாங்கிட்டுப் போவாரு...


என்ன, கிளிண்டன் சார்... என்னிக்கோ ரிஸ்க பண்ணின தீவிரத்தை எல்லாம், இப்பத் தொலைக்கிறீங்களாமே?... கவலைப் படாதீங்க, நாங்கள்லாம் ஆட்சிக்கு வந்தப்புறம் இல்லு இல்லு பண்றோமே! என்ன, ஒரே ஒரு ப்ராப்ளம்... இங்கே சு. சுவாமின்னு ஒருத்தன் இருந்துக்கிட்டு உயிரை வாங்குறான். வேணா, சொல்லுங்க... அங்கே அனுப்பி வைக்கிறேன்...


சிங்கப்பூர் பிரதமர்
வாங்கோ...
தொழில் வளம் பெருக சிங்கப்பூர் ஒத்துழைப்பு


வாங்கோ...



# கல்கி



1994
பிப்ரவரி 13
மலர் : 52
இதழ் : 29
ஸ்ரீமுக மாசி 1

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## ஆள்கிறீர்களா? விளையாடுகிறீர்களா?

"ஆள்கிறீர்களா? விளையாடுகிறீர்களா?" என்று தமிழக அரசைப் பார்த்துக் கேட்டிருக்கிறது உயர் நீதி மன்றம். ஆசிரியர்கள் பயிற்சிக் கல்வி விஷயத்தில் தமிழக அரசு விளையாட்டுத்தனமாக நடந்து கொண்டிருப்பதாக உயர் நீதிமன்றம் தனது தீர்ப்பில் கூறியுள்ளது. தீர்ப்பைப் படிக்கும் போது, கல்வி விஷயத்தில் மட்டுமல்ல, தமிழக அரசு நீதி மன்றத்திடமும் விளையாடி யிருக்கிறது என்பது தெரிய வருகிறது!

நடந்தது இதுதான் : நூறு பெண்கள் பள்ளிக் கூடங்களில், ஆசிரியர் பயிற்சித் துறையைத் தொடங்கலாம் என்று இரு ஆண்டுகளுக்கு முன் அரசு அனுமதி அளித்தது. இதையொட்டி தொடரப்பட்ட வழக்கில், 'இந்தப் பள்ளிகளில் ஆசிரியர் பயிற்சி அளிப்பதற்குப் போதிய வசதிகள் இல்லை' என்றும் 'அதனால் இவற்றுக்கு அனுமதி வழங்க முடியாது' என்றும் நீதி மன்றம் தீர்ப்பளித்தது. ஆனால் அரசு என்ன செய்தது தெரியுமா? இந்தப் பள்ளிகளில் சேர்ந்தும் ஆசிரியர் பயிற்சி பெற முடியாமல் போனவர்களை, வேறு 286 பள்ளிகளில் அனுமதித்து, அங்கே ஒரு குட்டிப் பாடத் திட்டம் நடத்தி, அவர்களுக்கு 'ஆசிரியர்கள்' என்ற நாமதேயத்தைச் சூட்ட எண்ணியது! அரசின் இந்த உத்தரவைத் தற்போது உயர் நீதி மன்றம் ரத்து செய்ததுடன், ஏற்கெனவே நூறு பள்ளிகளில் ஆசிரியர் பயிற்சி தொடங்கலாம் என்று அனுமதி வழங்கியிருந்த அரசின் ஆணையையும் ரத்து செய்துள்ளது.

'ஆசிரியர் பயிற்சி அளிக்க ஒரு பள்ளிக்கு என்னென்ன தகுதிகள் இருக்க வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ளனவோ, அவை இப்பள்ளிகளில் இல்லாததால்தான் நீதி மன்றம் அனுமதி மறுத்தது. அவ்வாறிருக்க, அந்தத் தீர்ப்பை அலட்சியம் செய்து விட்டுக் குறுக்கு வழியில் சென்று, அதே மாணவர்களை பின்வாசல் வழியாக அனுமதித்து, குறுகிய காலப் பயிற்சியின் மூலம் அவர்களை ஆசிரியர்களாக உருவாக்க நினைப்பது சட்டத்தை மட்டுமின்றி, நீதி மன்றத்தையும் அவமதிப்பதாகும். உயர் நீதிமன்ற ஆணையை மீறி அரசு செயல்பட முடியாது; கூடாது' என்று மாண்பமை நீதிபதிகள் எடுத்துக் காட்டியுள்ளனர்.

இந்தத் தீர்ப்பிலிருந்து மூன்று அடிப்படை விஷயங்கள் தெளிவாகின்றன : முதலாவது தமிழக அரசு கல்வி விஷயத்தில் ஏனோ தானோ மனப்பான்மை கொண்டிருக்கிறது. இரண்டாவது, ஆளுநரை மட்டுமல்ல, நீதிமன்றங்களையும் கூட அலட்சியம் செய்யவும் அவமதிக்கவும் ஜெயலலிதாவை முதல்வராகக் கொண்ட இந்த அரசு தயாராக இருக்கிறது. மூன்றாவது, தகுதியே இல்லாத நூறு பள்ளிகளுக்கு ஆசிரியர் பயிற்சித் துறையைத் தொடங்க அனுமதி வழங்கப்பட்டது எனில், ஏன்? இதில் லஞ்ச ஊழல் விளையாடியிருக்கிறதா? என்ற தவிர்க்க முடியாத கேள்விகள். இந்த மூன்று அம்சங்களுக்கும் திருப்தி கரமான விளக்கங்களை மக்களுக்கு அளிக்க முதல்வர் கடமைப்பட்டிருக்கிறார். ஆனால் வேறுபல அம்சங்களில் போலவே இந்த விஷயத்திலும் முதல்வர் தமது கடமையைச் செய்யாது, 'டோண்ட் கேர்' கொள்கையையே பின்பற்றுவார் என்பது நிச்சயம்.

ஒரு நாட்டின் துரித முன்னேற்றம் என்பது அந்நாட்டின் மக்கள் எந்த அளவுக்கு, எத்தகைய கல்வி அறிவைப் பெறுகிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது. இதை உணர்ந்துள்ள நாடுகள் எல்லாம் அதற்கேற்பச் செயல்பட்டு, வேகமாக உயர்கின்றன. இந்தியா போன்ற நாடுகள் இதைப் புரிந்து கொள்ளாமல், கல்விக்கு நிதி ஒதுக்குவதிலேயே கணக்கம் காட்டுகின்றன. அரைவேக்காடு ஆசிரியர்களை உருவாக்குகின்றன. எழுத்துக் கூட்டிப்படிக்கவும் கையெழுத்துப் போடவும் கற்றுத் தந்து விட்டால் 'அறிவொளி' ஊட்டி விட்டதாக ஊரை ஏமாற்றுகின்றன.

மதிய உணவு தந்து, குழந்தைகளை வளைத்துப் போட்டு விட்டால் போதாது. அளிக்கப்படும் கல்வி தரமானதாக இருக்க வேண்டும். தாங்களும் வளர்ந்து, நாட்டையும் உயர்த்தக் கூடிய பிரஜைகளை உருவாக்குவதாக இருக்க வேண்டும். இதற்குச் சிறந்த பாடத்திட்டமும், தன்னலம் கருதாத சேவை மனப்பான்மை கொண்ட ஆசிரியர்களும், கல்வி போதனைக்கு ஏற்ற உபகரணங்களும் வேண்டும். இதையெல்லாம் கருதாமல், 'எடுத்தேன், கவிழ்த்தேன்' என்று செயல்படுவதும், 'என்னை யார் கேட்பது?' என்ற போக்கில் நடந்து கொள்வதும் தன்னைப் படிப்பாளியாகக் கருதி, டாக்டர் பட்டங்களுக்கும் ஆசைப்படும் முதல்வருக்கு அழகல்ல.



# அமைதிப்படை

**வீ**டு கட்டி விளையாடுகிறார் சத்யராஜ். மூலை முடுக்கு விடாமல், எல்லா வசனங்களையும் பேசித் தள்ளி விடுகிறார். ஒரே அரசியல் காரம். அகில இந்திய அரசியலை பீஸ் பீஸ் பீஸாய்க் கிழித்துத் தள்ளுகிறார்.

நாகராஜ சோழன், சோழர் பரம்பரையின் கடைசி வாரிசு. ஒரே கப்ஸா. அப்பா சத்யராஜ். வில்லத்தனங்களின் கபில் தேவ். அவருடைய ஒரு 'போரில்' மாட்டியது கஸ்தூரி. பிள்ளை சத்யராஜைப் பெற்று விட்டு மண்டையைப் போடுகிறார்.

ஜாதிக் கலவரம் என்று ஒன்றைக் காட்டுகிறார்கள். படு செயற்கை. அதே போல் சுஜாதா கொலையும். ரஞ்சிதா, சுந்தர்ராஜன் என்று சகட்டுமேனிக்கு வேஸ்ட்.

அனாவசியத்துக்குப் பாட்டுகள். பின்னணி இசை சூப்பர். காட்சியின் மூடுக்கு நம்மை ஒன்றவைக்கிறது.

சண்டைகளில் சிறு பிள்ளைத்தனம். பிள்ளை சத்யராஜ் உணர்ச்சி பொங்க அடிக்கிறார்.

படம் என்னவோ 'மிஸ்டர் பாரத்' டைப் தான். திரைக் கதையும், டயலாக்கும்தான் வேறு.

வில்லன் டைப் சத்யராஜ்தான் பளிச். இன்னொரு கேரக்டர் சோப்ளாங்கி.

எல்லோரையும் அல்வா பண்ணுபவர் மணிவண்ணன். ஓவர் நடிப்பு. முட்டைக் கண்ணும், ஒரு கோணத்தில் சாய்ந்து கொங்குத் தமிழில் காது கடிப்பதும் அபாரம். இனி இவர் டைரக்‌ஷனுக்கு தைரியமாய் முழுக்குப் போடலாம். நடிப்பு கைகொடுக்கும். போதுமே!

- துளசி

"உனக்கும் உன் மாமியாருக்கும் இப்போ ரொம்ப ராசியாமே!"

"அதையேன் கேக்கறே, 'மாமியார் - மருமகள் சண்டை போடுவது எப்படி?'ன்னு ஒரு புத்தகத்தை ரெண்டு பேரும் டிஸ்கஸ் பண்ணி எழுதறதனால, கொஞ்ச நாளைக்கு ராசியா இருந்து தொலைக்க வேண்டியிருக்கு!"

- பி. ஜி. பி. இசக்கி



# பித்ருக்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



# காரணம் தெரியாமல் ஒரு கொலை!



**பி**ராவிடென்ட் பண்டு கமிஷனர் அலுவலகத்தில், ஹிந்தி ஆபீசராகப் பணி புரியும் சுமதி அய்யர், புகழ் பெற்ற ஹிந்தி எழுத்தாளர் அம்ரீக் சிங் தீப் வீட்டுக்குப் போய்ச் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, வீட்டை அடைந்து, கீழே வீட்டுச் சொந்தக்காரரின் குழந்தைகளிடம் கொஞ்சி விட்டு, மாடியில் தமது வீட்டுக்கு வருகிறார். கான்புர், லாஜ்பத் நகரில் ஜே.கே. கோயிலை அடுத்துள்ள வீடு அது.

நவம்பர் 5 ஆம் தேதி, வெள்ளிக் கிழமை மாலை மணி சுமார் ஏழரை.

சுமார் அரை மணி கழித்து, ஒரு கார் வீட்டுக்கு முன்னால் வந்து நிற்கிறது. கீழே, வீட்டுச் சொந்தக்காரர் எட்டிப் பார்க்கிறார், யார் வருகிறார்கள் என்று.

கார் உடனே சற்று முன்னே சென்று தள்ளி நிற்கிறது. அவர் உள்ளே போனதும், கார் மறுபடி பழைய இடத்துக்கே வந்து நிற்கிறது.

மூன்று பேர் சுமதியின் வீட்டுக்கு, மாடி ஏறி வருகிறார்கள். அவர்களை வரவேற்று அமரச் சொல்லி, வந்தவர்களுக்கு டீ-பிஸ்கட் எடுத்து வந்து டீபாயில் வைக்கிறார் சுமதி.

மணி எட்டைத் தாண்டியிருக்கும்.

மேலே வந்து ஹாலில் எட்டிப் பார்க்கிறார் வீட்டுச் சொந்தக்காரர். பிறகு கீழே இறங்கிப் போய்விடுகிறார் - யாரோ தெரிந்தவர்கள்தான் வந்திருக்கிறார்கள் என்று எண்ணிக் கொண்டு.

சற்று நேரத்துக்குப் பிறகு, மேலே யிருந்து இறங்கி வந்த ஒரு பெண், காரின் உள்ளே அமர்ந்து, நீண்ட நேரத்துக்கு ஹாரனை ஒலிக்கிறார். மற்றவர்களும் ஏறிக் கொள்ள, கார் பறந்து விடுகிறது.

**ப**ள்ளிக்கூடம் விட்டு, தாத்தா வீட்டுக்குப் போய்விட்டு, வீட்டுக்குத் திரும்புகிறான் மகன் அபிநவ். அம்மாவைக் கூப்பிட்டபடி மாடிக்கு வருகிறான். வெளியே கறுப்பு, ஹை-ஹீல்ஸ் செருப்பு மட்டும் யாருடையதோ கிடக்கிறது. அம்மா ஹாலில் இல்லை. சமையலறைக்குப் போகிறான். காணோம். பெட்ரூமுக்குப் போனால் -

தூக்கியடித்துப் போடுகிறது.

அம்மா, பின் மண்டையில் அடிபட்டு, வாயில் துணி அடைக்கப்பட்டு, இறந்து கிடக்கிறாள்.

யார் கொலை செய்தார்கள்?

எதற்கு அம்மாவைக் கொலை செய்ய வேண்டும்?

ஓவென்று கதறி அழுகிறான் அபிநவ்.

கீழ் வீட்டுக்காரர், பக்கத்து வீட்டுக்காரர்கள் எல்லோரும் வந்து விடுகிறார்கள்.

போலீஸ் வருகிறது. போலீஸ் நாய் வந்து, மோப்பம் பிடித்து, கீழே இறங்கி, கார் நிறுத்தப்பட்ட இடம் வரை போய் விட்டுத் திரும்பி வந்துவிடுகிறது.

செய்திப் பத்திரிகைகள், கொலையைப் பற்றிப் பரபரப்பாகச் செய்திகள் வெளியிடுகின்றன. மர்மமான கொலை என்று வர்ணிக்கின்றன.

"**நா**ன் தகவல் கிடைத்ததும் தில்லிக்குப் பறந்தேன். டாக்ஸி ஒன்று பிடித்து, அன்று மாலை ஏழு மணி சுமாருக்கு வீட்டை அடைந்தேன்" என்றார் சுமதியின் கணவர் வெங்கட்ராமன். தேசிய வங்கி ஒன்றின் கிளை மானேஜராக, சென்னையை அடுத்த சிற்றூர் ஒன்றில் வேலை பார்க்கிறார். கான்புரிலிருந்து மாற்றலாகி வந்ததன் காரணமாக, மனைவியையும், மகனையும் கான்புரிலேயே விட்டு விட்டு வந்திருக்கிறார்.

"நான் ஆறாம் தேதி போய்ச் சேர்ந்த போது, மூன்று கப் டீயும், தட்டுக்களில் பிஸ்

கட்டும், ஸ்விட்டும் அப்படியே இருந்தன. வந்தவர்கள் சுமதியை ஏற்கெனவே அறிந்தவர்களாய் இருக்க வேண்டும். கீழிருந்து வீட்டுச் சொந்தக்காரர் வந்து எட்டிப் பார்த்து விட்டுப் போவதும் கதவைச் சாத்தியிருக்கிறார்கள்.

''பின்னாலிருந்து, முனை மழுங்கிய ஆயுதம் ஒன்றினால் பலமாக, சுமதியைத் தாக்கியிருக்க வேண்டும். பிறகு வாயில் துணியை அடைத்து, கழுத்தையும் இறுக்கிவிட்டு, ரத்தம்வழிந்து ஓடாமல் இருக்க, தலையைச் சுற்றி, துணியை அண்டக் கொடுத்து வைத்திருக்கிறார்கள். எப்போதும் அலமாரியில் சாவி தொங்கும். லாக்கரிலிருந்து எதுவும் களவு போகவில்லை. சம்பளம் வாங்கிய பணம் அப்படியே இருந்தது. ஸோ, அவர்கள் நகைநட்டுக்கோ, பணத்துக்கோ ஆசைப்பட்டு வரவில்லை. வேறு எதையோ தேடித்தான் வந்திருக்கிறார்கள்.''

போலீஸ் அபிநவ்வை விசாரித்தது. கறுப்பு கலர் கொண்ட பெண்கள் செருப்பு ஒரு ஜோடி வாயிற்படிஅருகே இருந்தது என்று சொன்னான் அபிநவ். கண்டதை அப்படியே விவரித்தான்.

ஏழாம் தேதி போஸ்ட் மார்ட்டம் முடிந்து உடலை ஒப்படைத்தார்கள். பின்னிரண்டு காயங்கள் இருந்தன. கழுத்தை நெறித்திருக்கிறார்கள்.

சுமதி அய்யர் ஹிந்தி ஆபீஸராக இருந்தாலும், அவருக்கு அன்றாடப் பொறுப்புகளும் நிறையவே கொடுக்கப்பட்டன.

17.10.93 அன்று கணவருக்கு எழுதிய கடிதத்தில், ஆபீஸ் வேலைப் பளுவை விளக்கிவிட்டு, ''ஒரு நாளைக்கு 300, 400 செக்குகளில் கையெழுத்துப் போட வேண்டும். இதில் முறைகேடான கேசுகளை நான் தவிர்த்து வருகிறேன்!'' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

19.7.93 கடிதத்தில், ''இது ரொம்ப சென்ஸிடிவ்வான வேலை. நான் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டியிருக்கிறது'' என்று எழுதியிருக்கிறார்.

7.8.93 கடிதத்தில், துணை கமிஷனர், கன்வா தினசரி ஒரு மெமோ கொடுப்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.

''கன்வா ஒருநாள், சுமதியைத் தம் அறைக்கு அழைத்து, யூனியன் தலைவர், ஒரு குமாஸ்தா, இருவருக்கும் முன்பாக, காட்டமாகப் பேசியிருக்கிறார். இத்தனைக்கும் சுமதியும் துணை கமிஷனர் ராங்கில் பதவி வகிப்பவள்தான். இனி இப்படிப் பலர் முன்னிலையில் அவர் தன்னை அவமானப்படுத்துவதை ஏற்க முடியாது என்று சொல்லியிருக்கிறாள் சுமதி.''


* சுமதி அய்யர்

இது போன்ற விஷயங்களையெல்லாம் விளக்கித் தலைமை அதிகாரி ஜாய்சிடம் முறையிட்டுக் கொண்டிருக்கிறார் வெங்கட்ராமன். உத்தர பிரதேச கவர்னர் மோதிலால் வோராவிடம் விவரமாக எழுதிக் கொடுத்து விட்டு வந்திருக்கிறார்.

சுமதி அய்யர் மிகச் சிறந்த ஹிந்தி மொழிப் படைப்பாளர் மட்டுமல்ல. இந்திரா பார்த்தசாரதி, புதுமைப்பித்தன், ராஜம் கிருஷ்ணன், அசோகமித்திரன், வாஸந்தி என்று எல்லோரது படைப்புகளையும் ஹிந்தி வாசகர்களுக்கு அறிமுகப்படுத்திய அற்புதமான மொழிபெயர்ப்பாளர். சாகித்ய அகாதமி உட்பட, பல அமைப்புக்கள் அவரைக் கௌரவித்திருக்கின்றன.

கான்பூரிலுள்ள அத்தனை ஹிந்தி எழுத்தாளர்களும் சுமதி அய்யரின் கொலையைக் கண்டித்து அறிக்கை வெளியிட்டிருக்கிறார்கள். ஹிந்தி நாளேடுகள் இந்தக் கொலையைப் பற்றி விவரமாக எழுதியிருக்கின்றன.

''புதிதாகப் பொறுப்பேற்றுக் கொண்டிருக்கும் கான்பூர் சிடி எஸ்.பி. ரிஸ்வியிடம் நாலரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தேன். 'இது ஒரு சவாலான கேஸ் எனக்கு. தீவிரமாகக் கொலையாளியைக் கண்டு பிடிக்கப் பாடுபடுவேன்!' என்றார் அவர். மீரட் ஐ.ஜி ஷைலேந்திர சாகர் ஒரு புகழ் பெற்ற இந்தி எழுத்தாளர். அவரும் இதில் ஆர்வம் காண்பித்திருக்கிறார். நம்பிக்கையோடு இருக்கிறேன்!'' என்கிறார் வெங்கட்ராமன். என்றாலும் -

''சுமதி, விரதங்களும், பூஜைகளுமாக வெகு தீவிரமான பக்தை. கடவுள் இப்படிச் சோதித்து விட்டாரே!'' என்று குரல் உடைந்து, வெங்கட்ராமன் சொன்ன போது, மனம் உண்மையிலேயே வருந்தியது.

எஸ். வி. என்.

சுஜாதா

மண்ணுறு வாய்கொல்? விண்ணுறு வாய்கொல்?
மண்ணுளே மயங்கிநின்று
எண்ணுமெண் ணகப்படாய்கொல்?
என்னமாயை?
– திருமழிசையாழ்வார்.

# 6

எங்கே போகிறார் என்று அறிய சற்று ஆர்வமாக இருந்தது. தூக்கம் முழுவதும் கலைந்து விட்டது. வெளியே ஒருவேளை சிகரெட் பிடிக்கப் போயிருப்பாரோ என்று தோன்றியது. தனக்கு சிகரெட் பழக்கம் இல்லை என்றுதான் சொல்லியிருக்கிறார். ''என்னுடைய ஒரே பழக்கம் முப்பத்தஞ்சு - முப்பத்தஞ்சுதான்.''

இருந்தாலும் அவ்வப்போது சில சமயம் அவரிடம் மிக அருகில் இருக்கும் போது லேசாக சிகரெட் வாசனை சட்டையில் அடித்தது. சிகரெட் பாக்கெட்டை அவரிடம் பார்த்ததில்லை. இந்த 'முப்பத்தஞ்சு-முப்பத்தஞ்சு' என்பதை அவர் அடிக்கடி சொல்லிக் கொண்டே இருப்பார்.

''எனக்கென்னவோ பட்சி சொல்லிறது. இதை நான் எப்படியும் அடைந்து விடுவேன்'' என்பார். முப்பத்தைந்து வயசுக்குள் முப்பத்தைந்து லட்சம் பணம் சேர்ப்பது அவர் குறிக்கோள்.

அவர் வெளியே போய் அரை மணியாகி விட்டது. அறைக்குள் அகாலமாக எம்.டீ.வி. ஓடிக் கொண்டிருந்தது. ஒரு பெண் தோன்ற, அவள் யார் என்ன என்று தெரிந்து கொள்வதற்குள், கடற்கரை, பஸ் ஸ்டாண்டு என்று பொம்மை மாறிக் கொண்டே இருக்க, ஒன்றும் புரியாமல் நான் தூங்கி விட்டேன். 'என்னடி இது நளம காராஜா மாதிரி அர்த்தராத்திரியில விட்டு விட்டு வேஷ்டியை அறுத்துக் கொண்டு போய் விட்டானா?' என்று அம்மா கேட்பது போல் கனவு கண்டு, திடுக்கிட்டு விழித்த போதுதான், தூங்கி விட்டேன் என்று உணர்ந்தேன்.

தூக்கத்திலிருந்து எழுந்ததற்கு மற்றொரு காரணம், அவர் லேசாக சாவி போட்டுக் கதவைத் திறக்கும் சப்தம்தான். என்ன தான் செய்கிறார் என்று மௌனமாகவே அவரைக் கவனித்தேன். லைட் போடாமல் படுக்கைக்குள் வந்து, போர்வைக்குள் நுழைந்து கொண்டு, என் கழுத்தைச் சுற்றி கட்டிக் கொண்டு, தன்பால் இழுத்த போது,

''எங்க போயிட்டீங்க?'' என்றேன்.

''பாத்ரூம்.''

''மூணுமணி நேரமா? பொய் சொல்லாதீங்க.''

''பாத்ரூம் போய்ட்டு அப்படியே 'லாபி'ல போய் கொஞ்ச நேரம் வேடிக்கை பார்த்துட்டு வந்தேன்.''

''என்ன வேடிக்கை?''

''சும்மா... தூக்கம் வரலை, அதனால.''

''எனக்கென்னவோ பொய் சொல்றீங்கன்னு தெரியறது.''

''சே, அப்படி இல்லை.''

''பொய் வேண்டாம்'' என்றேன்.

அவர் சற்று நேரம் யோசித்து விட்டு, ''ஆல்ரைட் சொல்றேன். இந்த ஓட்டலுக்கு வெளியில ஒரு ரெக்ரியேஷன் க்ளப் இருக்கு. அங்க அவங்கல்லாம் கார்ட்ஸ் ஆடிக் கொண்டு இருந்தாங்க. வேடிக்கை பார்த்துட்டு வந்தேன்'' என்றார்.

''நீங்க ஆடலியா?''

''இல்லை'' என்றார்.

சற்று நேரம் விட்டு அவரை கட்டிக் கொள்ளும் போது, சட்டைப் பையில் உறுத்தியது. காகிதக் கட்டு போல் இருந்தது. சில்லறை உதிர்ந்தது. இது என்ன என்று படுக்கை அருகில் இருந்த விளக்கைப் போட்டால், நூறு, பத்து என்று ரூபாய் நோட்டுக்களாக இருந்தன.

''என்ன இது, எதுக்காக பணத்தை இப்படி ஓரலா வெச்சிருக்கீங்க?''

அவர், ''இதுக்குத்தான் பையையெல்லாம் நோண்டக் கூடாதுன்னு பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்'' என்றார்.

எனக்குச் சட்டென்று

# வண்ணத்துப்பூச்சி வேட்டை

தோன்ற. ''அந்த க்ளப்பில கார்ட்ஸ் ஆடிக்கொண்டு இருந்தவங்க, காசு வெச்சா?'' என்றேன்.

''ஆமா ஹை ஸ்டேக் ஆடினாங்க. பப்லு ஆட்டம் கொஞ்சம்தான் நான் ஆடினேன். அதிலேயே ஆயிரம் ரூபா ஜெயிச்சேன்! பிகின்னர்ஸ் லக்.''

''ஆடலைன்னீங்களே.''

''அப்படிச் சொல்லலையே?''

''நேத்திக்குக் கூட ராத்திரி அங்க போயிருந்தீங்களா?''

''நேத்து ராத்திரி நாம் சினிமா போகலை?''

''அப்புறம் நடுராத்திரி?''

''சின்ன விஷயத்தையெல்லாம் போட்டு மனசைக் குழப்பிக்காதே.''

இது சின்ன விஷயமா என்று குழப்பமாகத்தான் இருந்தது. அந்த நூறு ரூபாய் நோட்டுக்களைப் பார்க்கப் பயமாக இருந்தது. நம் பணம் இல்லை அது. ''உங்களுக்கு தினம் கார்ட்ஸ் ஆடி ஆகணுமா?'' என்றேன்.

''சேச்சே!''

நான் சும்மா இருக்க, ''ஏன் கேக்கறே?'' என்றார்.

''இல்லை, ஏரோப்ளேன்ல கூட என்னை இழுத்து வச்சு சீட்டாடினீங்களே, அதனால அது ஒரு பழக்கமான்னுட்டு...?

''இல்லை பழக்கம் இல்லை.''

''சரி.''

''ஆனா நான் எப்ப விளையாடினாலும் ஜெயிக்காம வர மாட்டேன், அதான். போட்ட பணத்தையாவது எடுத்துட்டுத்தான் வருவேன்!''

தொடர்ந்து. ''இன்னைக்குப் பாரு. ஒரு ஆட்டம். கை பூரா ஜோக்





"திரைப்படத்தின் ஊடே முதல்வர் மற்றும் கவர்னர் படத்தைக் காட்டுறாங்களே! ஏன்?"

"சண்டைக்காட்சி நடக்குதுன்னு சிம்பாலிக்காகச் சொல்றாங்க!"

- நாஞ்சில் க. நாகராஜன்.

---

கர். ஸீக்வென்ஸ் வரலை. புக் கொடுத்தேன். ஃபுல்புக் அந்த கிளப்ல ஆயிரம் ரூபாய். ஆனா அடுத்த ஆட்டமே ஃபுல் பண்ண உடனே 'பிக் அன்ட் டிக்' ஆச்சு! என்ன பார்க்கறே?" என்றார்.

"எனக்கு நீங்க சொல்றது எதும் புரியலை."

"ரம்மி ஆடினதில்லை?"

"ஆடிருக்கேன். ஏதோ பொழுது போக்கறதுக்கு ஒருத்தருக்கொருத்தர் பார்த்துண்டு செட் சேக்கறதுன்னு வெளையாடுவோம். நீங்க சொல்றது ஞூதாட்டம்!"

"ரெண்டும் விதிகள் ஒண்ணுதான். இப்ப பப்லுன்னா ஜோக்கருக்குக் கீழ இருக்கற கார்டும் ரெண்டு டைமண்டும்."

எனக்கு இதில் ஆர்வமில்லை. எனினும் புதுசாகக் கல்யாணம் ஆனவர்கள் கணவன் சொல்வதை எல்லாம் சுவாரஸ்யமாகக் கேட்டுத்தான் ஆக வேண்டும் என்கிற எழுதாத விதியின் கீழ் அதை கவனித்துக் கேட்டேன். அவருக்குச் சீட்டைத் தவிர வேறு எதில் ஆர்வம் உண்டு என்று கேட்டதில் ஸ்டாக் மார்கெட் பற்றி மஃபத்லால், டிஸ்கோ, டெல்கோ என்று மணிக்கணக்காகப் பேசினார்.

**ம**த்யான வேளைகளில் பெங்களூர் தெருக்களின் கதகதப்பில் அலைந்தோம். ரஸ்ஸல் மார்க்கெட் போய் பேகம் கிளிகளைப் பார்த்தோம். பிரிகேடு ரோடில் எஸ்கலேட்டர்களில் ஏறி, வண்ண விளக்குகள் படைத்த கடைகளில் வண்ண வண்ணக் குப்பைகளைக் கண்டுகளித்தோம். கமர்ஷியல் ஸ்ட்ரீட்டில் கார்ப்பெட் பார்த்தோம். சைக்கிள் சக்கர வண்டியில் கரிக்கனலில் சோளக் கொண்டைகளை விசிறி விசிறிச் சுடவைத்து, காரமாக மசாலா தடவி, நீட்டிக் கொடுத்ததை இருவரும் பாதி பாதி கொரித்தோம்.

திருமண வாழ்க்கையில் இத்தனை சுந்தரங்கள் இருப்பதை ஒரு நாளிலேயே காலி பண்ணித் தீர்த்து விட்டாற் போலத் தான் இருந்தது.

இரவு வர ஒருவிதமான கலக்கம் தயக்கம். ஆர்வமும் அச்சமும் ஏற்பட்டது. ஆர்வம் படுக்கையில் நிகழப் போவதில். அச்சம் அதற்குப் பின் 'நளமகாராஜா' எழுந்து போய் விடுவாரோ என்கிற எதிர்பார்ப்பில்.

மூன்றாவது தினம் ராத்திரியில் விளக்கணைத்துப் படுத்த பத்தாவது நிமிஷம், அவர் எழுந்த போது நான் விழித்திருந்து, "எங்க கிளம்பிட்டீங்க?" என்றேன்.

"ஒரு நிமிஷம் ஒரு நிமிஷம்" என்று சொல்லி விட்டு, யோசித்த போது, "நீயும் வாயேன்" என்றார்.

"எங்கே?"

"அந்த கிளப்புக்கு."

"நான் மாட்டேன். அங்கே எல்லாரும் ஆண் பிள்ளைகளாக இருந்தால்!"

"ரீடிங் ரூம் இருக்கிறது. லைப்ரரி இருக்கிறது."

"இந்த ராத்திரியில் திறந்திருக்குமா?"

"ராத்திரிதான் திறந்திருக்கும்."

"தினம் போக வேண்டுமா?" என்றேன்.

அர்ஜுன் படுக்கை அருகில் உட்கார்ந்து கொண்டு "நான் சொல்றதைக் கவனமாக் கேளு. இது எனக்குப் பழக்கம் கிழக்கம்னு இல்லை. சீட்டாடறது எனக்குப் பழக்கமில்லை. நான் சொன்னேன் பாரு, முப்பத்தஞ்சு லட்சம் லட்சியம்? அதை அடையறதுக்கு இந்தக் கிளப்பில நிறைய பணக்காரங்க ஆடறாங்க. அவங்களுக்கு பணத்தின் மதிப்புத் தெரியறதே இல்லை. ஒருநாளைக்குப் பத்தாயிரம், இருபதாயிரம் எல்லாம் சகஜமா இழக்கக் காத்துக்கிட்டு இருக்காங்க. நான் சைன்டிஃபிக்கா ஆடுவேன். ஒவ்வொரு நாளும் இரண்டாயிரம் மூணாயிரம் ஜெயிக்கறேன். பெங்களூர்ல இருக்கற பத்து நாள்ல ஒரு இருபத்தஞ்சாயிரமாவது கிளீன் பண்ணப் போறேன். அந்த அளவில நம் லட்சியத்துக்கு அருகே போறேன், இல்லையா? அதனால என்னை ரெண்டு மணி நேரம் ஆட விடு, என்ன?"

"உங்க இஷ்டம்" என்றேன். வேறு என்ன சொல்ல?

அவர் எனக்கு முத்தம் கொடுத்து விட்டு மப்ளரை சுற்றிக் கொண்டு டார்ச் லைட்டை எடுத்துக் கொண்டு ஆடக் கிளம்பி விட்டார். எனக்கு ஏற்பட்ட உணர்ச்சியை இனம் பிரிக்க முடியாமல் திணறினேன்.

**பெ**ங்களூரில் பதினைந்து நாளும் தவறாமல் ராத்திரி இரண்டு மூணு மணி நேரம் வெளியே போய் வந்தார். வரும் போது அவர் சட்டையில் தவறாமல் சிக

ரெட் வாசனை அடித்ததற்கு விளக்கமாக ''நான் குடிக்கிறதில்லை. அவர்கள் குடிக்கும் புகை என் சட்டையில் ஏறுகிறது'' என்றார்.

வந்த கையுடன் சம்பாதித்த பணத்தைக் கணக்குப் போட்டு ஒரு சிறிய நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் கொண்டு இன்னி மொத்தம் பதினைந்து நாளில் பதினேழாயிரம் பண்ணியதாகச் சொன்னார்.

''லட்சியத்துக்கு எட்டாயிரம் குறைவு'' என்றேன். அவர் என் முகத்தில் கேலியைத் தேடினார்.

அப்போதுதான் அவருடைய சில நம்பிக்கைகளும் எனக்குப் புரிய ஆரம்பித்தன. தெருவில் போகும் போது கார்களின் எண்களைக் கூட்டிக் கொண்டு எட்டு வரும் ஒன்பது வரும் என்பார். எந்த லாட்டரி டிக்கெட்டானாலும் வாங்கி விடுவார்.

''ஒரே ஒருநாள் ரெக்லஸ்ஸா ஆடி ஒரே ஹாண்ட்ல பதினெட்டாயிரம் போய்ட்டது. டேபிளை மாத்தியிருக்கலாம்'' என்றார். எனக்கு கந்தும் நாகப்பா கடையில் ஒரு செயின் வாங்கித் தந்தார். ஒன்றுக்குள் ஒன்று பொருந்துகிற மாதிரி 'அண்ட்டு' வைத்து நடுவே சின்னப் பூவில் அமெரிக்கன் டைமண் சின்னதாக வைத்து அழகான சங்கிலி.

புதன் கிழமை ரேஸுக்கு அழைத்துச் சென்றார். குதிரைகள் இல்லாத குதிரை ரேஸ். ஆஃப் கோர்ஸ் பெட்டிங் என்றும் ஹைதராபாதில் ஓடும் குதிரைகள் மேல இங்கே கட்டலாம் என்றும் சொன்னார்.

எனக்குக் கொஞ்ச நேரத்தில் போர் அடித்துப் போயிற்று. வெள்ளைச் சட்டை, பாவாடை அணிந்த வயசுக்கு வந்த பெண்கள் ஜாக்பாட் குனிலா என்ற டிக்கெட் விற்றுக் கொண்டிருக்க, மாடிக்குப் போனால் சுவரெல்லாம் குதிரை படம். எனக்கு எல்லாமே ஒரே மாதிரி இருந்தது. காப்பி நன்றாக இருந்தது. வெளியே புல்வெளியில் குதிரைகளை நடத்தி அழைத்துச் சென்றார்கள். அவர் நிறைய பேருடன் பேசினார். என்னைச் சிலருக்கு அறிமுகம் செய்து வைத்தார். ''கல்யாணம் ஆனப்புறம் எல்லாத்தையும் விட்டுருவேன்னு பார்த்தேன். பெண்டாட்டியையும் கூட்டி வந்து விட்டாயே!'' என்று ஒருவர் கேட்டது எனக்கு என்னவோ போல் இருந்தது.

சட்டென்று கண்களில் நீர் நிறைந்து போய், பாத்ரூமில் போய் முகம் கழுவிக் கொண்டேன். கண்ணாடியில் தூக்கமின்மையும் கவலையும் ரெண்டு வயசு கூட்டியிருந்தது.

என்ன கவலை எனக்கு? ஏதோ நிகழப் போகிறது என்கிற கவலையா? ஏதோ என்றால் என்ன?

பெங்களூர் எனக்கு அலுத்துப் போய் விட்டது. ப்ருந்தாவன் எக்ஸ்பிரஸ்ஸில் சென்னை கிளம்பிய போது உற்சாகமாகத்தான் இருந்தது. ஆனால் பழைய பூதம் புறப்பட்டது. வண்டி கிளம்பின மறு நிமிஷம் பெட்டியிலிருந்து கார்ட்ஸ் எடுத்துக் கொண்டு, எனக்கும் தனக்கும் பதின்மூன்று சீட்டுப் போட்டார்.

அவர் சீட்டுக் கட்டைப் பிரிப்பதே ஒரு தனி அழகு. பிரித்து அதை இருபாதியாக்கி, ஒவ்வொரு கையில் ஒவ்வொரு பாதி கவிழ்த்து அவைகளை அருகே கொண்டு வந்து, முதுகை சற்றே வளைத்து விர்ர்ர்க் என்று ஒட்டவைத்து, ஒரு கலை கலைந்துச் சேர்த்து 'கட்' என்றார்.

''நான் மாட்டேன்'' என்றேன்.

''ஏன்?''

''போர்.''



''பொய் சொல்றவங்களை வச்சு மணிரத்னம் படம் எடுத்தா என்ன பேர் வைப்பார்?''

''புருடா புருடா!''

- எஸ்.வி. பார்த்தசாரதி.

''போர் ஒரு வார்த்தைதான் தெரியுமா உனக்கு?''

''எப்பப் பார்த்தாலும் சீட்டாட்டமா?''

எங்களுக்கு எதிரே இருந்தவர் தம்மை சாரதி என்று அறிமுகப்படுத்திக் கொண்டு, ''நானும் ஆடலாமா?'' என்றார்.

அவர்கள் இருவரும் ஆடினார்கள். கொஞ்ச நேரத்தில் நாலணா பாயிண்ட் வைத்து ஆடினார்கள்.

காட்பாடி வருவதற்குள் சாரதி நூறு ரூபாய் இழந்தார். அர்ஜுன் ''போதும் ஸார். நிறைய லூஸ் பண்ணிட்டீங்க'' என்றார்.

''அதெப்படி! டீல் பண்ணுங்க'' என்றார் பார்த்தசாரதி. அவர் முகம் சின்னதாகி இருந்தது. அர்ஜுன் புன்னகையுடன் சீட்டைக் கலைக்க, நான் அவரைக் கிள்ளினேன்.

(தொடரும்)

# திசை மாற்றம்



வெளியில் சப்தம் எழுந்தது. சுதா, சன்னல் திரையை விலக்கித் தெருவைப் பார்த்தாள். மாப்பிள்ளையும் பெண்ணும் ஆட்டோவில் இருந்து இறங்கிக் கொண்டிருந்தார்கள். ஆட்டோ, அனாவசியத்துக்குச் சப்தம் போட்டு ஊரைக் கூட்டுவதாகத் தோன்றியது சுதாவுக்கு. எதிர், அதற்கு அடுத்த வீட்டுப் பெண்கள் வீதிக்கு வந்து மாப்பிள்ளை பெண்ணை வேடிக்கை பார்ப்பதும் தெரிந்தது. இதில் என்ன ஆச்சர்யம்? இதில் என்ன வேடிக்கை பார்க்க இருக்கிறது? எரிச்சல் எரிச்சலாக வந்தது. அவளுக்கு.

மாப்பிள்ளையும் பெண்ணும் அவளுக்கு அண்ணனும் அண்ணியும்தான். மாப்பிள்ளையின் தங்கை என்கிற முறையில், சுதாதான் ஓடிவந்து, அவர்களை வரவேற்று அழைத்துச் சென்றிருக்க வேண்டும். கண்டிப்பாக மூன்றாவது வீட்டு அத்தை, இந்தக் 'குற்றத்தைக்' கண்டுபிடித்துக் கண்ணும் காதும் வைத்துப் பேசும். 'பேசட்டுமே, அதனால் எனக்கென்ன, போச்சு?'

கணேசன், தன் பேண்ட் பாக்கெட்டில் இருந்து பர்சை எடுத்து, ஆட்டோக்காரருக்குப் பணம் கொடுப்பது தெரிந்தது. ஆட்டோகாரரின் முகம், அளவுக்கு மேல் சந்தோஷிப்பதை அவள் கண்டாள். கூடுதலாகப் பணம் கொடுத்திருப்பான் கணேசன். அதுதான் அந்த வழியலுக்கான காரணமாக இருக்கும். புது மாப்பிள்ளை ஆச்சே. இப்படியெல்லாம் பண்ணி, புது மனைவியை 'இம்ப்ரஸ்' பண்ணாமல் எப்படி? அவள் அண்ணியைப் பார்த்தாள். கையடக்கமான சூட்கேசை ஏந்திக் கொண்டு, தன் அம்மாவுடன் உரசிக் கொண்டு நின்றவாறு கல்யாணி பேசிக் கொண்டிருந்தாள். திடீரென்று கல்யாணிக்கு இந்த வாளிப்பு, பிரகாசம், வந்தது எப்படி? கடைத் தெரு சுந்தர வையர் ஓட்டல் பலகாரத் தட்டு மாதிரி, அப்படி ஒரு மினுமினுப்பு எப்படி வந்தது. கல்யாணம் ஆனவளுக்கு வரும் போலும்.

சுதாவுக்கு அங்கு நிற்கப் பிடிக்கவில்லை. கொடியில் கிடந்த துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு விடுவிடு வென்று குளியல் அறைக்குள் சென்று புகுந்து கொண்டாள் அவள். தெருவில் இருந்தவர்கள், நடுக் கூடத்துக்கு வருவதும், பேசுவதும், குளியல் அறைக்குள் இருந்த வளுக்குக் கேட்டது. அவள், குழாயைத் திறந்தாள். தண்ணீர், பாத்திரத்தைப் பெயர்க்கிற மாதிரி விழுந்து, பெரும் சப்தத்தை எழுப்பியது. துணிகளைக் களைந்து போட அவளுக்கு மனம் வரவில்லை. அப்படியே, சுவரில் சாய்ந்து கொண்டு நின்று கொண்டே இருந்தாள்.

கல்யாணியைப் பெண் பார்க்க, சுதாவும்தான் போயிருந்தாள். சுதா, கணேசன், அம்மா எல்லோரும்தான் போனார்கள். நல்லவேளை! பஜ்ஜியும் சொஜ்ஜியும் இல்லை. கடை குலாப்ஜாமூனும், கை முறுக்கும். நன்றாகத்தான் இருந்தன. சுதா, அம்மாவுடனும், இன்னும் சில பெண்களுடனும், உள் அறையில் இருந்தாள். கல்யாணி, அந்தப் பெண்கள் கூட்டத்துக்குள் நாக்கு உலரத்தான் உட்கார்ந்திருந்தாள். அப்படித்தான் சுதாவுக்குத் தோன்றியது. கல்யாணி படித்திருந்தாள். எங்கேயோ வேலையிலும் இருந்தாள். என்றாலும் என்ன? அந்தச் சமயத்தில், அப்படி அடக்க ஒடுக்கமாக உட்கார்ந்திருக்க வேண்டும் என்று கற்பிக்கப்பட்டிருக்கிறதே. கல்யாணி, கச்சிதமாக இருந்தாள். கணேசனுக்குப் பொருத்தமாக இருந்தாள். ''அழகான மாநிறம்'', ''அளவான பேச்சு''. ஆகவே அம்மாவுக்குப் பிடித்திருந்தது. கல்யாணி, சுதாவைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றாள்.



கல்யாணியை, அவன் கணேசனுக்கு மனைவியாக்கி, தன் வீட்டுக்கு வந்தாலும், தன்னை விட அழகானவள் என்று யாரும் சொல்லி விட முடியாது என்று ஒருகணம் அவளுக்குத் தோன்றியது. அந்த நினைப்பே அவளுக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது. கல்யாணியை அந்த நிமிஷத்தில் அவளுக்குப் பிடித்துப் போய் விட்டது.

**த**ண்ணீர் தொட்டியில் நிரம்பி வழிந்து கொண்டே இருந்தது. அம்மா கதவுக்கு வெளியில் இருந்து, சொல்வது கேட்டது.

''ஊ... சுதா. இப்ப என்ன சாயங்காலம் குளியல். ஊம்... சரி.. .சரி. ஆயிட்டியா... குளிச்சுட்டு வா... அண்ணன் வந்துட்டான். அவன் பொண்டாட்டியும் வந்துட்டா... சீக்கிரம் குளிச்சுட்டு வா... கல்யாணிகூட, எங்க சுதான்னு கேட்டா...''

பதிலை எதிர்பாராமல் அம்மா நடந்து போவது, ஓசையாகத் தெரிந்தது.

சுதா, சிரித்துக் கொண்டாள். வாளியில் இருந்து ஒழுகும் நீர், தரையை நனைத்து, அவள் காலையும் நனைத்து, அவள் சேலை முனையையும் நனைத்தது. சேலையைச் சற்றே மேலே இழுத்துக் கொண்டாள். உள் பாவாடை ஓரம் நனைந்து, கறையாகி விடக் கூடாது.

அவளுடைய உள்பாவாடை ஓரம் கூட கறையாகி விடக் கூடாது என்று நினைக்கிற ஒருத்தன் அவளுக்கு இருந்தான். இருந்தான் என்றுதான் அவள் சொல்ல வேண்டும். அப்புறம், திடுமென அவன் கல்யாணம் செய்து கொண்டு போய் விட்டான். கல்யாணங்கள்! இந்தக் கல்யாணங்கள் எல்லாம் ஒழிந்தால் என்ன? என்னத்துக்கு இந்தத் தடபுடல். வீண் செலவு. வரும் போகிற தடியர்களுக்கும் தடிச்சிகளுக்கும் தண்டச் சோறு. அதில் வேறு, காரக் குழம்பில் துளி புளி தூக்கல் என்கிற தொள்ளை கூட! ஆனால், கல்யாணங்கள் வேணும். மண்டபம் நிறைந்து வழிய, தேதி வேறு இல்லாமல் ஆகிறது.

மேலே கருட்டிய சேலையைத் தரையில் விட்டாள். தண்ணீர் அதன் நுனியை நனைத்தது. நனைக்கட்டும். அழுக்குப் படட்டும். உள்பாவாடை நன்றாக அழுக்குப் படட்டும்.

அப்படியே சில நிமிஷங்கள் இருந்தாள். குளிக்காமல், வெளியே போனால், அம்மா என்ன சொல்வாள்? குளிக்கவும் பிடிக்கவில்லை.

முகத்தை சோப் போட்டுக் கழுவிக் கொண்டாள். ஜாக்கெட் கைகளுக்குக் கீழேயும் நனைத்துத் துடைத்துக் கொண்டாள். லேசாகத் தலையில் தண்ணீரைத் தெளித்து விட்டுக் கொண்டு, வெளியே வந்தாள். கூடத்தில், கணேசனும், அவனுக்கு எதிராகக் கல்யாணியும் அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்கு இடையில் இருந்த உணவு மேசையில் மிக்ஸரும், இனிப்புகளும் வைக்கப்பட்டிருந்தன. அம்மா, மருமகள் பக்கத்தில் நின்று கொண்டு காப்பி ஆற்றிக் கொண்டிருந்தாள். புது மருமகளைச் சீராட்டுகிறாளாக்கும்.

சுதாவைப் பார்த்ததும், ''ஹலோ சுதா!'' என்றபடி எழுந்தாள், கல்யாணி.

பிரபஞ்சன்

''வாங்க'' என்றாள் இறுக்கமாக. ''இருங்க வந்துட்டேன்'' என்றபடி தன் அறைக்குள் சென்று கதவை அடைத்துக் கொண்டாள், சுதா.

பெண் பார்க்கப் போயிருந்த போது, இருந்த கல்யாணிதானே அவள். திடுமென, எப்படி வந்தது இந்தப் பூரிப்பு. பொரித்து எடுக்கப்பட்ட பூரி மாதிரி, எங்கிருந்து வந்தது இந்த கன்னத்துக் குதூகலம். எல்லாம் மாயமாக இருக்குடி அம்மா. கல்யாணம் ஆகி எத்தனை நாள் ஆகிறது. போன ரெண்டாம் தேதி கல்யாணம். அன்றைக்கு மத்தியானம், சாப்பாடு முடிந்து, கணேசனும், கல்யாணியும் இந்த வீட்டுக்கு வந்திருந்தார்கள். அன்றைக்குச் சாயங்காலமே, மாமனார் ஏற்பாட்டில் இருவரும் ஊட்டிக்குப் புறப்பட்டார்கள். அங்குதான் நிலாவில் தேன் வடிகிறதாமே! வேறு எங்கேயும் வடியாதாமே! அப்புறம், இன்றைக்குத்தான் ஊட்டியில் இருந்து திரும்பல். இன்றைக்குத் தேதி பன்னிரண்டு. ஆக, பத்து நாள் தாம்பத்யம். அதுக்குள்ளாக, இந்தப் பளபளப்பு இப்படி ஏறி இருக்கிறதே, ஆச்சர்யம்தான்.

கல்யாணி, கொட்டைப் பாக்குக் கலரில், ஆந்திரா புடைவை உடுத்தியிருந்தாள். அவளுக்கு அது பாந்தமாகவே இருந்தது. சுதாவிடமும் சற்றேறக் குறைய அது மாதிரி ஒரு புடைவை இருக்கத்தான் செய்தது. அவள், காலையில், குளித்த பிறகுதான் சேலையை மாற்றும் பழக்கம் உடையவள் எனினும், அன்று, இந்த மாலை வேளையிலும் சேலை மாற்ற வேண்டும் என்று தோன்றியது. செய்தாள். தலையை ஒழுங்கு செய்து கொண்டு, லேசாகப் பவுடர் போட்டுக் கொண்டு வெளியே வந்தாள். அதற்குள், கூடத்தில் அமர்ந்திருந்த அவர்கள் இருவரையும் காணோம்.

''எங்கேம்மா, அண்ணனும், அண்ணியும்?''

அம்மா, ஒன்றும் பேசாமல், அண்ணனின் அறையைக் காட்டினாள். வேலை இருப்பது போல சமையல் கட்டுக்குள் நுழைந்து கொண்டாள். சுதாவுக்குச் சமையல் கட்டுக்குள் நுழையப் பிடிக்கவில்லை. அண்ணனின் அறைக்குள் நுழைவதும் இங்கிதமாகப் படவில்லை. ஆகவே தெருவுக்கு வந்து, திண்ணையின் ஓரம் நின்று தெருவை வேடிக்கை பார்த்தாள். தெருவைப் பார்த்த அறைதான் அண்ணனுடையது. அதன் ஜன்னல்கள் எப்போதும் தெருக் காற்றை வாங்கியபடி இருக்கும். அந்த அறையில் இருந்து பார்த்தால், அவள் நிற்கும் இடம் தெரியும். தான் நிற்பதைக் கல்யாணி பார்த்துத் தன்னை அழைப்பாள் என்று சுதா எதிர்பார்த்தாள். அப்படி நேரவில்லை. ஆகவே, அரைக் கண்ணால், ஜன்னலைப் பார்த்தாள். அது மூடியிருந்தது.

குபுக்கென்று ஒரு எரிச்சல் மூண்டது அவளிடம். தெருவில் நிற்கப் பிடிக்கவில்லை. மூன்றாம் வீட்டு அத்தை யாரிடமோ ஏதோ பேசிக் கொண்டிருந்தது தெரிந்தது. அவள் தன்னைப் பற்றித்தான் ஏதானும் பேசுவாளாக இருக்கும். அங்கு நிற்கப் பிடிக்கவில்லை. தன் அறைக்குள் வந்து தாழ்போட்டுக் கொண்டாள்.

அவன் மட்டும் ஒழுங்காக இருந்திருப்பானேயாகில், இந் நேரம் அவளுக்கும் கல்யாணம் ஆகி இருக்கும். அவள் அறையும் தெருவைப் பார்த்துத்தான் இருந்தது. அது கூட அடைக்கப்பட்டிருக்கும், அண்ணனின் அறையைப் போல. மூர்த்தி, இதமாகத்தான் பழகினான். அவளை அங்குலம் அங்குலமாகப் புரிந்து கொண்டவனைப் போலத்தான் தெரிந்தது. அவள் பிறந்த நாளை நினைவில் வைத்திருந்து, முதன் முதலில் வாழ்த்துச் சொன்னவனும் அவன்தான். அவளுக்காகக் கால் கடுக்க நின்றும், நடந்தும் அவளுடன் நேரத்தைச் செலவிட்டவனும் அவன்தான். ஒருநாள் வேலைகளை முடித்து, கடைசி ஆளாக அவள் அலுவலகம் விட்டு வெளிப்படுகையில், வாசல் மாமரத்து இருளில் அவளைச் சரட்டென்று இழுத்து முத்தமிட்டவனும் அவன்தான். அப்புறம், அக்காவும் மாமாவும் ஊரில் இல்லை, பிளாட் காலியாக இருக்கிறது என்று சொல்லி, ஒரு ஞாயிற்றுக்கிழமை பகலை, சாத்திய கதவுக்குள் அவளுடன் பொழுதைப் பொன் செய்தவனும் அவன்தான். அப்புறம், வேறு கல்யாணம் பண்ணிக் கொண்டு மாற்றல் வாங்கிக் கொண்டு சென்று விட்டவனும் அவன்தான்.

அறைக்குள் அடைபட்டுக் கிடக்கவும் சங்கடமாக இருந்தது. எழுந்து, சமையல் கட்டுக்கு வந்தாள். அங்கு அம்மாவும், கல்யாணியும் இரவு உணவுக்குத் தயார் பண்ணிக் கொண்டிருந்தார்கள். சுதாவைப் பார்த்ததும் அம்மா, ''தோ... சுதா வந்துட்டா... அவ வேலை பண்ணட்டும். நீ என்னத்துக்குக் கையை அழுக்கு பண்ணிக்கறே...'' என்றாள்.

''இருக்கட்டும். கையைக் கழுவுக் கிட்டாப் போச்சு...'' என்றபடி சிரித்தாள் கல்யாணி. அம்மா, பீன்ஸ் தட்டைக் கத்தியோடு சுதாவின் பக்கம் நகர்த்தினாள். கை அழுக்குப் படுமாமே. தன் கைகள் அழுக்குப் படாதா? புதுப் பெண்ணின் கைகள் மட்டும்தான் அழுக்குப்படக் கூடாது போலும்.

''இல்லை. எனக்குக் கொஞ்சம் ஆபீஸ் வேலை பாக்கி இருக்கு,'' என்றாள் சுதா.

''என்னைப் போலத்தானா நீங்களும்? நானும் ஆபீஸ் பைலையெல்லாம், வீட்டுக்கு எடுத்தாந்து மாங்கு மாங்குன்னு 'வொர்க்' பண்ணுவேன். ஆனா, இப்போ, அதெல்லாம் வேணாம்னு எங்க மானேஜரே சொல்லிட்டார். உன் 'அஸ்பெண்ட்' என் மேலே கோவிக்கக்குவார்னு சொன்னார் மானேஜர்.''

கல்யாணியின் பேச்சில், அப்படி என்ன நகைச்சுவை இருக்குமோ, விழுந்து விழுந்து சிரித்தாள் அம்மா. கூடவே கல்யாணியும்.

''சுதா.. ராத்திரி சாப்பிட்டு சினிமாப் போலாம்னு சொல்லியிருக்கார், உங்க அண்ணா. நீங்களும் வாங்களேன். அத்தை. நீங்களும் வரணும். சில்வர் ஸ்டோலன் படமாம்.''

''ஆமா. எனக்கு, இந்த வயசுல அது தான் குறைச்சல். புதுப்பொண்ணு நீ போயேன்.''

சுதா, இயன்றவரை, முகத்தை சௌஜன்யமாக வைத்துக் கொண்டு, ''புதுப் பொண்ணு பார்க்க வேண்டிய படத்தை, நான் பார்க்கலாமா, சொல்லுங்க...'' என்றாள்.

''தியேட்டர்காரங்க ஒண்ணும், புதுசா கல்யாணம் ஆனவங்களுக்கு மட்டும்னு எழுதி வைக்கலையே...''

''அவ என்னத்துக்குக் கல்யாணி, உங்களோட.. நீங்க ஆம்படையான், பொண்டாட்டியாப் போய் வாங்களேன்...''

பொத்துக் கொண்டு வந்தது, சுதாவுக்கு.

''ஆமா... நான் என்னத்துக்கு உங்களோட? நீங்க, புதுப்பொண்ணும் புது மாப்பிள்ளையுமா, போய் வாங்க. நான், ஹீரோ, ஹீரோயினுக்கு இடையில, 'வில்லி'யா என்னத்துக்கு வரணும். உங்க சந்தோஷத்துக்குக் குறுக்காக, பல்லுக்கிடையில சிக்கின எலும்புத் துண்டு மாதிரி?''

''சர்ட்டன்லி நாட்... அப்படியெல்லாம் இல்லை சுதா... நீங்க வரணும்.''

அம்மா, உள்ளே நுழைந்தாள்.

''சுதாவும் உன்னை மாதிரி, புது மாப்பிள்ளை பொண்ணா சினிமாப் பார்க்கணும்னு நினைக்கிறாளோ என்னவோ...? அப்படி எப்பவோ ஆகியிருக்க வேண்டியவதான். என்னவோ, அவளோட போதாத காலம். ஒரு ஓடுகாலியை நம்பி...''

அம்மா சட்டென்று தான் வரம்பு மீறு கிறோமோ என்றெண்ணி, நிறுத்திக் கொண்டாள். சுதா பிடித்துக் கொண்டாள்.

''நம்பி? நம்பி என்ன பண்ணினேங்கறே? அவனோட கெட்டு போயிட்டேன்னு புதுப்பொண்ணுக்குச் சொல்றியாக்கும். ஒரு காரியம் பண்ணேன். ஒரு போஸ்டர் போட்டுடு. 'டிரை கலர்'லே! நான் வேணும்னா காக தர்றேன். சுதா, ஒருத்தனோட கெட்டு, புள்ளை கலைச்சுட்டா... எவனும், இவளைக் கட்டி ஏமாந்து போயிடாதீங்கோன்னு போடு. கீழே இப்படிக்குன்னு போட்டு, நீயும், அந்த மூணாவது வீட்டுக் கிழ முண்டையும் கையெழுத்துப் போடுங்கோ...''

துவைத்த துணி மாதிரி அம்மாவின் முகம், வெலவெலத்தது. அப்புறம் கோணியது. சேலைத் தலைப்பால் முகத்தை மூடிக் கொண்டு அழத் தொடங்கினாள். அழுகைக் கிடையே, ''நான் என்ன தப்பாச் சொல்லிட்டேன்னு இப்படிப் பேசறே, சுதா...'' என்றாள்.

கல்யாணி என்ன பேசுவது என்று புரியாமல், திகைத்தாள். சுதா, தன் அறைக்குள் வந்து ஒடுங்கிக் கொண்டாள். அளவு மீறிப் போனது, தன் அம்மா அல்ல, தான்தான் என்று மனசு, அவளைக் குத்திக் காட்டியது. அவளை அறியாமலேயே அவள் அழுதாள். அவளுக்காகவும், அந்த ஓடுகாலிக்காகவும், அம்மாவுக்காகவும் அவள் அழுதாள். அப்படியே உறங்கியும் போனாள்.



''கட்ன புடைவையோடு என்னுடன் வரத் தயாரா?''

''வர்றேன்! ஆனா ஊர் போய்ச் சேர்ந்ததும் எனக்கு பத்துப் புடைவைகள் வாங்கித் தரணும். சம்மதம்னா சொல்லுங்க!''

- ஞா. ஞானமூர்த்தி.

கதவு தட்டப்படும் சப்தம் கேட்டுக் கதவைத் திறந்தாள். கல்யாணி புறப்பட்டுத் தயாராக நின்றாள். வெற்றிலை போட்டிருப்பாள் போலும். அவள் போட்டிருந்த மணமாவும், சூடி இருந்த மல்லிகையும், மென்றிருந்த வெற்றிலையோடு சேர்ந்து, ஒரு சுகந்தக் கலவை மணம் வீசியது.

''சுதா.. நாங்க சினிமா போய்ட்டு வர்றோம்'' என்றாள் கல்யாணி. சொல்லிக் கொண்டே உள்ளே வந்தாள். அவளுக்கு மட்டும் கேட்பது மாதிரி, ''சுதா... உங்ககிட்ட நான் அப்புறமா பேசணும். சாவகாசமாப் பேசுவோம்... எதையும் ஆத்திக்கிடலாம். ஆறாத புண்ணுன்னு எதுவுமே இல்லை'' என்றாள் மென்மையாக. இதமாக அவள் தோளில் கையை வைத்தாள்.

சுதா, மனசுக்குள் பொங்கினாள்.

அம்மா, சாப்பாடு போடச் சாப்பிட்டாள். நன்றாகத்தான் பண்ணியிருந்

தான். மணத்தக்காளி குழம்பு. வாழைக் காய் பொடிமாஸ். பீன்ஸ் பொரியல். முட்டை ஆம்லட். பசித்தது. நன்றாகவே சாப்பிட்டாள். அம்மா, அவளுக்கு எதிர்நாற்காலியில் அமர்ந்து கொண்டு சொன்னாள்.

''சுதா.. மாமாகிட்டே சொல்லி, மாப்பிள்ளை பார்க்கச் சொல்லட்டுமா? இல்லை. உன் மனசுக்குப் பிடிச்ச மாதிரி யாரேனும் நீயா பார்த்துக்கிறதானாலும், சரி. உன் சந்தோஷம்தாண்டி எங்க சந்தோஷம்...''

அம்மா மீண்டும் அழுதாள். பதில் பேசாமல் எழுந்தாள், சுதா.

சுதா விழித்துக் கொண்டாள். சுவர்க் கடிகாரம், நாலு ஐம்பத்தைந்து எனக் காட்டியது. இவ்வளவு அதிகாலையில் அவள் விழித்துக் கொண்டது இல்லை. முந்தினை நாள் நடந்த நிகழ்ச்சிகள் அவள் நினைவுக்கு வந்தன. குற்ற உணர்வால், அவள் மனம் சுருங்கியது. எழுந்து, தெருக் கதவுக்கு வந்தாள். கதவைத் திறந்து கொண்டு, திண்ணையில் அமர்ந்தாள். காற்று, குளத்துக்குள் மூழ்கி எழுந்துள்ளது போல, சுகமாக வீசியது. தெருவை வெறுமனே வேடிக்கை பார்ப்பது, எப்போதுமே அவளுக்குப் பிடித்த காரியம். மனிதர்கள் இல்லாத பொழுதில், தெருவின் அசலான முகம் தெரியும். மனசை உள்ளுக்குள் செலுத்தித் துருவிப் பார்க்க உகந்த நேரம்.

கடைசியாக அவனைப் பார்க்கிற போது, அவன் அவளிடம் சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. ''சுதா, இதெல்லாம் ரொம்பச் சின்ன விஷயம். உனக்கு நல்ல கணவன் அமைவான். நாம் நண்பர்களாக இருப்போம்.''

என்ன சமத்காரமான பேச்சு. எனக்கு நல்ல கணவன் அமைவானாம். அது எனக்குத் தெரியாதா? இவன் என்ன அதுக்குத் தரகு? சின்ன விஷயமாம். சின்ன விஷயம் தான். காதலிப்பது, மற்றபடி ரொம்பவும் நெருங்குவது எல்லாமே சின்ன விஷயம் தான். வாழ்க்கை என்கிற அகண்டாகாரத்துக்கு முன்னால், இதெல்லாம் சின்ன விஷயம். ஆனால், எந்த முகாந்திரமும் இல்லாமல், நான் பொண்டாட்டியை மாற்றிக் கொள்கிறேன் என்பது சின்ன விஷயம் இல்லையே... பரஸ்பரம் பேசி விலகிக் கொள்வது சின்ன விஷயம். மணவிலக்கும் கூட சின்ன விஷயம்தான். ஆனால், சில ஞாயிற்றுக் கிழமைகள், கதவுக்குப் பிறகு, ஆடைகளை உதிர்த்து விட்டு, அப்புறம், சின்ன விஷயம் என்றால்...? உன் பசிக்குத் திறந்து வைத்திருக்கிற உணவு விடுதி மட்டும்தானா, நான்...?

திண்ணையை ஒட்டிய, மூடிய அறை சன்னல் கதவின் இடுக்கில் இருந்து வெளிச்சம் வழிந்தது. கல்யாணி விழித்துக் கொண்டாளா இருக்கும். இனியும் அங்கு அமர்ந்து இருப்பது சரியில்லை. பால் பாக்கெட்டை எடுத்துக் கொண்டு சமையல் அறைக்குள் நுழைந்தாள். சமையல் வேலைகளை அவள் செய்வதில்லை. இன்று ஏனோ செய்ய வேண்டும் போல் இருந்தது. அம்மாவை அப்படிக் குதறியதற்குப் பதிலாக இதையாவது செய்யலாமே. அடுப்பைத் தூண்டி காப்பி போட்டு முடிக்கும் போது, அம்மா உள்ளே வந்தாள்.

''உனக்கெதுக்கும்மா இந்த வேலையெல்லாம்....''

இரு தம்ளர்களில் காப்பியை ஊற்றினாள்.

''அண்ணனுக்கும் கல்யாணிக்கும் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வரட்டுமா?''

''செய்.''

சுதா, அறைக் கதவை லேசாகத் தட்டி, ''கல்யாணி, காப்பி கொண்டு வந்திருக்கேன். கதவைத் திறங்க...''

நிசப்தம்.

''முதல்லே, நீ போ. காப்பி தேவைப்பட்டா எங்களுக்கு வரத் தெரியும்'' என்றது ஆண் குரல். எத்தனை எரிச்சல்! அது அவளைச் சுட்டது. தகித்தது. எரிந்தது. அவமானத்தால் குறுகிப் போனாள். அது கல்யாணிக்கு முன் நடந்ததால், சுதாவுக்குக் கல்யாணி மேல் எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

அவள் ஆபீசுக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கையில், கதவை மெல்லத் திறந்து கொண்டு அறைக்குள் நுழைந்தாள் கல்யாணி. அதைக் கவனிக்காதவள் போல, சேலைக்குப் பின் போட்டுக் கொண்டிருந்தாள் சுதா.

''சாரி, சுதா...''

''என்னத்துக்கு?''

''காலையிலே உங்க அண்ணா அப்படி பேசினதுக்கு...''

''உங்களுக்குக் கிளுகிளுன்னு இருந்திருக்குமே...''

''சேச்சே...''

''மனசுக்குள்ளே சந்தோஷம் அலை அடிக்குமே.''

''என்ன இப்படிப் பேசறீங்க?''

''போதும்... நான் ஒன்றும் குழந்தை இல்லை..''

கல்யாணி அவளைக் கூர்ந்து பார்த்தாள்.

''சுதா... உங்களுக்கு ஏற்பட்டிருக்கிற கஷ்டம் எனக்குத் தெரியும். நீங்க ரொம்பப் புண்பட்டிருக்கீங்க.. எனக்கு...''

''போதும். அதைப் பத்தி நீங்க பேச வேண்டாம். அந்தக் கழுதையைப் பத்தி எனக்கு அக்கறை இல்லை. ஆம்பிளைப்



''மன உளைச்சல், மன வேதனை இதுக்கெல்லாம் ஏதாவது மருந்து கொடுங்க டாக்டர்!''

''நீங்க வேற யாரையாவது பாருங்க. நீங்க சொல்ற வியாதி யெல்லாம் கன்ஸ்யூமர் கோர்ட்டை ஞாபகப்படுத்தி பயமுறுத்துது!''

- வேதபுரி எஸ். ரமேஷ்.

பாங்க அயோக்கியத்தனம்தான் சகிச்சுக்கிட முடியல்லை. நான் ஒன்றும் கல்யாணத் துக்கு அலையலை. ஆம்பிளை வேணும்னு அலையலை. அப்படி இல்லாத பொம் பிளையை, அறைக்குள்ளே இருந்துக்கிட்டு அவமானம் பண்ணறவ இல்லை நான்...''

''எனக்கு அதில சம்பந்தம் இல்லை, சுதா. உங்க அண்ணா பண்ணது தப்புங்கறது தான் என் கருத்தும்.''

எந்த மறுமொழியும் சொல்லாமல், அலுவலகத்துக்குப் புறப்பட்டாள் சுதா. அவளையே உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றாள் கல்யாணி.

**சு**தா, மொட்டை மாடியில் அமர்ந்து, காலைப் பத்திரிகை படித்துக் கொண்டிருந் தாள். அண்மையில், சுதா தனக்கென்று கட்டிக் கொண்ட அறை அது. சாப்பாட்டு நேரத்துக்கு உணவு. அவள் மேசைக்கு வந்து விடும். மாதம்தோறும் அம்மாவுக்குச் சம் பளப் பணத்தில் ஒரு பகுதியை அதற் கென்று வழங்கினாள், சுதா. அம்மா வோடும் கூட, ''உம்... சரி... பார்ப்போம்... யோசிக்கிறேன்'' என்கிற சில வார்த்தை களில் அவள் உரையாடல் முடிந்து விடு கிறது. அண்ணனோடும், கல்யாணியோடும் அவள் பேச்சு இல்லாமலே போய் விட்டது. அவளுக்கு இதில் வருத்தம் இல்லை. மேலும், சந்தோஷம் கூட ஏற்பட்டது. இந்த வேண்டி இருக்காத உறவுகளுக்கு எதற்காக அவளுடைய அருமையான நேரத்தைச் செல விட வேண்டும்?

பின்னால் அரவம் எழத் திரும்பிப் பார்த்தாள். அம்மா வந்து, அவள் எதிரில், தரையில் அமர்ந்தாள்.

''ஒரு நாற்காலியை எடுத்துப் போட்டு, உட்காரேன்.''

''பரவாயில்லை.''

''உம்...?''

''அண்ணன் இன்னிக்குச் சாயங்காலம் புறப்படறானாம்மா...''

''எங்கே?''

''துபாய்க்கு.''

''ஓ!''

''வர்றதுக்கு மூணு வருஷம் ஆகு மாம்.''

''ஓகோ.''

''கல்யாணியை அவ வீட்டுக்கு அழைச் சுக்கிறாங்க... தனியா என்னத்துக்கு இங்க இருக்கணும். அப்பா அம்மாவோட இருந்தா, அவளுக்குச் சௌகர்யமா இருக் கும்னு சொல்றாங்க...''

''கல்யாணி என்னிக்குப் போறாங்க?''

''நாளைக்கு.''

''சரி.''

''சுதா. மனஸ்தாபம் இருக்கட்டும். அவங்க புறப்படற நேரத்தில, வந்து வழி யனுப்பி வைக்கணும், நீ.''

''பார்ப்போம்.''

சுதா, பத்திரிகையில் கவனம் செலுத்தத் தொடங்கியவுடன், அம்மா எழுந்து அகன் றாள்.

**அ**ண்ணன் புறப்படுகையில், சுதா, அவனுக்கு விடைகொடுக்க வரத்தான் செய் தாள்.

''சாரி. சுதா. நான் தப்புச் செஞ்சது உண் மைதான். மனசுல வச்சுக்காதே'' என்று அவன் சொன்ன போது, ''பரவாயில்லை'' என்று சொன்னாள் சுதா. அது உண்மை என உணர்ந்தே சொன்னாள்.

மறுநாள், கல்யாணி அவள் அம்மா வோடு புறப்பட்டாள். வயிறு பெரிதாகி, கொஞ்சம் சதை போட்டிருந்தது. அவ ளுக்கு. தளர்ச்சியாக இருந்தாள்.

சுதாவின் அறைக்குள் வந்து சொல்லிக் கொண்டாள்.

''போய்ட்டு வர்றேன், சுதா. அவர் திரும்ப மூணுவருஷம் ஆகுமாம். நான் ஏதா வது உங்கள் மனசைப் புண்படுத்தி இருந்தா என்னை மன்னிக்கணும். உங்க மேலே எனக்கு எப்போதும் மரியாதைதான். நீங்க என்னைத் தப்பா புரிஞ்சுக்கிட்டீங்க... அதை எப்படி மாத்தறதுன்னு எனக்குத் தெரி யல்லை. நான் எங்க அம்மா வீட்டுக்குப் போய்த்தான் ஆகணும்னு இல்லே. ஆனா, இந்த வீட்டுல நீங்களே என்னைப் பகைச் சுட்டா எனக்கு யார் துணை? அதனாலதான் போறேன்.''

கல்யாணியின் கண்களில் நீர் வழிந்தது. தனிமைப்பட்ட அவளை நினைக்கையில், சுதாவுக்கு இரக்கம் தோன்றியது.

''சாரி! கல்யாணி. அனாவசியமா உங்களை நான் கோவிச்சுக்கிட்டேன். என் கோபம், உங்க மேல இல்லை. அது திசை மாறிடுச்சு.''

கல்யாணியின் கைகளைப் பற்றிக் கொண்டாள், சுதா.



* தூங்கானை மாடம்

# தேவலோகத்துக்கே பூக் கொடுத்த ஊர்!

**பா**ரிஜாத மரங்களுக்கு உரியவனான தேவேந்திரனுக்கே ஒரு சமயம் பூஜைக்கு வேண்டிய பூக்கள் கிடைக்கவில்லை. பூக் கொய்து வரப் புறப்பட்ட அரம்பையர்கள், பெண்ணாகடத்தின் பூந்தோட்டச் சிறப்பைப் பற்றிக் கேள்விப்பட்டு, வருகிறார்கள். இங்கே பரமேசுவரனின் ஒளி கண்டு மனம் பறிகொடுத்து, கொய்த மலர்களை அவருக்கே அர்ப்பணித்து நின்று விடுகிறார்கள். தேவ மாதர்களைத் தேடி வந்த காமதேனுவும் பரமனின் அழகில் மயங்கிப் பால் சொரிந்து நின்றுவிடுகிறது. மூன்றாவதாகத் தேடி வந்த ஐராவதம் மட்டும் விலக்கா என்ன? ஐயன் மழை வெயிலில் சிரமப்படப் போகிறானே என்று தன் நான்கு கால்களைத் தூண்களாக்கி, வயிற்றை விதானமாக்கிக் கோவிலாகவே நின்று விடுகிறது! எல்லோரையும் தேடிவந்த இந்திரனும் தன் இந்திர லோக நிலை மறந்து, சிவ யோக நிலைக்கே ஆட்பட்டு விடுகிறான் என்பது தல வரலாறு.

இப்படி பெண், ஆ (காமதேனு), கடம் (ஐராவதம் என்கிற யானை) மூவரும் வழிபட்டுப் பெருமை பெற்ற தலம்தான் வெள்ளாற்றின் கரையில் அமைந்துள்ள பெண்ணாடம்.

கமலமனோராஜன்

இறைவன் திரு நாமம் பிரளயகாலேசுவரர். அம்பிகை ஆமோதனாம்பாள். அழகு தமிழில் இவர்கள் கடர்க் கொழுந்து நாதர், அழகிய காதலியம்மை என வழிபடப்படுகிறார்கள்.

ஊழிவெள்ளம் பெருக்கெடுத்த போது, தம்முடைய நந்திதேவனையே அழைத்து 'நீ சமாளித்துக் கொள்' என்று ஆணையிட்டாராம். பிரளய-கால-ஈசுவரர்! உடனே கிழக்கு முகமாகத் திரும்பி ஆரார்க்க கொண்டு ஊழி



* ஆலய முகப்பு



● தட்சிணாமூர்த்தி



● துர்க்கை

வெள்ளத்தை மட்டுமின்றி, இறைவனை வழிபட வரும் அடியார்களின் பாப வெள்ளத்தையும் பார்வையாலேயே தீர்த்து வைத்தார்.

யானை அரணாக அமைந்தமையால் சிவபிரானுக்குக் கருவறைக் கட்டட வடிவமும் யானை நிற்கும் தோற்றத்திலேயே அமைக்கப்பட்டிருப்பது சிறப்பு. 'தூங்கு ஆனை மாடம்' என்றே இந்த அமைப்பு சிறப்பிக்கப்பட்டிருக்கிறது. 'கஜ பிருஷ்ட விமானம்' என்று வடமொழி வழக்கு.

மற்ற ஆலயங்களின் கருவறைகள் போலல்லாமல் சந்நிதியைத் தவிர இடம் வலம் பின்புறம் மூன்று பக்கங்களிலும் ஜன்னல்கள் அமைந்திருப்பது வித்தியாசமான கட்டட அமைப்பு.

ஈசுவரன் லிங்க வடிவம். வெளிப்புறப் புறை ஒன்றில் அழகொழுகும் தட்சிணாமூர்த்தியின் உருவம். கல்லாலின் கீழ் யோக நிலையில் அருள்பாலிக்க, சனகாதி முனிவர்கள் உபதேசம் கேட்கும் அழகு மிகவும் சிறப்பானது. இடப்புற வெளிச் சுற்றில் மகிஷனின் தலை மீது நின்ற கோலத்தில் அருள் பாலிக்கும் துர்க்கை. வெள்ளிக் கிழமைகளில் சிறப்பு வழிபாடு உண்டு.

கோவிலுக்கு உள்ளேயே இன்னொரு கோவில் அமைந்திருப்பது தனிச் சிறப்பு - அதுவும் மாடக் கோவிலாக உள்ளது. என்ன காரணத்தாலோ கோவிலுக்குள்ளே வந்து சுடர்க் கொழுந்து நாதரைத் தரிசித்து அருள் பெற முடியாமலிருந்த கணிகையர் குலப் பெண் ஒருத்திக்காகக் கடைவீதியிலிருந்தே அவள் தரிசிக்கும் விதமாக உயர்ந்து நின்றாராம். அப்படி நிற்கும் இடத்தைக் கட்டு மலைக் கோவில் என்கிறார்கள்.

சௌந்தரவல்லி என்ற அந்தப் பெண்ணுக்குக் காட்சியளித்தமையால் சௌந்தரேசுவரர் என்கிற திருநாமம் இவருக்கு. இந்தச் சிவலிங்கக் கோவிலின் கோபுரத்தில் திருமால் உருவங்களும் உண்டு.

இத்தலத்தில் விநாயகர் 'வினை தீர்த்து' வைக்கிறவர். பெருமாளுக்கே சாபவிமோசனம் தந்தவராம் இந்த விநாயகர். ஆவணி மாதம் சதுர்த்தி விழாச் சிறப்புக்கு உரிய இவருக்கு நூற்றியெட்டு தீபங்கள் போட்டு அன்பர்கள் குறை தீர்த்துக் கொள்கிறார்கள்.

அழகிய காதலியம்மைக்குத் தனியே சந்நிதி, இருபுறமும் துவார பாலகியரோடு! அமைதி தவழும் இந்த அம்பிகை பாசாங்குச பாணியாய் அருள்பாலித்து நிற்கிறாள். கடந்தைவாழ் மகளிர்க்கெல்லாம் தலைவியாக விளங்குகிறவள் என்கிற பொருளில் திருக்கடந்தை நாயகி எனவும் வழிபடப் படுகிற தேவி இவள்.

'சிவஞான போதம்' இயற்றிய மெய்கண்டதேவர், மறைஞான சம்பந்தர், கலிக்கம்பநாயனார் போன்ற பெருமக்கள் அவதரித்த தலம் பெண்ணாகடம். தேவாரப் பாடல்களில் திருஞான சம்பந்தரும், திரு நாவுக்கரசரும் இந்தத் தூங்கானை மாடத்து இறைவனைப் பாடிப் பரவியிருக்கிறார்கள்.

ஒரு காலத்தில் சிறப்பான மலர் வனமாக விளங்கிப் புட்பவனம், புட்பாரண்யம் என்றெல்லாம் புகழ் பெற்றிருந்த இந்தக் கோவில் நந்தவனம் மிகவும் சீர்பட வேண்டிய நிலையிலேயே உள்ளது. கபிலை நாதனுக்குக் காமதேனு அபிஷேகமாகப் பால் சொரிந்த போது உண்டானதாகச் சொல்லப் படும் கபிலை தீர்த்தம் இங்குள்ளது. தெப்பத் திருவிழா தேர்த் திருவிழா, எல்லாம் ஒரு காலத்தில் மிகச் சிறப்பாய் நடைபெற்ற தலம் இது. இப்போது தெப்பக் குளம் சிதிலமடைந்துள்ளது. தண்ணீர்ப் பற்றாக்குறை வேறு. சீரமைத்துத் தெப்பம் விட முயற்சி மேற்கொண்டிருக்கிறார்கள். வேலைப் பாடான மூன்று திருத்தேர்களில் ஒன்று நீக்கிரையாகிவிட்டது. அதையும் செப்பனிட எண்ணியிருக்கிறார்களாம்.

மற்ற இரண்டு தேர்கள், சித்திரை மாதம் நடை பெறும் பிரும்மோத்சவத்தின் போது ஓடுகின்றன. தேரோட்டும் நாளைய செலவு முழுவதையும் இங்குள்ள அருணா சர்க்கரை ஆலை ஏற்கிறது. திருக்கார்த்திகை, ஆருத்ரா தரிசனம், நவராத்திரி, ஐப்பசி அன்னாபிஷேகம் என்று உபயதாரர்கள் நடத்தும் விழாச் சிறப்புக்களும் உண்டு.

தென்னாற்காடு மாவட்டத்தின் வளமான 'பச்சைப்பசேல்' நிலப்பகுதியில் ஆன்மிகப் பயிருக்கும் உரமூட்டியிருக்கிறார்கள் என்பதற்குச் சிறப்பான எடுத்துக்காட்டு இந்தப் பெண்ணாகடம் திருக்கோவில்கள்!

படங்கள் : சுப்ர. பாலன்

அன்று குதிரைப் பந்தயத்திற்கு வந்திருந்த எல்லோருடைய கண்களும் அந்தக் குறிப்பிட்ட ஜாக்கியின் மேலேயே மொய்த்துக் கொண்டிருந்தன.

சென்ற மாதம் கிண்டியில் நடந்த 'கிளாசிக் சௌத் இண்டியன் டெர்பி'யில் கலந்து கொள்வதற்காக வந்திருந்த முப்பத்தைந்து ஜாக்கிகளில், அந்தக் குறிப்பிட்ட ஜாக்கியிடம் மட்டும் அப்படியென்ன ஒரு கவர்ச்சி?

இம்ரான்கான் என்னும் அந்த ஜாக்கிக்குப் பதினான்கு வயதுதான் ஆகிறது என்பதே அந்தக் கவர்ச்சி. ஆமாம், இந்தியாவிலேயே மிகக் குறைந்த வயதுடைய ஜாக்கி இம்ரான்கான்தான்!

இத்தனை சிறு வயதில், அன்றைய டெர்பிக்கான முப்பத் தைந்து ஜாக்கிகளில் மூன்றாவது இடம் பெற்றிருந்தான் இம்ரான். இது எப்படி இந்தச் சிறுவனுக்குச் சாத்தியமானது?

''தனது ஒன்பதாவது வயதிலேயே பந்தயங்களில் கலந்து கொள்ளத் துவங்கிவிட்டான் இம்ரான்...''

# பதினாலு வயதுப் பு



என்கிறார் அவனது தந்தை அமானுல்லா கான்.

''நான் மாத்திரமல்ல; என் அப்பா, எனது சகோதரர்கள் மற்றும் என் மனைவி குடும்பத்தாரும் ஜாக்கிகளாகவோ அல்லது டிரெய்னர்களாகவோ ஏதாவதொரு வகையில் குதிரைகளோடு சம்பந்தப்பட்டவர்கள்தான் என்பதால், குதிரையேற்றம் என்பது இம்ரானின் இரத்தத்திலேயே ஊறிக் கலந்து போய்விட்டது!'' என்று பெருமையுடன் தொடர்கிறார்

# யல்!



அமானுல்லா கான்



பதினாலு வயதுப் புயல்!

அமானுல்லா கான்.

''நான் சென்னையிலுள்ள ஜாக்கிகள் பயிற்சிப் பள்ளியின் முதல்வர் என்பதால், அங்கு இம்ரான் வரும்போதெல்லாம் நானும் குதிரைச் சவாரி பழக வேண்டும் என்று நச்சரிப்பான். அப்போதெல்லாம் அவனுக்கு ஐந்து வயதுதான் என்பதால் சாதாரணமான சிறு குதிரைகளின்மேல் அவனை ஏற்றிச் சவாரி பழகச் செய்தேன். சில காலத்துக்குள்ளாகவே நானும் மற்றவர்களைப் போல் பெரிய பந்தயக் குதிரைகளில்தான் சவாரி செய்ய வேண்டுமென்று அடம்பிடித்தான். நானும் அரை மனத்தோடு சம்மதித்தேன்.

''அப்போது அவனுக்கு வயது ஒன்பது. பெங்களூரில் நடந்த ஜிம்கானா பந்தயத்தில் அவன் கலந்து கொண்டான். பந்தயத்தின் போது, அவன் குதிரையிலிருந்து சரிந்து கீழே சாய்ந்து விட்ட நிலையிலும், சேணத்தைப் பிடித்துக் கொண்டே வந்துவிட்டான். அவன் அந்த நிலையிலும் பயப்பட்டதாகவே தெரியவில்லை. அப்போதுதான் அவனுக்குக் குதிரையேற்றத்தில் இருக்கும் ஆர்வத்தை நான் உண்மையிலேயே முழுமையாகப் புரிந்து கொண்டேன். அவனை மனப்பூர்வமாக நான் ஊக்குவிக்கவும் ஆரம்பித்தேன்!''

இதுவரையில் இம்ரான் ஜெயித்த பந்தயங்கள் பதினேழு. மொத்தம் நாற்பது பந்தயங்களில் ஜெயித்து விட்டால் இம்ரானும் சீனியர் ஜாக்கியாகி விடலாம்.

''ஜாக்கிகளுடைய எடையும் குதிரைப் பந்தயங்களில் ஒரு முக்கியமான விஷயமாகவும் தகுதியாகவும் சொல்லப்படுகிறதே?''

''ஆமாம். முடிந்தவரை ஜாக்கிகள் எடை குறைவாக இருப்பதுதான் அவர்களின் முக்கிய தகுதி. இப்போது இம்ரானின் எடை நாற்பது கிலோ. சிறு

வயது என்பதால், இவன் வளர வளர இவனது எடையும் இயற்கையாகக் கூடத்தானே செய்யும்! அப்படி இவன் கூடுதல் எடையுடன் ஜாக்கியாக இருக்க வேண்டுமானால், இவன் வெற்றி பெறும் பந்தயங்களும் அதிகரித்துக் கொண்டே வரவேண்டும். அதாவது, ஒரு ஜாக்கியின் பந்தய வெற்றிகளின் எண்ணிக்கையைப் பொறுத்து, அந்த ஜாக்கிக்குப் போனஸ் மாதிரி, எடை கூடுதலாக இருக்கும் சலுகைகள் தரப்படும்.

''இருப்பினும் இம்ரான் அதிக உயரம் வளரும்போது எடையும் அதிகரிக்கும் என்பதால், அவனது உயரத்தைக் கூடச் செய்யாமல் இருப்பதற்கான உடற்பயிற்சிகளைச் செய்ய வைத்துக் கொண்டிருக்கிறேன்!'' என்கிறார் ஒன்பதாம் வகுப்பு மாணவனான இம்ரானுடைய தந்தை.

''சில குதிரைப் பந்தயங்களில் ஜாக்கிகளுக்கு லஞ்சம் கொடுத்து, ஜெயிக்க வேண்டிய குதிரைகள் கூட ஜெயிக்காமல் செய்கிறார்களாமே?'' என்று அமானுல்லாவிடம் கேட்டபோது, ''ஆமாம். அப்படி நடப்பதும் உண்டுதான். ஆனால் அது நிரூபணமாகிறபோது, சம்பந்தப்பட்ட ஜாக்கிகளின் லைசென்ஸ்களை நாங்கள் உடனடியாக ரத்து செய்து விடுகிறோம்!'' என்கிறார், அந்த மாதிரியான தவறுகளை விசாரிக்கும் குழுவில் ஓர் உறுப்பினராகவும் இருக்கும் அமானுல்லா.

''கடைசியாக ஒன்று. குதிரைப் பந்தயம் என்பது ஒரு சூதாட்டமில்லையா? அப்படியொரு சூதாட்டத்தில் கலந்து கொள்ள வேண்டியதையே ஒரு தொழிலாகக் கொண்டிருப்பது பற்றி நீங்கள் எப்போதாவது சிந்திப்பதுண்டா?''

''அங்கு வந்து பந்தயத்தில் கலந்து கொள்பவர்களுக்கு அது எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். ஆனால் எங்களைப் பொறுத்தவரை அதை ஒரு 'ஸ்போர்ட்ஸ்' என்கிற அளவில்தான் பார்க்கிறோம். அதிலுள்ள வெற்றி தோல்விகளையும் விளையாட்டுக்களில் பெறும் வெற்றி தோல்விகளாகத்தான் பாவிக்கிறோம்!'' என்கிறார் அமானுல்லா கான்.

**பிரின்ஸ்**

வண்ணப்படமும் படங்களும் : **கோபிநாத்**

**இந்த வயசுல இங்கிலீஷ் கத்துக்கப் போறியான்னு கிண்டல் பண்ணுவாங்களே!**

**எட்டாவது வரை படித்திருக்கிறேன் இங்கிலீஷில் பேசக் கற்றுக்கொள்ள முடியுமா?**

**நான் B.A. படித்திருக்கிறேன். எனக்கு இந்த கோர்ஸ் யூஸ்ஃபுல்லாக இருக்குமா?**

**பயிற்சிக்காக அதிக நேரம் செலவிட வேண்டியிருக்குமா?**

**நீங்கள் கேட்க விரும்பும் கேள்விகள்**

**தபால் மூலம் இங்கிலீஷ் கற்றுக்கொள்ள முடியுமா?**

**பயிற்சிக் கட்டணம் அதிகமாக இருக்குமோ!**

# விவேகானந்தாவின் விளக்கமான பதில்கள் இதோ!

- **வி**வேகானந்தாவின் தபால்முறை ஆங்கிலப் பயிற்சி அடிப்படை — இலக்கணம் — உரையாடற் பயிற்சி — என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. தமிழ் எழுத, படிக்கத்தெரிந்தவர்கள் தங்களது கல்வித் தகுதிக்கேற்பத் தேவையான பிரிவைத் தேர்ந்தெடுத்துப் பயிற்சி பெறலாம்.

- பாடங்கள் அனைத்தும் இனிய தமிழ் விளக்கங்களுடன் மிகச் சுலபமாகப் புரிந்து கொள்ளும் வகையில் அமைக்கப் பட்டுள்ளன.

- பயிற்சி பெறுவோர், பாடங்களை எந்த அளவுக்குப் புரிந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அறியப் பாடங்களுடன் பயிற்சி ஏடுகள் (Response Sheets) இணைக்கப் பட்டுள்ளன. இவைகளைத் திருத்தி அனுப்பும் பணியினை நமது கல்வி நிலைய ஆசிரியர் குழு மேற்கொண்டுள்ளது.

- தபால்முறைப் பயிற்சியாயிற்றே என்ற தயக்கம் வேண்டாம். பயிற்சி பெறும் மாணவர்களை நேரில் சந்தித்து விளக்க மளிக்க ஒவ்வொரு மாதமும், ஒவ்வொரு ஊரில் நேர்முகத் தொடர்பு வகுப்புகள் (Contact Seminar) நடத்தப்படுகின்றன.

- இரண்டு லட்சத்து ஐம்பதாயிரத்திற்கும் மேற்பட்டவர்கள் சேர்ந்து, பயனடைந்துள்ள ஒப்பற்ற பயிற்சி முறை இது!

- வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தபால் மூலம் மிகக் குறைந்த கட்டணத்தில் நீங்களும் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம். பயிற்சிக்காக தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும்!

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

அதுசரி, 'இப்பயிற்சியில் சேருவது எப்படி, எப்பொழுது சேரவேண்டும்' என்று கேட்கிறீர்களா? முதலில் ஒரு போஸ்ட்கார்டில் உங்களது முகவரியைத் தெளிவாக எழுதி எங்களுக்கு அனுப்புங்கள். பயிற்சி பற்றிய விபரங்களையும், விண்ணப்ப மனுவையும் அனுப்பிவைக்கிறோம். பிறகு உங்களது வசதிப்படி எப்பொழுது வேண்டுமானாலும் பயிற்சியினைத் தொடங்கலாம்.




**விவேகானந்தா**
**கல்வி நிலையம்**

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.

# தியாக பூமி



'அடாடா! நாம் மீனாக்ஷி ஆஸ்பத்திரிக்கு ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்ததை ஏன் விளம்பரப் படுத்தினோம்? அநாமதேயமாகக் கொடுத்திருக்கக் கூடாதா?' என்று அடிக்கடி அவள் எண்ணமிட்டாள்.

## 36. 'ஸ்ரீமதி சாருமதி தேவி'

''வலது கையால் கொடுப்பது இடது கைக்குத் தெரியாதபடி கொடுக்க வேண்டும்'' என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள் அல்லவா? இது எவ்வளவு அருமையான ஆப்த வாக்கியம் என்பதை உமாராணி வெகு சீக்கிரத்தில் தெரிந்து கொண்டாள். புகழ்ச்சிக்கு ஆசைப்பட்டுத் தர்மம் செய்வதில் பலன் குறைவு என்பது தான் மேற்படி வாக்கியத்தின் உண்மைக் கருத்து. ஆனால், வேறொரு விதத்திலும் அது மிகவும் உபயோகமான உபதேசமாகும். இந்த நாளில் ஒருவர் செய்யும் தர்மம் பிரசித்தியாகி விட்டால் அதைக் காட்டிலும் அவருக்கு உபத்திரவம் உண்டாக்கக்கூடியது வேறொன்றுமில்லை. அப்புறம், அவருக்கு மனநிம்மதி என்பதே இல்லாமற் போய் விடுகிறது. இந்த ஏழைத் தேசத்தில் தர்மத்தை எதிர்பார்க்கும் ஸ்தாபனங்களும், காரியங்களும் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றை நடத்துவோரெல்லாம் மேற்படி தர்மப் பிரபுவைத் தேடி வருகின்றனர்.

'இவர்தான் இந்தப் பெரிய தர்மத்தைச் செய்தாரே; வேறு தர்மங்களுக்கு வேறு மனுஷர்களைத் தேடிப் போவோம்' என்று யாரும் நினைப்பதில்லை. ரயிலில் ஏற்கெனவே கூட்டமாயுள்ள வண்டியிலேயே இன்னும் கூட்டமாக ஜனங்கள் ஏறுவதைப் பார்த்திருக்கிறோமல்லவா? அந்த மாதிரி ஒரு நல்ல காரியத்துக்குப் பணம் கொடுத்தவரிடமேதான் மற்றவர்களும் வருகிறார்கள். உண்மையான தர்மத்தை நடத்துவோரைத் தவிர, போலி மனிதர்களும், மோசக்காரர்களும் வருகிறார்கள். வந்து அவருடைய பிராணனை வாங்கி விடுகிறார்கள். அந்தத் தர்மப் பிரபு இல்லையென்று சொன்னாலோ வருகிறவர்களுக்குக் கோபம் பொங்குகிறது. ''ஒருநாளும் கொடுக்காத மகாலக்ஷ்மிதான் இன்றைக்கும் இல்லை என்று சொல்லி விட்டாள். தினமும் கொடுக்கிற மூதேவி, உனக்கென்ன வந்தது?'' என்ற கொள்கையின்படி, தர்மம் செய்தவர்களுக்கு முடிவில் எப்போதும் வசவுதான் கிடைக்கிறது.

உமாராணியின் அநுபவமும் இந்த மாதிரிதான் இருந்தது. 'அடாடா! நாம் மீனாக்ஷி ஆஸ்பத்திரிக்கு ஐந்து லட்சம் ரூபாய் கொடுத்ததை ஏன் விளம்பரப்படுத்தினோம்? அநாமதேயமாகக் கொடுத்திருக்கக் கூடாதா?' என்று அடிக்கடி அவள் எண்ணமிட்டாள்.

சென்னையில் எவ்வளவு தர்ம ஸ்தாபனங்கள், பொதுநலக் கழகங்கள் உண்டோ அவ்வளவிலிருந்தும் நன்கொடை கோரி அவளுக்குக் கடிதங்கள் வந்தன. ஒரு நகரத்தில் இவ்வளவு அநாதாசிரமங்களும், இலவசக் கல்வி ஸ்தாபனங்களும், மாதர் முன்னேற்றக் கழகங்களும், அமெச்சூர் நாடக சபைகளும், சங்கீத சபாக்களும், வாசக சாலைகளும், தமிழ் வளர்ச்சிக் கழகங்களும், ஜீவகாருண்ய சங்கங்களும் இருக்கக் கூடுமென்று உமாராணி கனவிலும் எதிர்பார்க்கவில்லை. தினந்தோறும், புதிய புதிய ஸ்தாபனங்களிலிருந்து அவளுக்குக் கடிதங்கள் வந்து குவிந்தன. திறப்பு விழாக்கள், வருஷபூர்த்திக் கொண்டாட்டங்கள் முதலியவற்றுக்கு அவளுக்கு வந்த அழைப்புக் கடிதங்களுக்கோ அளவில்லை. கடிதங்களை அனுப்பி விட்டு, அந்தந்த ஸ்தாபனங்களின் நிர்வாகிகள் உமாராணியை நேரில் பார்ப்பதற்கும் வந்தார்கள். உண்மையாக வந்தவர்களுடன் போலி மனிதர்களும் வந்தார்கள். சிலர், ஏதாவது ஒரு வியாஜத்தை வைத்துக் கொண்டு உமாராணியுடன் பேசி விட்டு வரலாமென்று வந்தார்கள்.

இம்மாதிரி ஒரு இளம் பெண் - பெரிய பணக்காரி - நவநாகரிகத்தில் சிறந்தவள் - அழகோ சொல்ல வேண்டாம் - ஒரு புன்சிரிப்புக்கு உலகம் மூன்றையும் கொடுக்கலாம் - இப்படிப்பட்டவள் புருஷன் முதலிய தொந்தரவு ஒன்றுமில்லாதவளாய், சுதந்திரமாயிருக்கிறாள் என்றால், அவளைப் பார்ப்பதற்கும் அவளுடன் சிநேகம் செய்து கொள்வதற்கும் இஷ்டப்படுகிறவர்கள் ஒரு பெரிய பட்டணத்தில் எவ்வளவோ பேர் இருப்பார்கள் அல்லவா?

ஆகவே, உமாராணியின் பங்களாவில் எப்போதும் வருகிறவர்களும் போகிறவர்களுமாய் ஜே ஜே என்று இருந்தது.

ஒருநாள் காலை சுமார் பத்து மணி இருக்கும். ஒரு பெரிய மோட்டார் வண்டி வந்து, உமாராணி பங்களாவின் போர்ட்டிக்கோ முகப்பில் நின்றது. வண்டியில் ஒரு பெரிய மனுஷர் இருந்தார். பங்களாவின் வாசல் சேவகன், மோட்டார் வண்டியின் அருகில் வந்ததும், ''அம்மா இருக்காங்களா?'' என்று பெரிய மனுஷர் கேட்டார்.

சேவகன், ''இருக்காங்க; ஆனால், இன்னிக்கு இனிமே யாரையும் பார்க்கிறதில்லைன்னு சொல்லிட்டாங்க. நாளைக்கு வந்தாப் பார்க்கலாம்'' என்றான்.

வந்த பெரிய மனுஷர், ''ஓ! ஐ ஆம் ஸாரி'' என்றார். உடனே, தம்முடைய சட்டைப் பையிலிருந்து பெயர் அச்சிட்ட விஸிட்டிங் கார்டு ஒன்றை எடுத்துச் சேவகனிடம் கொடுத்து, ''இதை அம்மாவிடம் கொடு'' என்றார். பிறகு, மோட்டார் அங்கிருந்து நகர்ந்தது.

அந்தப் பெரிய மனுஷரின் வண்டி வந்து நின்ற அதே சமயத்தில் நாலு பெண் குழந்தைகள் அங்கே வந்தார்கள். அவர்களில் ஒருத்தி சாரு. மோட்டாரில் இருந்தவருக்கும் சேவகனுக்கும் நடந்த பேச்சை அவள் கவனித்துக் கொண்டிருந்தாள். மோட்டார்

நகரத் தொடங்கியதும் சாரு அவசரமாய் ஒரு காகிதத்தை எடுத்து, பென்சிலால் அதில் ஏதோ எழுதினாள்.

சேவகன், "நீங்கள்ளாம் எங்கே வந்தீங்க இங்கே, போங்க!" என்று அதட்டினான்.

சாரு, "நாங்க உமாராணியைப் பார்க்கிறதுக்காக வந்திருக்கோம்" என்றாள்.

சேவகன், "அதெல்லாம் நீங்க பார்க்க முடியாது. போங்கோ!" என்றான்.

சாரு, தன் கையில் வைத்திருந்த காகிதத்தை நீட்டி, "தர்வான்! தர்வான்! இந்தக் காகிதத்தை மாத்திரம் நீ உமாராணியிடம் கொண்டு போய்க் கொடுத்துடு. அவங்க வரச் சொன்னா வர்றோம்; இல்லாட்டாப் போறோம்" என்றாள்.

தர்வான் அந்தக் காகிதத்தைக் கையில் வாங்கிக் கொண்டு, "நீங்க இப்போ போறயளா? இல்லையா? அப்புறம் நாயை அவிழ்த்து விட்டுடுவேன்; கடிச்சுடும்" என்றான்.

"காகிதத்தைக் கொண்டு போய்க் கொடுக்க மாட்டயோ? அப்படின்னா நான் அழுவேன்" என்றாள் சாரு.

உடனே, அழத் தொடங்கி விட்டாள். மற்ற குழந்தைகளும் அவளுடைய கை ஜாடையைப் பார்த்துக் கொண்டு அழத் தொடங்கின.

அப்போது, வீட்டுக்குள்ளே மாடியிலிருந்து, "தர்வான்! அங்கே என்ன கூச்சல்? இங்கே வா!" என்று உமாராணியின் குரல் கேட்டது. தர்வான் அவசரமாக மாடிப் படி மீது ஏறிச் சென்றான்.

அவன் மேல் மாடியிலிருந்து டிராயிங் ரூமுக்குள் போன போது, உமாராணி தன் கண்களில் ததும்பிக் கொண்டிருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

"என்னடா, அது?" என்று கேட்டாள்.

"ஒண்ணுமில்லைங்க. நாலைஞ்சு பெண் குழந்தைங்க வந்து எஜமானியைப் பார்க்கணுங்கறதுங்க" என்றான்.

"அது என்ன கையிலே காகிதம்?"

தர்வானுக்கு அப்போதுதான் கையில் இருந்த காகிதம் ஞாபகம் வந்தது. அதை எஜமானியிடம் கொடுத்தான்.

காகிதத்தில், 'ஸ்ரீமதி சாருமதி தேவி' என்று எழுதியிருந்தது. ஆனால், அது குழந்தை எழுத்தில் எழுதியிருந்தபடியால் உமாராணிக்கு வேடிக்கையாக இருந்தது. முகமலர்ச்சியுடன், "ஸ்ரீமதி-சாருமதி-தேவி! இது யாரப்பா இது?" என்றாள்.

அப்போது, "நான்தான் சாருமதி!" என்று ஒரு குழந்தையின் குரல் கேட்டது. உமா வியப்புடன் தலைநிமிர்ந்து பார்த்தாள். அந்த அறையின் வாசற்படிக்கு அருகில் சாருவும் அவளுடைய தோழிகள் மூவரும் நின்று கொண்டிருந்தார்கள்.



## அருள்வாக்கு

**ப**ரம ஸாத்விக உணவானாலும் கூட அளவு முக்கியம். ஒரு சாப்பாடு, ஒரு பலகாரம் என்றிருப்பது நல்லது. இல்லாவிட்டால் இரண்டு சாப்பாடு, ஒரு டிஃபன் என்று இப்போது பெரும்பாலோர் வைத்துக் கொண்டிருக்கிற மாதிரியே இருந்தாலும் ஒவ்வொரு வேளையும் மிதமாகச் சாப்பிட வேண்டும். வைத்ய சாஸ்த்ரம் தர்ம சாஸ்த்ரம், இரண்டின் பிரகாரமும் அரை வயிற்றுக்குத் தான் சாப்பிடணும். கால் வயிற்றுக்குத் தீர்த்தம் குடிக்கணும். மற்ற கால் வயிறு வாயுவுக்கு விட்டு விடணும். தினசரி இரண்டு சாப்பாடு, ஒரு சிற்றுண்டி என்று வைத்துக் கொண்டாலும், சனிக்கிழமை, குருவாரம், ஸோமவாரம் (மாதா பிதா இல்லாதவரானால்) அமாவாஸ்யை, இன்னம் அவரவர் குல தெய்வத்தைப் பொருத்து ஷஷ்டி, கிருத்திகை, சதுர்த்தி, பிரதோஷம் ஆகிய தினங்களில் ஒருவேளை சாப்பாடு, ஒருவேளை பலகாரம் என்று வைத்துக் கொள்ள

## 37. பசுவும் கன்றும்

அட்வகேட் ஆபத்சகாயமய்யர் தமக்கு இந்த மாதிரி அதிர்ஷ்டம் வரப்போகிறதென்று கனவிலும் எதிர்பார்க்கவில்லை. உமாராணி இப்போது குடியிருந்த பங்களா ஆபத்சகாயமய்யருடைய கட்சிக்காரன் ஒருவனுக்குச் சொந்தமானது. அந்தப் பங்களாவுக்கு வாடகைப் பத்திரம் எழுதுவது சம்பந்தமாக, அவர் உமாராணியைப் பார்த்துப் பேச நேர்ந்தது. அவருடைய நல்ல சுபாவத்தைக் கண்ட உமாராணி, அவரையே தன்னுடைய மற்ற காரியங்களையும் கவனிப்பதற்கு வக்கீலாக அமர்த்திக் கொண்டாள். இதன் காரணமாக ஆபத்சகாயம் அடைந்த பெருமைக்கும் மகிழ்ச்சிக்கும் அளவேயில்லை. 'உலகத்திலே பெண்ணாய்ப் பிறந்தால் உமாராணியைப் போல் பிறக்க வேண்டும்! வக்கீலாயிருந்தால் நம்மைப் போல் கொடுத்து வைத்தவனாயிருக்க வேண்டும், என்பது தற்சமயம் அவருடைய தீர்ந்த அபிப்பிராயமாயிருந்தது. அந்தச் சமயத்தில் அவருக்கு ஹைகோர்ட் ஜட்ஜ் பதவி கிடைப்பதாயிருந்தால் கூடத் தயங்காமல் மறுத்திருப்பார். ஹைகோர்ட் ஜட்ஜ் ஆகி விட்டால், உமாராணிக்கு வக்கீலாயிருக்கும் பாக்கியத்தை இழந்து விட வேண்டுமல்லவா? இதைக் காட்டிலும் அது என்ன ஒசத்தி?

அன்று காலை உமாராணி டெலிபோனில் கூப்பிட்டதன் மேல் ஆபத்சகாயமய்யர் அவளுடைய பங்களாவுக்கு வந்திருந்தார்.

"ஏதாவது தகவல் கிடைத்ததா?" என்று



வேண்டும். ஞாயிற்றுக் கிழமைகளில் அஸ்த மனத்துக்கு அப்புறம் சாப்பிடக் கூடாது. அதனால் மத்யானம் சாப்பிட்டு விட்டு, அஸ்த மனத்துக்கு முந்தியே பலஹாரம் பண்ணி விட வேண்டும். பதினைந்து நாளுக்கு ஒருமுறை 'லங்கனம்' அதாவது முழுப் பட்டினி போட ணும். அதுதான் ஏகாதசி உபவாஸம். மற்ற நாட்களிலும் மித போஜனமே பண்ண வேண்டும்.

பசி என்கிறது ஒரு வியாதி மாதிரி. வியாதிக்கு மருந்து 'டோஸேஜ்' பிரகாரம் தானே சாப்பிடுவோம்? கொஞ்சங் கூட அதிகம் சாப்பிட மாட்டோமல்லவா? அதே மாதிரி பசி என்கிற வியாதிக்குச் சிகித்ஸை யாக மருந்து மாதிரி உணவு உட்கொள்ள வேண்டும். இப்படித்தான் ஆசார்யாள் உப தேசம் பண்ணியிருக்கிறார்: க்ஷுத் வ்யாதிச்ச சிகித்ஸ்யதாம். மேலும், நாக்குக்காகத் தின்னாதே; ருசிருசியான அன்னமாகத் தேடாதே - ஸ்வாத் - வன்னம் நது யாச்யதாம்; விதி வசமாக எது கிடைக்கிறதோ அதிலே த்ருப்தியாயிரு - விதிவசாத் ப்ராப்தேந ஸந்துஷ்யதாம் என்று நல்வழி காட்டுகிறார்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்க ராச்சார்ய சுவாமிகள்.

உமாராணி கேட்டாள்.

''இதுவரையில் ஒன்றும் கிடைக்க வில்லை; நானும் முயற்சி பண்ணிக் கொண்டுதான் இருக்கிறேன்'' என்றார் வக்கீல்.

''உங்ககிட்டச் சொல்லி ஒரு மாதம் போலாகிறதே; இன்னுமா கண்டுபிடிக்க முடியலை?'' என்றாள் உமா.

ஆபத்சகாயமய்யர் புன்னகை புரிந்தார்.

''என் மேலேதான் தப்பு என்று உங்கள் எண்ணம் போல் இருக்கு. சதகோடி சங்கத் திலே மொட்டைத் தாதனைக் கண்டயா என் கிறாப்போலே, சென்னைப் பட்டணத்திலே சம்பு சாஸ்திரி எங்கே இருக்கார் என்று கேட்டால் யாருக்குத் தெரிகிறது? ஏதாவது அடையாளம் சொன்னால் தேவலை'' என்றார்.

இதைக் கேட்ட உமாராணி சற்று நேரம் மௌனமாயிருந்தாள். ஏதோ பழைய ஞாப கங்கள் அவள் உள்ளத்தில் தோன்றிக் கொண் டிருந்ததாக முக பாவத்திலிருந்து தெரிந்தது.

பிறகு, தூக்கத்திலிருந்து விழிப்பவள் போல், திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து, ''என்ன சொன்னீர்கள்?'' என்று கேட் டாள்.

''ஏதாவது அடையாளம் சொன்னால் தேவலை என்றேன்.''

''ஓர் அடையாளங் கூடத்தான் சொல்லி யிருக்கிறேனே? ஆறு, ஏழு வயதிலே அவ ரோட ஒரு குழந்தையிருக்கும்னு சொல்ல லையா?'' என்றாள் உமா.

அதற்கு வக்கீல், ''இந்த அடையாளம் போதுமா, அம்மா? முதலிலே சம்பு சாஸ்தி ரியைக் கண்டுபிடிச்சின்னா, அப்புறம் அவர் கிட்டக் குழந்தை இருக்கான்னு பார்க்க ணும். எனக்குத் தெரிந்த வரையிலே, இதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கு. பத்திரிகை களிலே விளம்பரம் பண்ணிப் பார்க்கலாம்'' என்றார்.

''வக்கீல் ஸார்! இந்த யோசனை எனக்குத் தெரியாதுன்னா நினைக்கண்டேள்; பத்திரிகைகளிலே விளம்பரம் பண்ணக் கூடாது. பண்ணினால், யார் விளம்பரம் பண்ணினா, எதுக்காகப் பண்ணினா என்கிற கேள்வியெல்லாம் கிளம்பும். நான் யாரைத் தேடறேனோ, அவருக்கு, நான் தேடுகிறேன் என்கிற விஷயம் தெரியக் கூடாது. அப்படித் தெரியாமல் அவரைக் கண்டுபிடிக்கிறதுக்கு வழி என்ன என்றுதான் பார்க்க வேணும். இந்தச் சென்னைப் பட்டணத்திலே அவர் இல்லாவிட்டால், வேறு எங்கே இருந்தா லும் கண்டுபிடித்தாக வேணும்'' என்றாள் உமா.

வக்கீல் ஒரு நிமிஷம் சிந்தனையில் ஆழ்ந்து இருந்து விட்டு, ''அம்மா! ஒரு விஷயம் சொல்ல உத்தரவு கொடுத்தால் சொல்லுகிறேன்'' என்றார்.

''பேஷாய்ச் சொல்லுங்கள்'' என்றாள் உமா.

''உங்கள் மனஸிலே ஏதோ துக்கம் இருக்கிறது. என்னத்தையோ நினைத்துக் கொண்டு அடிக்கடி வருத்தப்படுகிறீர்கள். அது என்ன என்கிறதை மனத்தைத் திறந்து என்னிடம் சொன்னால் என்னாலான ஒத் தாசை செய்யக் காத்திருக்கிறேன். என்னிடத் திலே நீங்கள் பூரணமாய் நம்பிக்கை வைக்க லாம். உங்களுக்கு ஏதாவது என்னால் உதவி செய்ய முடிந்தால், அதை என்னுடைய பாக்

கியம் என்று நினைப்பேன்'' என்றார்.

அப்போது உமா, உருக்கத்தினால் கனிந்த குரலில், ''வக்கீல் ஸார்! உங்களைப் பார்த்தவுடனேயே உங்களுடைய நல்ல குணம் எனக்குத் தெரிந்து போய் விட்டது. அதனால்தான் உங்களிடம் இந்த விஷயத்தையே பிரஸ்தாபித்தேன். எனக்கு உங்களிடம் பூரண நம்பிக்கை இருக்கிறது. ஆனால், எந்தெந்த விஷயத்தை எப்போது சொல்ல வேணுமோ, அப்போது சொல்கிறேன். அதுவரையிலே நீங்கள் பொறுமையாயிருந்து, நான் சொல்கிறதை மட்டும் செய்கிறதற்கு முயற்சி செய்தால் போதும். இப்போதைக்குச் சம்பு சாஸ்திரிகளைக் கண்டுபிடிக்கப் பாருங்கள்'' என்றாள்.

''அப்படியே ஆகட்டும். அம்மா! கட்டாயம் என்னால் முடிந்தவரையிலே பார்க்கிறேன்'' என்று சொல்லி விட்டு, வக்கீல் ஆபத்சகாயமய்யர் உமாராணியிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றார்.

அவருக்கு விடைகொடுப்பதற்காக எழுந்த உமா, அவர் போன பிறகு, அந்த விஸ்தாரமான, ஹாலின் ஜன்னல் ஒன்றுக்குச் சமீபமாகச் சென்று வெளியே பார்த்தாள். எங்கும் ஆனந்தமயமாக இருந்தது. பங்களாவைச் சுற்றியிருந்த தோட்டத்தில் விதவிதமான வர்ணப் பூஞ்செடிகள் இளந்தென்றல் காற்றில் அசைந்து ஆடிக் கொண்டிருந்தன. வண்டுகளும் தேனீக்களும் அந்தப் புஷ்பங்களின் மேல் 'ஙொய்' என்று மொய்த்து ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. ஒரு குயில் மாமரத்தில் எங்கேயோ மறைந்து கொண்டு 'கக்கூ', 'கக்கூ' என்று கத்திற்று. குருவிகள் 'ரிகிங்' 'ரிகிங்' என்று கருதி கூட்டிக் கொண்டிருந்தன.

உமாராணியின் பார்வை தற்செயலாகத் தோட்டத்தின் ஒரு பக்கத்தில் நின்ற பசு மாட்டின் மீது விழுந்தது. அந்தப் பசு அப்போது தன்னுடைய மடியில் ஊட்டிக் கொண்டிருந்த கன்றுக் குட்டியை நக்கிக் கொடுத்துக் கொண்டிருந்தது. சாதாரணமாக, தோல் கன்றுக் குட்டியைக் காட்டிப் பால் கறக்கும் பாழும் சென்னைப் பட்டணத்தில் இம் மாதிரி கன்றுக் குட்டிக்குப் பசு ஊட்டும் காட்சியைப் பார்த்தால் யாருக்கும் சந்தோஷம் உண்டாகக்கூடுமல்லவா? ஆனால், எக் காரணத்தினாலோ, உமாராணிக்கு இந்தக் காட்சி துக்கத்தை அளித்தது போல் காணப்பட்டது. ஒரு நொடிப் போதில் அவள் கண்ணில் ஜலம் ததும்பி நின்றது. அவள் அங்கிருந்து திரும்பி வந்து, ஸோபாவில் தலையைக் குப்புறக் கவிழ்த்துக் கொண்டு தேம்பினாள்.

இந்தச் சமயத்தில், அவளுடைய விம்மலின் எதிரொலியே போல் கீழேயிருந்து குழந்தைகளின் அழுகைக் குரல் கேட்கவே, உமா உடனே தன்னுடைய அழுகையை நிறுத்திச் சமாளித்துக் கொண்டு, தர்வானைக் கூப்பிட்டாள்.

(தொடரும்)

# ஞானபீடப் பரிசுபெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி!

**செ**ன்ற ஆண்டுக்கான பாரதிய ஞானபீடப் பரிசு பெற்ற கவிஞர் சீதாகாந்த் மகாபாத்ரா, ஓர் ஐ. ஏ. எஸ். அதிகாரி. ஒரியாக்காரர். கோபிநாத் மொஹாந்தியையும், ஸச்சி ரௌத் ராயையும் தொடர்ந்து, ஞானபீடப் பரிசு பெறும் ஒரியா எழுத்தாளர் இவர்.

நாலு சுவருக்குள் அடைபட்டு, கவிதைகளைக் கிறுக்கித் தள்ளுவதில்லை சீதாகாந்த். கிராமப்புறங்களும், மலையும், நதியும், பச்சைப் பசேல் என்ற வயல்வெளிகளும், நீலவானமும் இவருக்கு நிலைக்களன்கள். எங்கு சென்றாலும் அங்கே வாழும் மக்களைப் பற்றி அறிதலில், அவர்கள் வாழ்க்கை பற்றிய ஆராய்ச்சியில், ஆர்வம் காட்டுபவர் மகாபாத்ரா.

ஒரிசாவில் சுந்தர்கார்லி நகர மாஜிஸ்திரேட் ஆக இருந்த போது சந்தாலி மொழியையும், முன்டாரி மொழியையும் கற்றவர். அந்தப் பகுதியிலுள்ள பழங்குடியினர் இடையே வழங்கும் கவிதைகளை அக்கறையுடன் தொகுத்து, அவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர். இத்தொகுதி இவருக்குப் புகழை வாரிக் கொடுத்தது. பிறகு ஹோமி பாபா ஃபெலோஷிப் உதவியுடன் இப்பழங்குடியினரின் வாழ்க்கை மேம்பாட்டு ஆராய்ச்சியை மேற்கொண்டார் சீதாகாந்த் மகாபாத்ரா.

சித்ரோத்பலா நதியின் கரையோரம், சின்னஞ்சிறு கிராமத்தில், தாம் இளமையில் கேட்ட மகாபாரதக் கதைகள் இவரைப் பெரிதும் பாதித்திருக்கின்றன. கிராமிய, பழங்குடி இலக்கியங்களின் தாக்கமும் இவரது கவிதைகளில் தெரியும்.

நவீன சிந்தனையாளராகவும், கட்டுரையாளராகவும் இருந்தாலும், பாரம்பரியச் சிறப்பும், சரித்திரப் பெருமையும், புராண - இதிகாசப் புலமையும் வாய்ந்தவர், மகாபாத்ரா.

1963 இல் முதல் கவிதைத் தொகுப்பு வெளியிட்ட சீதாகாந்த் மகாபாத்ராவுக்கு, இந்த முப்பது ஆண்டுகளில் முக்கியமான பரிசுகள் அத்தனையும் கிடைத்தாகிவிட்டன. சாகித்ய அகாதமி பரிசு, சோவியத் லேண்ட் - நேரு பரிசு, ஒரிசா சாகித்ய அகாதமி பரிசு, கல்கரல் கவுன்சில் பரிசு, சரளா பரிசு, குமாரன் ஆசான் பரிசு, விஷ்வ சம்மான் பரிசு - ஒன்று பாக்கி இல்லை.

**த**மது பாட்டி காலமானபோது, கிராமத்துக்குப் போனார் சீதாகாந்த். அதைக்கூட ஒரு கவிதையாக எழுதியிருக்கிறார்.



*பாட்டி அலுத்துக் கொள்ளுவாள் :*
*'இந்தக் கிராமத்துக்கு*
*எமன்கூடத் தாமதமாகத்தான் வருவான்!'*
*உள்ளேயிருந்த அறையில்*
*வெள்ளைத் துணியை*
*விலக்கிப் பார்த்தேன்.*
*பாட்டியின் முகமல்ல.*
*சரித்திரத்தின் முகம் தெரிந்தது.*

ஐம்பத்தாறு வயதாகும் சீதாகாந்த் மகாபாத்ரா இப்போது, மத்திய அரசின் கலாசார அமைச்சகத்தின் செயலர்.

- சித்தார்த்

வரைபடம் - நன்றி : மெட்ராபலிஸ் ஆன் சாட்டர்டே

# காதல் 4

ஹேமா வசீகரமாய்ச் சிரித்தாள்.
அருகில் வந்தாள்.
படுக்கை நுனியில் உட்கார்ந்தாள்.
தன் மடியில் மிருதுவாய் என் தலையைத் தாங்கிக் கொண்டாள்.
விரல்கள் என் தலையைக் கோதின.
இதுதான். இது ஒன்றுதான் சொர்க்கம்.
கண்மூடி அந்த விரல்களின் கோதலில் லயித்தேன்.
சட்டென விரல்கள் விலகின.
தலை தடக்கெனப் படுக்கையில் புரண்டது.
கனவு கலைந்து விட்டது.
சட்...
எரிச்சலுடன் கண் திறந்தேன். எதிரில் ஹேமா.
இடுப்பில் கை வைத்துக் கொண்டு அதே வசீகரப் புன்னகையுடன்.
முன் நெற்றியில் கொத்தாக நரை மயிர் விழுந்தது.
கனவில் வந்தது இருபது வயது ஹேமா.
எதிரில் நிற்பது அறுபது வயது.
முதுமையும் அழகுதான்.
சலசலத்து ஓடும் ஓடை போல அடக்கமான அழகுதான்.
''சாருக்கு.. இன்னும் தூக்கம் கலையலையா?''
குரல் தேனாய் இனித்தது.
அவளுக்காய் கை நீட்டினேன்.
கை பற்றித் தூக்கினாள்.
''நல்ல கனவை கலைச்சுட்டம்மா...!''
''கனவுல யார் வந்தது?''
''யாரு... நீதான்... இந்தக் கிழவி இல்லே... முதமுதல்ல பாத்த குட்டிப் பெண் ஹேமாவாக்கும்...!''
''அது கிடக்கட்டும்... சீக்கிரம் எழுந்து வாங்க... ஸ்ரீமுகி வந்திருக்கா...!''
புரியவில்லை.
''ஸ்ரீ மு கி ய ா... என்ன திடீர்னு? லெட்டர் கூட போடலை...!''
படுக்கையில் இருந்து எழுந்தேன்.
''நீங்களே வந்து கேளுங்க...!''
''என்னம்மா.... புதிர் போடறே...?''
பதில் சொல்லாமல் நடந்தாள்.

ஸ்ரீமுகி யோசனையில் இருந்தாள். மெல்ல அவள் தோளைத் தொட்டேன். திரும்பினாள்.
அவள் கண்கள் பொங்கின.
விசும்பினாள்.
''அப்பா... அப்பா!''
உதடு கோணியது.
என் உடம்பு ஒரு உதறு உதறியது.
''என்னடா... என்ன ஆச்சு...?''
விழிநீர் துடைத்தேன்.
மார்பில் சாய்ந்தாள்.
அவள் இன்னும் குழந்தைதான்.
நர்ஸிங்ஹோமில் ஹேமாவை சுவீக் கொண்டு படுத்திருந்த அதே ஒருநாள் குழந்தைதான்.
''அழாம சொல்லுடா...!''
விம்மினாள்.
வார்த்தைகள் வெளிவர மறுத்தன.
ஹேமா அருகில் வந்தாள்.
''என்ன ஹேமு... என்னாச்சு?''
ஸ்ரீமுகியின் கூந்தல் தடவினாள்.
கன்னம் வழித்தாள்.
மெல்ல என்னிடமிருந்து விலக்கினாள்.
''ஸ்ரீ... வெந்நீர் வச்சிருக்கேன்... போய் குளிச்சுட்டு வா.. டிரெயின்ல வந்தது டயர்டா இருக்கும்...!''
ஸ்ரீ என் முகத்தைப் பார்த்தாள்.
பின் அம்மா முகத்தைப் பார்த்தாள்.
மெல்ல நகர்ந்தாள்.
''என்ன... என்ன...?''
என் குரல் பதறியது.
ஹேமா சிரித்தாள்.
''இத்தனை வயசாகியும் இன்னும் அந்த பதற்றம் போகலைப்பா உங்களுக்கு...!''

''என்ன விஷயம்... ஏன் அழறா.. மாப்பிள்ளை ஏதாவது சொல்லிட்டாரா... அவ அழுதா தாங்க முடியலைம்மா...!''

''அதெல்லாம் ஒன்னுமில்லே... அவ என்ன இன்னும் சின்னக் குழந்தையா என்ன? வர்ற ஏப்ரல் இருபது வந்தா நாற்பது வயசு ஆகப் போறது...!''

''ப்ச்... சொல்லுமா...!''

''மத்யமாவுதிதான்...!''

''மத்யாவுக்கு என்ன?''

''அவ யாரோ ஒரு பையனை லவ் பண்றாளாம்...!''

''அட... நம்ப குட்டியா... பேஷ்.. பேஷ்... பையன் யாராம்?''

''ஓஹோ... அவ்வளவு சந்தோஷமா...? ஸ்ரீ இதக் கேட்டா ரொம்ப நொந்து டுவா...?''

''ஏன்...?''

''அவளுக்குத் தன் பொண்ணு காதல் பண்றது பிடிக்கலையாம்...!''

''அட அடசே... நம்ப காதலின் நினைவுச் சின்னம் இந்த மாதிரி நினைக்க

''இப்ப எதுக்குத் தெரியுமா இவ வந்துருக்கா. நம்ப ரெண்டு பேரும்தான் மத்யமாவுக்குப் புத்தி சொல்லித் திருத்தணுமாம்...!''

''போக்கடா... அந்தக் கால காதலர்கள் மூலமா இந்தக் கால காதலர்களைப் பிரிக்கச் சதி பண்றாளா உம் பொண்ணு...?''

''என்னது... அந்தக் கால காதலா... அப்ப இப்போ ஒன்னும் இல்லையா...?''

அவள் முகம் சுருங்கியது.

''தப்பு.. தப்பு...!''

கன்னத்தில் போட்டுக் கொண்டேன்.

''நம்ப குட்டிப் பொண்ணோட ஆசையைத் தடுக்கறதுக்கு நம்மால முடியுமா...?''

''முடியாதுதான்... ஸ்ரீ அழறாளே... போவோம். விஷயம் என்னன்னு பேசிப் பார்ப்போம்...!''

''மாப்பிள்ளை என்ன சொல்



லாமா...?''

''ரொம்ப வழியாதீங்க...!''

''சரி.. துடைச்சுட்டேன்... பையன் யாரு?''

''அவளோட பேங்க்ல ஒர்க் பண்றானாம்.''

''பேரு என்ன?''

''கோபிகிருஷ்ணன்.''

''அதான் ஸ்ரீக்கு கோபம் போலிருக்கு...!''

றார்...?''

''அவரப் பத்தி உங்களுக்குத் தெரியாதா? சரியான ஆள் பிடிச்சீங்கப்பா... எல்லாத்துக்கும் சிரிப்புத்தான்... இதுக்கும் சிரிக்கிறாராம்... அதான் இவளுக்கு ரொம்பக் கோபம்...!''

''அப்ப...!''

''கிளம்ப வேண்டியதுதான்... நமக்கும் இங்க தனியா இருக்க போரடிக்குது...!''

''சரி... பாஸ் சொல்லிட்டா உடனே கிளம்பிட வேண்டியதுதான்...!''

''இந்தக் கிண்டல்தானே வேண் டாம்னு சொல்றேன்...!''

ஹேமாவின் சிரிப்பே அலாதியா னது.

டீக் கோப்பையில் மத்யமாவின் விரல்கள் தாளமிட்டுக் கொண்டிருந் தன.

''சொல்லுங்க பாட்டி... அம்மா வந்து அழுதாங்களா... என்னை நீங்க கூண்டிலேற்றி விசாரிக்கப் போறீங் களா...?''

ஹேமா சிரித்தாள்.

''பரவால்லையே... குழந்தைன்னு நினைச்சுட்டு இருந்தேன்... நல்லாப் பேசறியே...!''

''லவ் பண்றது தப்புன்னு நீங்களும் சொல்லப் போறீங்களா...?''

''காதல் தப்புன்னு சொல்லலை கண்ணம்மா... ஆனா தப்பான ஆளைக் காதலிச்சுடக் கூடாதில்லே...!''

''பிரிஜுடிஸ்... கிருஷ்ணாவைப் பத்தி ஒண்ணுமே தெரியாம... இது மாதிரி எப்படிச் சொல்லலாம்...!''

''பாட்டி சொல்றது உனக்குப் புரி யலை மத்யமா... அவரத் தப்பான ஆள்னு சொல்லலை. உனக்கு பிற் காலத்துல தப்பா பட்டுடக் கூடாது... அதான் சொல்றா...!''

''தாத்தா... நீங்க சொல்றது புரி யலை...!''

''நாஞ் சொல்றேன்... நான் உங்க காதலை எதிர்க்கலை...!''

''அம்மாவுக்குப் பிடிக்க லையே...!''

''காதல்னா அம்மாவும், அப்பா வும் எதிர்க்கணும்கிறது மரபு...!''

''அப்பா ஒத்துக்குவார்... அம்மா தான்...!''

''அத விடு... இது உன் வாழ்க்கை... உன்னோட தீர்மானம், நம்பிக்கைதான் முக்கியம். இந்த விஷயத்துல உன்னை விட சிறந்த ஜட்ஜ் வேறு யாரும் இருக்க முடியாது...!''

''கிருஷ்ணாகிட்ட நீங்க ரெண்டு பேரும் பேசிப் பாக்குறீங்களா...?''

அவன் பெயர் சொல்லும் போதெல் லாம் அவள் கண்கள் பளபளத்தன.

இதுதான் காதல்.

எத்தனை வருடங்கள் மாறினாலும் காதலின் அடையாளங்கள் மட்டும் மாறுவதேயில்லை.

''வேண்டாம்... நான் அவனை இண்டர்வியூ பண்ணி உங்க காதலைக் கொச்சைப் படுத்த விரும்ப வில்லை...!''

''தாங்க்யூ பாட்டி...!''

''ஆனா... உன் அம்மா... அவ ஒரு பைய னைத் தேர்ந்தெடுத்து உனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கணும்னு ஆசைப்பட றாளே...!''

''எனக்கு இந்த சிஸ்டத்துல கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லே...!''

''எந்த சிஸ்டத்துல...?''

''இந்த அரேன்ஜ்டு மேரேஜ் சிஸ்டத் துல... கும்பல் கும்பலா வந்து என்னைப் பாத்து அசட்டுக் கேள்வி கேட்டு... வியா பாரம் பேசி... நல்ல விலைக்குப் பேசி... எவ்வளவு ஆபாசமா இருக்கு... மனசைத் தெரிஞ்சுக்காம முதல்ல உடம்பைத் தெரிஞ் சுக்கற வக்ரம்... எனக்குச் சுத்தமாப் பிடிக் கலை...!''

மத்யமா நீளமாகப் பேசினாள்.

''ஓஹோ... நான் என்னமோ நினைச் சேன். அந்தப் பையன் மேலே பிரியம் வச்சுத் தான் இப்படி ஆனதுன்னு நினைச்சேன். ஆனா இப்பத்தான் புரியுது. இந்த அரேன்ஜ்டு மேரேஜ் சிஸ்டத்துல உள்ள குரூரத்திலிருந்து தப்பிக்கத்தான் இந்த காதல் என்கிற மாற்றுப் பாதையைத் தேர்ந்தெடுத் தியா...!''

கடுமையாகவே கேட்டேன்.

மத்யமா நகர்ந்து வந்தாள்.

என் கைகளைப் பற்றிக் கொண்டாள்.

''ப்ளீஸ்... ப்ளீஸ்... அப்படிச் சொல்லா தீங்க... ஐ லவ் ஹிம் ஸோ மச்...!''

அவள் கண்களில் நீர் துளிர்த்தது.

''ச்சீ... என்ன பேச்சு இது... குழந்தை யை மிரட்டாதீங்க... உங்க புத்திசாலித்தனத் தைக் காட்டற நேரம் இது இல்லே...!''

ஹேமா பரிந்து பேசினாள்.

''ஒரு நிமிஷம்...!'' மத்யமா விலகிப் போனாள்.

வரும் போது அவள் கையில் ஏதோ வைத்திருந்தாள்.

இள மஞ்சள் நிற அட்டை.

பச்சை மசியில் எழுத்துக்கள்.

***கண்மணி!***

***எதார்த்தத்தில்***

***காதல் கூட***

***ரோஜாப் பூதான்,***

***உறவு முட்கள்***

***சூழ்ந்திருப்பதால்.***

***தம்பு.***

***நம்மால் முடியும்!***

***ரத்தக் கீறலின்றிக்***

***காதல் பூ பறிக்கலாம்.***

''காதலிக்கிறேன்னு சொல்லலை. காத லிக்கிறயான்னு கேக்கலை. நாம் ஜெயிப் போம்னு சொன்ன தன்னம்பிக்கையில் தான் தாத்தா கிருஷ்ணாகிட்ட நான் மயங்கி னேன்...!''

ஹேமாவைப் பார்த்தேன்.

தலையசைத்தாள்.

''வாழ்த்துக்கள் மத்யமா... உங்க கல்யா ணம் என் பொறுப்பு...!''

மத்யமா துள்ளினாள்.

● தேள்கள் ஜாடியில் தொடர்ந்து ஆறு மாதம் வரை உணவு இல்லாமலேயே வாழக்கூடியவை! பிரெஞ்சு நிபுணர் குழுவர் சோதனை நடத்தியபொழுது ஒரு தேள் 420 நாட்கள் எவ்வித உணவும் இல்லாமலேயே வாழ்ந்தது! சுமார் 40 கோடி ஆண்டுகளாக உருவத்தில் எவ்வித மாற்றமும் இல்லாமல் தேள்கள் வாழ்ந்து வருகின்றன.

- வளையாபதி




இந்தியாவிலேயே தென்பகுதியில் தான் மக்கள் அதிகமாக சேமிக்கும் பழக்கம் பெற்றுள்ளனர். தந்தை தன் மகனின் கல்விக்காகவும், மகள் திருமணத்திற்காகவும் சேமிக்கிறார். தாய் தன் குடும்பத்தில் ஏற்படும் எதிர்பாராத செலவினங்களை சமாளிக்க சேமிக்கிறாள். இப்படி ஒவ்வொருவரும் பல காரணங்களுக்காக பல முறைகளில் சேமிக்கின்றார்கள். இப்படி வங்கியிலோ, நிதி நிறுவனத்திலோ, சிட்டின் மூலமோ அல்லது வீட்டில் உள்ள உண்டியல் மூலமோ நீங்கள் சேமித்து பயன்பெற்ற உங்கள் வாழ்க்கையின் சுவையான நிகழ்ச்சியை எங்களுக்கு எழுதுங்கள்.

உங்கள்
"சேமிப்பு மந்திரம்"
200 வார்த்தைகளுக்குள் இருக்கட்டும். உங்கள் புகைப்படம் மற்றும் முழு விலாசத்துடன் கருத்துக்களை அனுப்பவேண்டிய முகவரி.

என்சேமிப்பு மந்திரம்
சேரன் சிட் பண்ட்ஸ் (பி) லிட்.,
சேரன் டவர்ஸ்,
78, அரசு கலைக்கல்லூரி சாலை,
கோவை - 641 018.




என்

சேரன் சிட்பண்ட்ஸ்
வழங்கும்

# சேமிப்பு மந்திரம்
## பரிசுப் போட்டி

முதல் பரிசு - வீடியோகான் வாஷிங் மெஷின்
இரண்டாம் பரிசு - சுமீத் மிக்ஸி
மூன்றாம் பரிசு - டைட்டான் கைகடிகாரம்
மற்றும் 25 ஆறுதல் பரிசாக அழகிய சுவர்கடிகாரம்

★ நிறுவனத்தின் முடிவே இறுதியானது
★ தேர்வு பெறாத கட்டுரைகள் திருப்பி அனுப்பப்பட மாட்டாது

★ கருத்துக்கள் எங்களை அடைய கடைசி தேதி 20 - 2 - 94. ★

**சிட்டின் நினைவா? சேரனை நினைப்பீர்!**

# சக்கரவர்த்தித்




ராஜாஜி

## 69. ஜானகி ஆறுதல் அடைந்தாள்

மரத்தில் மறைந்திருந்த ஹனுமான் மிருதுவான குரலில் சீதையின் காதில் விழும்படி ராமனைப் பற்றி மதுரமாகப் பேசலானான்:

“ராஜா தசரதன் கோசல தேசத்தை ஆண்டான். அவனுடைய சேனை ரதங்களும் யானைகளும் குதிரைகளும் அடங்கிய பெரும் சேனை. புண்ணிய சீலன். மிகப் பெரும் காரியங்களைச் சாதித்தவன். சத்தியத்தைக் காத்தவன். பெரும் புகழ் பெற்ற அரசர்களுக்குள் முதன்மைப் பதவி அடைந்தவன். ரிஷிகளுக்குச் சமானமான குணமும் சீலமும் பெற்ற சக்கரவர்த்தி. தேவேந்திரனைப் போல் சாமர்த்தியம் அடைந்தவன். யாரையும் துளி துன்பப்படுத்த மாட்டான். யாரையும் வெறுக்காதவன், யாருக்கும் தீமை செய்யாதவன். அவன் முயற்சிகள் எதுவும் வீணானதில்லை. ஆனபடியால் 'சத்திய பராக்கிரமன்' என்கிற பெயரை அடைந்த அரசன். இக்ஷ்வாகு குலத்து ஸ்ரீமான், அரசர்களுக்குள் ஏறு, பூமண்டல அதிபதி. சுகம் தருபவன், சுகமாக இருப்பவன். அவனுடைய நான்கு குமாரர்களில் மூத்தவன் ராமசந்திரன். பூரண சந்திரனைப் போன்ற முகத்தையுடையவன். மிகுந்த அறிவாளி. ராமன் சிரேஷ்டமான பண்பு அடைந்து, தனுர் வேதம் நன்றாகக் கற்று, எல்லோராலும் விரும்பப்பட்டான். ராஜ்யத்திலுள்ள மக்களிடம் மிகுந்த அன்பு கொண்டவன். தருமத்தில் தளராத பற்றுடையவன். வீரன். பட்டத்துக்கு உரியவன். ஆயினும் முதுமையடைந்த தன் தகப்பனாரின் புகழும் பெயரும் சத்தியமும் மாசு அடையாதிருப்பதற்காகத் தன் மனைவி சீதையுடனும், தம்பியுடனும் ராஜ்யத்தை விட்டு வனம் சென்று அங்கேயே வசித்து வந்தான். அரண்ய வாசம் செய்யும் போது, அநேக கொடிய ராக்ஷசர்களை எதிர்த்து ரிஷிகளைக் காப்பாற்றினான். கரன், தூஷணன் என்ற ராக்ஷச தலைவர்களையும் அவர்களுடைய பெரும் சேனையையும் வதம் செய்து அழித்தான். இதையறிந்த ராவணன் பழி வாங்குவதற்காக மாயமான் வடிவத்தில் ஒரு ராக்ஷசனை ஏவி, ராமனை ஏமாற்றி, ராஜகுமாரர்கள் பக்கத்தில் இல்லாத சமயம் பார்த்து, சீதையைப் பலாத்காரமாகத் தூக்கி எடுத்துக் கொண்டு போய் விட்டான். துயரம் அடைந்த ராமன் மனைவியைத் தேடிக் கொண்டு சென்றான். சுக்ரீவன் என்ற வானரனை அடைந்து அவனுடன் நட்பு செய்து கொண்டான். வாலி என்கிற வானர ராஜனைக் கொன்று, தம்பி சுக்ரீவனுக்கு வானர ராஜ்யம் சம்பாதித்துத் தந்தான். அந்த சுக்ரீவன் தன்னுடைய வானர வீரர்களைப் பூமண்டலம் முழுதும் சீதையைத் தேடும்படி அனுப்பினான். விரும்பிய வடிவம் எடுக்கும் திறமை கொண்ட வானர வீரர்கள் எல்லாத் திசைகளிலும், காணமற்போன சீதையைத் தேடினார்கள். அவர்களில் நான் ஒருவன். சம்பாதியினிடம் பெற்ற துப்பைக் கொண்டு நான் நூறு யோஜனைக் கடலைத் தாண்டி இவ்விடம் வந்தேன். ராகவன் எனக்குத் தன் தேவியைப் பற்றிச் சொன்ன ரூபம், நிறம், லக்ஷணம் இவற்றுக்கெல்லாம் ஒத்த உருவத்தை இப்போது நான் காண்கிறேன்.”

இவ்வாறு மெதுவாகச் சொல்லி ஹனுமான் நிறுத்திக் கொண்டான்.

இந்த மதுரமான சொற்கள் - யாராலோ எங்கிருந்தோ சொல்லப் பட்டதைக் கேட்டு ஜானகி வியப்படைந்தாள். மகிழ்ந்தாள். நாலா பக்கமும் பார்த்தாள். யார் இப்படி மிக இனிய குரலில் மிக இனிய விஷயங்களைப் பண்பட்டுத் தெளிந்த பாஷையில் பேசினது என்று நாலா பக்கமும் மேலும் கீழும் பார்த்தாள். பேச்சுக்கு ஒத்த மனித உருவம் எங்கும் காணவில்லை. மேலே மரத்தில் ஓர் அழகிய வானரத்தைத்தான் கண்டாள்.

நிகரற்ற புத்திமானும், வானர ராஜனுக்கு மந்திரியுமான வாயு புத்திரன் பால சூரிய தேஜஸ் கொண்ட சிறு வானர வடிவமாயிருந்தவனைப் பார்த்தாள், ஜானகி. வாசகர்களே! ஜானகியின் பார்வை ராம தூதன் பேரில் பட்டதும் அவனுடைய மகிழ்ச்சியை நீங்கள் கற்பனா சக்தியைக் கொண்டு உணர்வீர்களாக! உணர்ந்தால் உங்கள் உள்ளம் நிர்மலமான கோயிலாகும். உங்கள் எல்லாத் துக்கமும் தீரும். உங்கள் உள்ளத்தில் இடம் கிடைக்குமோ என்று சமயம் பார்த்துக் கொண்டிருக்கும் நாராயணன் தன் பாற்கடலையும் விட்டு வந்து உங்கள் உள்ளத்தில் புகுவான். நம்முடைய உள்ளங்களே அவனுக்குப் பாற்கடல் பள்ளியாகும்,

*''அங்கு அனந்தன் அணைக்கிடக்கும்*
*அம்மான்,*
*அடியேன்மனம்தன் அணைக்கிடக்கும்வந்து''*

என்று முதலாழ்வார் பாடியபடி.

ஹனுமானைப் பார்த்த ஜானகி, 'இதென்ன நான் கேட்ட சொற்களும் காணப்படும் உருவமும் எல்லாம் கனவாகத்தானிருக்க வேண்டும். எப்போதும் தியானித்துக் கொண்டிருக்கும் எண்ணங்கள் கனவில் காணப்படுமல்லவா? நான் தியானித்துத் தியானித்து வந்த என் பிராணநாதனுடைய கதையை யாரோ சொல்லுவது போல் காதில் படுகிறது. இது உண்மையாக இருக்காது. கனவே - கனவில் குரங்கின் உருவம் பார்த்தால் பந்துக்களுக்குக் கெடுதி நேரும் என்கிறார்களே! ராமனுக்கு மங்களம் ஆகுக! மிதிலையில் எல்லோரும் க்ஷேமமாக இருக்க வேண்டும் - இல்லை, இல்லை! இது கனவல்ல! இன்னும் அதே உருவம் ஸ்திரமாகத் தெரிகிறது. காணும் காட்சி திடமாகவும் இருக்கிறது. கனவல்ல. தவிர நான் எங்கே தூங்கினேன்? தூங்கினால் அல்லவோ கனவு காணுவேன். இது கனவல்ல. உண்மையே. ஓ தேவர்காள்! உண்மையில் இந்த வானரம் என் பிராண நாதனிடமிருந்து வந்த தூதனா? அப்படியே ஆகுக. வாக்கினுக்குத் தேவனான வாசஸ்பதியே, உன்னை வணங்குகிறேன். அக்னி பகவானே, உன்னை வணங்குகிறேன். சுவயம்புவே, உன்னை வணங்குகிறேன். தேவர்களே! என்னைக் காப்பாற்றுவீர்களாக. இவன் ராம தூதனே ஆகுக' என்று எல்லா தேவர்களுக்கும் பிரார்த் தனை செலுத்தினாள்.

ஜானகியைக் கண்ட மகிழ்ச்சியால் திவ்விய மங்கள தேஜஸுடன் பொலிந்தான். கீழே இறங்கி, சீதை முன் கைகூப்பி வணங்கி நின்றான்.

''தாயே! தாமரையிதழ்களைப் போன்ற உம்முடைய கண்ணிதழ்களினின்று கண்ணீர்த் துளிகள் வீழ்கின்றனவே! யார் நீர்? கண்ணீர் விட்டு மரக் கிளை மேல் சாய்ந்து துயரம் படர்ந்த முகத்தோடு நிற்கிறீர்? நீர் தேவகன்னியா? நாக கன்னியா? உம்முடைய



தேக காந்தியைப் பார்த்து இப்படிக் கேட்கிறேன். சந்திரனிடமிருந்து பிரிந்து வந்த ரோஹிணி தேவியா? வசிஷ்ட பகவானோடு ஏதேனும் வித்தியாசப்பட்டு இறங்கி வந்த அருந்ததியா? கவனித்துப் பார்த்தால் மானுட ஸ்திரீயாகவே காணப்படுகிறீர். ராஜகுமாரியாகக் காணப்படுகிறீர். தயவு செய்து நீங்கள் யார் என்று சொல்லுவீர். மங்களம்! மங்களம்! ராவணனால் ஜனஸ்தானத்திலிருந்து பலாத்காரமாகத் தூக்கிக் கொண்டு வரப்பட்ட சீதா தேவியா நீர்? ராமசந்திரன் மனைவி சீதையைப் பார்க்கும் பாக்கியம்

பெற்றேனா?'' என்று ஹனுமான் தன்னுடைய மதுர ஸ்வரத்தில் வணங்கிக் கேட்டான்.

சீதை பரவசமானாள். ''அப்பனே! நான்தான் சீதை. விதேஹ ராஜனுடைய புத்திரி. ராமசந்திரனுடைய பாரியை. பன்னிரண்டு வருஷம் சகல சுகங்களையும் அவனுடன் அயோத்தியில் அனுபவித்தேன். பதின்மூன்றாம் வருஷம் சக்கரவர்த்தியானவர் அவருடைய மூத்த குமாரனாகிய என் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய எல்லா ஏற்பாடுகளும் செய்தார். அப்போது மகாராஜனின்னுடைய இளைய தேவி கைகேயி தன் மகனுக்குப் பட்டம் கொடுக்க வேண்டும், ராமனைக் காட்டுக்கு அனுப்பி விட வேண்டும், இல்லாவிடில் உணவு உண்ண மாட்டேன், தண்ணீர் அருந்த மாட்டேன், உயிரை விடுவேன் என்று ஹடம் செய்து வற்புறுத்தினாள். முந்தி கைகேயிக்குக் கொடுத்திருந்த வாக்குப் படி அரசன் அவள் பிடிவாதம் பண்ணிக் கேட்டதற்கு ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று. மகாராஜன் ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுத்து விடு என்று ராமனைக் கேட்டுக் கொண்டான். ராமன் ஒரு க்ஷணமும் தாமதிக்கவில்லை. 'தகப்பனார் தந்த வார்த்தையைச் சத்தியமாக்குவதே என் பாக்கியம், ராஜ்ய போகத்தை விடத் தந்தையைச் சத்திய சந்தனாக்குவதே என் சந்தோஷம்' என்று ராஜ்யத்தைப் பற்றிய எண்ணத்தை உடனே முற்றிலும் துறந்து விட்டு வனம் சென்றான். புருஷன் வனம் சென்றால் நான் பிரிந்திருக்க முடியாது, நானும் கூடவே வனம் செல்வேன் என்று வற்புறுத்தினேன். முந்தியே தம்பி லக்ஷ்மணன் மரவுரி தரித்து அண்ணனுக்குத் துணையாக வனம் போக நிச்சயித்து விட்டிருந்தான். மூவரும் வனம் சென்றோம். தண்டகாரண்யத்தில் வசித்து வந்தோம். ஒரு நாள் துராத்மாவான ராவணன் வந்து என்னைப் பலாத்காரமாகத் தூக்கி இவ்விடம் இந்த அசோகவனத்தில் சிறை வைத்திருக்கிறான். பன்னிரண்டு மாத கால வரை வைத்திருக்கிறான். இன்னும் இரண்டு மாதகாலம் மிகுதியிருக்கிறது. அது முடிந்தவுடன் என் உயிரை நீப்பேன்'' என்றாள், துக்கத்துக்கு மேல் துக்கமாக வந்து திக்கற்று நின்ற பிராட்டி.

இவ்வாறு ஹனுமான் சொன்னதும் ஜானகி சொன்னதும் இரண்டு சிறிய அத்தியாயங்களில் வால்மீகி ராமாயணத்தில் பாடப் பட்டிருக்கிறது. பெரிய கதையை ஆஞ்சநேயனுடைய வாயாலும் ஜானகியின் வாய் மொழியாகவும் வால்மீகி முனிவர் உலகத்தை அளந்த திரிவிக்ரமன் பலியினிடம் வாமன வடிவம் எடுத்துச் சென்றது போல் அழகிய சிறிய உருவத்தில் தந்திருக்கிறார். ஆஞ்சநேயனும் பிராட்டியுமே நமக்கு ராமாயணம் சொல்லுகிறார்கள், நமக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும்? ஹனுமான் சொன்ன இந்த ராம கதையை, ஜானகி சொன்ன இந்த ராம கதையை பக்தியோடு படித்து, வாமனன் மகாபலிச் சக்கரவர்த்தியை வசப்படுத்தி, அவன் அகங்காரத்தினின்று அவனைக் காத்ததுபோல், நம்முடைய அகங்கார மமகாரங்களினின்று நாமும் காக்கப் படுவோமாக.

(தொடரும்)

---



**இவரைப் பற்றி பள்ளியில் பாடம்!**

✻ புதுதில்லியில் ஏழாம் வகுப்பு மாணவர்களுக்கு ஆங்கிலப் பாடத்தில் அமிதாப் பச்சனைப் பற்றி ஒரு பாடம் இருக்கிறது!

✻ கல்கத்தாவில் ஒரு பத்திரிகை நிருபர் தள்ளுவண்டி கடையில், இனிப்புப் பொட்டலம் வாங்கினார்! இனிப்பைச் சாப்பிட்டுவிட்டு, அது மடிக்கப்பட்டிருந்த காகிதத்தைப் பார்த்தார்! அதிர்ச்சி! ''என் அருமை ஜோதிபாசுவிற்கு; தாங்கள் எனக்குப் பிறந்த நாள் வாழ்த்து அனுப்பியதற்கு நன்றி!'' என்று இருந்தது. கையெழுத்திட்டிருந்தவர் பிரதமர்! இப்பொழுது சர்ச்சை இதுதான் : பிரதமர், முதல் அமைச்சருக்கு எழுதிய கடிதம் எப்படி ரோட்டிற்கு வந்தது?

ஆதாரம் : தி வீக்.
தகவல் : ப. கணேஷ்ராகவன்.

# ஸ்ரீ நாராயண தீர்த்த ஸ்வாமிகளின் ஆராதனை விழா, திருப்பூந்துருத்தி - 613 103. தஞ்சாவூர் மாவட்டம்.

திருப்பூந்துருத்தியில் ஸ்ரீ நாராயண தீர்த்தர் ஜீவ சமாதியில் ஸ்வாமிகளின் ஆராதனை தரங்க இசைவிழா இவ்வாண்டு 18.2.94 வெள்ளிக்கிழமை ஆராதனையன்று காலை 7.30 மணி அளவில் உஞ்சவிருத்தி பஜனையுடனும், வேத பாராயணத்துடன் ஆரம்பித்து 20.2.94 நள்ளிரவு ஆஞ்சநேய உற்சவத்துடன் முடிவடைகிறது. விழாவிற்கு டாக்டர் திரு V.V. ஸ்ரீவத்ஸா தலைமைதாங்க, சங்கீத கலாநிதி பத்மஸ்ரீ திரு K.V. நாராயணஸ்வாமி விழாவை துவக்கி வைக்கிறார். மிருதங்க மேதை காரைக்குடி திரு R. மணி "குத்துவிளக்கு" ஏற்றி வைக்கிறார். திருமதி மைத்ரேயி ராமதுரை முக்கிய விருந்தினராக பங்கு கொள்ள இருக்கிறார். வழக்கறிஞர் தஞ்சை திரு T.N. ராமசந்திரன் பேசுகிறார். விழாவில் முதல் சிறப்பு நிகழ்ச்சியாக "லயரத்ன மிருதங்க தனி ஆவர்த்தன நிகழ்ச்சி"யை திரு காரைக்குடி R. மணி, திரு G. ஹரிசங்கர் கஞ்சிராவுடன் நிகழ்த்துகிறார். விழாவில் மூன்று நாட்களும் கீழ்க்கண்ட பிரபல கலைஞர்கள் பங்கு கொள்கிறார்கள். பத்மஸ்ரீ திரு K.V. நாராயணஸ்வாமி, போழக்குடி திரு P.V. கணேசய்யர், திரு உதயசங்கர் ஜோஷி, திருமதிகள் பத்மா நாராயணஸ்வாமி, S. ராஜேஸ்வரி, கருணாவரதாச்சாரி, திருமதி அம்புஜம் வேதாந்தம், டாக்டர். ராஜலக்ஷ்மி சந்தானம் & T.V. சுந்தரவல்லி, வீணைகள். பத்மாவதி அனந்தகோபாலன் செல்வி ஜெயந்தி ராதாகிருஷ்ணன், S. காயத்ரி, மாண்டலின் நாகமணி, திருமதி ராதிகா ஆனந்த், ராதாபாஸ்கர், லலிதா ராமசுப்ரமண்யம், திரு. G.N. தேசிகன், திரு A. சீனிவாசராகவன், ராஜ்குமார் பாரதி, N. விஜயசிவா, P. உன்னி கிருஷ்ணன் அசோக் ரமணி, பாலாஜி சங்கர், சசீதரன், பிரசாத் வெங்கட்ராமன், V. சங்கர நாராயணன், நங்கநல்லூர் ராமநாதன், ஸ்ரீனிவாசன் மற்றும் வயலின் மேதை பத்மஸ்ரீ M.S. கோபாலகிருஷ்ணன், திருவள்ளூர் பார்த்தசாரதி, மதுரை, பாலசுப்ரமண்யன், N.V. சுப்ரமண்யம், திருமதி ராதாசுந்தரேசன், திருமதி நர்மதா, திரு R.K. ஸ்ரீராம்குமார், திரு V.L. சுதர்சன், செல்விகள் பம்பாய் ரஞ்சனி & காயத்ரி, L. நீலா மற்றும் மிருதங்க மேதை காரைக்குடி திரு R. மணி, மாதிரிமங்கலம் ஸ்வாமிநாதன், தஞ்சாவூர் S. சுப்ரமண்யம், திரு R. ரமேஷ், திருப்பூந்துருத்தி V. விஸ்வநாதன், நெய்வேலி வெங்கடேஷ், களக்காடு ஸ்ரீனிவாசன், J. வைத்யநாதன், பம்பாய் பாலாஜி, P. சுரேஷ், முத்ரா பாஸ்கர், கும்பகோணம் திரு கணேஷ், திரு சரவணன், திருச்சி S. கார்த்திக், கஞ்சிரா மேதை திரு G. ஹரிசங்கர், கடம் வித்வான்கள் ராசப்படி சுப்பராமையா, புதுக்கோட்டை ராமசந்திரன், மடிப்பாக்கம் முரளி, ஆதம்பாக்கம் சங்கர் புல்லாங்குழல் சரவணன், ஹரிகதா கலைஞர்கள் திருமதி T.R. கமலா மூர்த்தி, கல்யாணபுரம் திரு ஆராமுதன், நீடாமங்கலம், திருமதி அலமேலு & திரு சுப்பராமன், நடன கலைஞர்கள் திருமதி கிருஷ்ணகுமாரி நரேந்திரன் குழுவினர், செல்வி வித்யா பவானி மூர்த்தி குழுவினர், நாதஸ்வர கலைஞர்கள் பிள்ளைமாநகர் சகோதரர்கள், கல்யாணபுரம் கணேசன் குழுவினர், மற்றும் மடிப்பாக்கம் திரு ராமமூர்த்தி பாகவதர் குழுவினர் திவ்யநாம பஜனையுடன் இனிது நடைபெற உள்ளது.

18.2.94 முக்கிய விருந்தினராக திருமதி மைத்ரேயி ராமதுரை, காரியதரிசி, சென்னை வித்வத்சபை அவர்களும், 19.2.94 விழாத் தலைவராக அகில இந்திய வானொலி நிலைய இயக்குநர் திரு M. ரகுநாத், திருச்சி அவர்களும், முக்கிய விருந்தனராக திரு R. கிருஷ்ணஸ்வாமி, தலைவர், Federation of City Sabhas, சென்னை, 20.2.94 திருமதி விஜயலக்ஷ்மி மூர்த்தி நிலைய இயக்குநர், திருநெல்வேலி அகில இந்திய வானொலி நிலையம், தலைவராகவும், திரு ராகவன், Managing Director 'தினமலர்' திருச்சி முக்கிய விருந்தனராகவும், கலந்து கொள்ள இருக்கிறார்கள்.

விழாவிற்கான ஏற்பாடுகளை காரியதரிசி திருப்பூந்துருத்தி திரு V. வெங்கடேசன், பொருளாளர் திரு L. பாலசுப்ரமண்யம், உபதலைவர்கள் திரு R. பிரதாப்சிங் காடேராவ், தொழிலதிபர் தஞ்சாவூர் A. சுப்ரமண்ய செட்டியார் கவனித்து வருகிறார்கள்.

விழாவிற்கு இதை பார்க்கும் பக்த கோடிகள் யாவரும் தாராளமாக கீழ்க்கண்ட முகவரிக்கு நிதி உதவி செய்ய வேண்டுகிறோம்.

திரு L. பாலசுப்ரமண்யம்,
பொருளாளர்,
1090, பாப்பண்ணா சந்து,
தஞ்சாவூர் - 613 009.

இங்ஙனம்
ஸ்ரீ தீர்த்த நாராயண ஸ்வாமிகள் ஆராதனை மஹோத்ஸவ கமிட்டியார்
திருப்பூந்துருத்தி.

# ரமணனா இப்படி...



“ரமணன் வீட்டைக் காலி செய்து கொண்டு போய் விட்டார்.''

அலுவலக வேலையாகப் பத்து நாள் பம்பாய் வரை சென்று திரும்பியதும் மனைவி சொன்ன முதல் செய்தி இது.

''என்னவாம்?''

''தெரியலே. நீங்க ஊருக்குப் போன துக்கு அடுத்த நாள், அவர் பையன் கொண்டு வந்து வீட்டுச் சாவியைக் கொடுத்துட்டுப் போனான்.''

''காரணம் கேட்டியா?''

''அவன் வந்த சமயம் நானும் வீட்டுல இல்லே. நம்ம பானுதான் இருந்திருக்கா. சின்னப் பொண்ணுதானே அவ. அதனால கேட்கலே.''

எனக்குள் கோபம் தலைநீட்டியது.

வீடு! நான் ஆசையாய்க் கட்டியது. கிரஹப்பிரவேசம் ஆன கையோடு குடிபுகுந் தவர் ரமணன். எனக்குப் பூர்வீக சொத்தாய் இப்போது வசிக்கும் வீடு நகரின் மையத்தில் இருக்கவே, என் உழைப்பில் கட்டிய அந்த வீட்டை வாடகைக்கு விட்டிருந்தேன்.

ரமணன் குடிபுகுந்து ஒன்றரை மாதம் தான் ஆகிறது.

''இந்தப் பத்து நாளிலே ரமணன் இங்கே வரவே இல்லையா?''

''இல்லைங்க. அதான் ஆச்சர்யமாய் இருக்கு'' என்றாள் என் மனைவி காயத்ரி.

இந்த ஊருக்குப் புதிதாக மாற்றலில் வந்தவர் ரமணன். அதுவும் இருபத் தைந்து வருடங்களுக் கும் மேலாய் வடக்கே குப்பை கொட்டி விட்டு, தன் கடைசி வருட சர்வீசில் மாற்ற லாகி வந்திருக்கிறார். அவருடன் வேலை பார்க்கும் என் நண்பன் சிபாரிசு செய்ததால் குடியமர்த்தினேன்.

''ஏன் திடீர்னு காலி பண்ணிட்டார்னு தெரியலையே?'' என்றேன் யோசனை யாய்.

''நம்ம வீடு இருக்கறது ஊரை விட்டுக் கொஞ்சம் தள்ளி. டவுனுக்குள்ளே நல்ல வீடாய்க் கிடைச்சிருக்கும்.''

''அதுக்காக இப்படி திடீர்னு...''

''வாடகையும் அவங்க கட்டுக்குள்ளே வந்திருக்கும். ஊருக்குப் புதுசா வந்த போது, ஏதாவது ஒரு வீடு கிடைச்சாப் போதும்னு குடி வந்தாங்க. இப்ப பழகியிருப்பாங் களே.''

அவள் சொல்வதும் உண்மைதான். ஆனால் அதற்காக இப்படியா? ஒரு மரி யாதைக்காகக் கூட வந்து பார்க்கவில் லையே? மகனிடம் வீட்டுச் சாவியை கொடுத்து அனுப்பி விட்டு, இப்படி பாரா முகமாய் இருப்பது எந்த நியாயத்தில் சேர்த்தி?

என் மனச்சங்கடம் புரிந்தவளாய் என்னை நோக்கினாள் காயத்ரி.

''எனக்கும் சங்கடமாய்த்தான் இருந்த துங்க முதல்ல. கலிகாலம். மனுஷங்க அப்



படித்தான் நடந்துக்குவாங்கன்னு தேத்திக் கிட்டேன். உங்க மேலேயும் தப்பிருக்கு.''

''என்ன சொல்றே?''

''பத்து மாசம் அட்வான்ஸ் வாங்கறது ஊர், உலக வழக்கம். நீங்கதான் ஒரு மாத அட்வான்ஸே போதும்னு உங்க தாராள குணத்தைக் காட்டினீங்க'' என்றாள் குத்த லாய்.

உண்மைதான்! வாடகை வீட்டில் இருப் பவர்களின் கஷ்டம் கேள்விப்பட்டதால் எடுத்த முடிவு அது.

''எதுக்கும் ஒரு தடவை வீட்டைப் போய் பார்த்துட்டு வந்துடுங்க. மனுஷன் எதையாவது எடுத்துக்கிட்டோ, இல்லை, உடைச்சுட்டோ போயிருக்கப் போறாரு'' என்றாள் காயத்ரி.

''நீ போய்ப் பார்க்கலையா?''

''எங்கே? பானுவுக்கு ஜுரம். டாக்டரிடம் அலையவே நேரம் சரியாய் இருந்தது. அந்தக் கவலை முன்னாடி இதெல்லாம் பெரிசாப் படலே.''

தாய்மையின் கவலை. நியாயம் தான்.

சட்டையை மாட்டிக் கொண்டு வீட்டைப் பார்க்கக் கிளம்பினேன்.

**பு**றநகர்ப் பகுதியில் இருக்கிறது. இன்னும் ஒழுங்கான தார்ச் சாலை வரவில்லை. மின்சார வாரியத்தில் வேலை பார்ப்பவர்கள் பத்துப் பேர் இங்கு வீடு கட்டியிருப்பதால் தெரு விளக்குகள் வந்து விட்டன.

புதுக்கருக்கு அழியாமல் கம்பீரமாய் வரவேற்றது என் வீடு. ஆசையாய்ப் பார்த்தேன்.

வீட்டின் வெளிப்புறம் பச்சை நிற வர்ணம் பூசப்பட்டிருந்தது. நடுவே 'ஜானகி இல்லம்' என்று பெரிய எழுத்தில் என் அம்மா பெயர். பத்தடி தூரத்திற்கு சிமெண்ட் தளம் முகப்பில். பிறகு கிரில் கேட். பூட்டைத் திறந்தேன். பெயிண்ட் வாசனை கூட இன்னும் போகவில்லை. அதற்குள் காலி பண்ணி விட்டார்களே!

நல்லவேளை வீட்டை சுத்தமாய்த்தான் வைத்திருந்திருக்கிறார்கள். குழந்தைகளின் சுவர் ஓவியமோ, சமையலறையில் கரி ஓவியமோ, பெட்ரூமில் சாந்துத் தீற்றலோ, கண்ட இடங்களில் 'ஆணி' ரசனையோ இல்லாமல், இன்னும் புது வீடாகவே இருந்தது.

கொல்லைப்புறக் கதவைத் திறந்து கொண்டு போனேன். கிணறு. பக்கத்தில் துவைக்கும் கல். தண்ணீர் பைப். எல்லாம் சரியாக இருந்தன. பல்புகள் கூட சரியாய் இருந்தன.

''என்ன சார் சௌக்கியமா?'' என்ற குரல் கேட்டு அக்கம் பக்கம் பார்த்தேன்.

மதில்சுவர் மேல் பக்கத்து வீட்டுக்காரர் தலை.

''ஏன் காலி பண்ணிப் போயிட்டாங்க?'' என்றார்.

''உங்களுக்குத் தெரியாதா?''

''குடும்பத்தோட நாலு நாள் எல்.டி.சி. போயிருந்தேன். வந்து பார்த்தால் உங்க வீடு பூட்டியிருக்கு. அதோட அவங்க வந்தும்

கிருஷ்ணா

கொஞ்ச நாள்தானே இருந்தாங்க. அதனால அதிகப் பழக்கம் இல்லாமப் போச்சு'' என்றார்.

**வீ**ட்டைப் பூட்டிக் கொண்டு வீடு திரும்பிக் கொண்டிருந்தேன். டவுன் பஸ் ஸ்டாண்டில் இறங்கினேன். கடைவீதி வழியே வீடு திரும்பும் போது எதிரில்...!

வசமாய்ச் சிக்கினார் ரமணன். என்னைப் பார்த்து சோகையாய்ச் சிரித்தார்.

வாய் விட்டு எப்படி சிரிக்க முடியும்?

''எப்ப ஊரிலிருந்து திரும்பினீங்க?'' என்றார்.

''அடேடே, என்னை ஞாபகம் இருக்கா?'' என்றேன் கிண்டலாய்.

பதில் சொல்லாமல் தலைகுனிந்தார்.

''நன்றி மறக்கறது பண்பு இல்லை மிஸ்டர் ரமணன்'' என்றேன் காட்டமாய்.

சங்கடமாய் நெளிந்தார்.

''இப்ப ஆடி மாசம். யாரும் குடி வர மாட்டாங்க. ஒரு மாத வாடகை எனக்கு நஷ்டம்'' என்றேன் கோபமாய்.

மனுஷன் வாய்க்குள் கொழுக்கட்டை.

''இப்ப எங்கே இருக்கீங்க?''

''பார்க் அவென்யூவில் மூன்றாவது மாடியில். வீட்டு நம்பர் அறுபது.''

''சௌகரியமா இருக்கோ அது?'' என்றேன் கிண்டலை விடாமல்.

''உங்க வீடு தனி வீடு. சுதந்திரம் இருந்தது. இது மாடி.. அதுவும் மூன்றாவது மாடி. கஷ்டம்தான்'' என்றார். குரல் கரகரத்திருந்தது.

இவ்வளவு வயதான மனிதரை அப்படிப் பார்த்ததும் கொஞ்சம் என் கோபம் குறைந்தது.

''நீங்க இப்படி திடுதிப்புனு காலி பண்ணினதும் இல்லாமல், இதுநாள் வரை வராததும் எந்த நியாயத்தில் சேர்த்தின்னு தெரியலே'' என்றேன் கொஞ்சம் தழைவாய்.

''அது...''

''உங்களாலே பதில் சொல்ல முடியாது தான். ஆனால் உங்க மூலமாய் ஒரு பாடம். இனிமேல் யாருக்கும் இரக்கப்படக்கூடாது. வீட்டை வாடகைக்கு விடும்போதே ஆறு மாத முன்தொகையாவது கட்டாயம் வாங்கியே ஆகணும்'' என்றேன்.

''ப்ளீஸ்... அது வந்து...'' என்று தடுமாறினார்.

அவர் தடுமாற்றம் என்னைக் கொஞ்சம் இளக்கியது.

''அது சரி, உங்க அம்மா, மனைவி, குழந்தைகள் எப்படியிருக்காங்க? மூனாவது மாடின்னு சொல்றீங்க. வயசானவ உங்க அம்மா. எப்படி ஏறி இறங்க முடியும்?''

''அம்மா... அம்மா... போயிட்டா'' என்று அவர் தழுதழுக்கவும் திடுக்கிட்டுப் போய் அவரை கவனித்தேன்.

முகத்தில் பத்து நாளாய் மழிக்கப்படாத தாடி அப்பிய சோகம்.

''கடவுளே! எப்போ?'' என்றேன்.

''வீட்டைக் காலி பண்றதுக்கு மூணு நாள் முன்னாடி திடீர்னு அம்மா மயங்கி விழுந்துட்டா. டாக்டரிடம் கூட்டிட்டுப் போனோம். நர்சிங்ஹோமில் அட்மிட் பண்ணினோம். இரண்டு நாள் கூடத் தாங்காதுன்னு டாக்டர் சொல்லிட்டார்.''

''அடப்பாவமே!''

''உங்க வீடோ புது வீடு. நானும் இந்த ஊருக்குப் புதுசு. வீட்டுல வைக்கத்தான் காரியங்கள் பண்ணியாகணும். முதன் முதலில், நீங்க கஷ்டப்பட்டுக் கட்டிய புது வீட்டில் துக்க காரியம் நடக்கறதுல... என் மனசு ஒத்துக்கலே. எங்க அம்மா மேலே, எங்க எல்லோருக்குமே பிரியம் அதிகம். அதனால அவ வாழ்ந்த வீட்டுலே தொடர்ந்து வாழவும் சென்டிமென்டலா மனசு சங்கடப்படும்னு தோணினது. அதனால, வாடகை அதிகமானாலும் பரவாயில்லேன்னு, இங்கே குடிவந்துட்டோம். எங்க நேரம், அப்பத்தான் இந்த வீடு காலியாச்சு. வீட்டு சொந்தக்காரர் சென்னையிலே இருக்காராம். என் ஆபீஸ் நண்பரோட பொறுப்புல இருந்தது அது'' என்றார்.

''பதின்மூன்று நாள் காரியம் முடிஞ்சதும் வரலாம்னு இருந்தேன்'' என்று அவர் சொன்னதும் நான் கூனிக்குறுகிப் போனேன்.

இந்த மனிதன் தன் துக்கத்தின் நடுவேயும், பிறர் கஷ்டப்படக் கூடாது என்ற நல்லெண்ணத்தில் செயல்பட்டிருக்கிறார்.

என் புது வீட்டில் துக்கம் நடந்தாலும் கஷ்டம்! துக்கம் நடந்ததைச் சொல்லி வெளியேறினாலும் எனக்கு பாதிப்பு ஏற்படும் என்று செயல்பட்டிருக்கிறார்.

ஆஸ்பத்திரியிலிருந்து தன் தாயின் உடலை என் புது வீட்டுக்குக் கொண்டு வராமல், விரைவாய்ச் செயல்பட்டு, வேறு வீட்டுக்குக் குடியேறி...

''என்னை மன்னிச்சிடுங்க ரமணன்'' என்றேன். அவர் கைகளை அழுத்திப் பிடித்தபடி.

---

## சேஷன் சொன்ன குட்டிக்கதை!



ஒரு வேலைக்காரன், ஏதோ கோபத்தில் எஜமானை 'போடா, நாயே' என்று திட்டிவிட்டான். முதலாளி ஊர் பஞ்சாயத்தில் புகார் செய்தார். பஞ்சாயத்தார் விசாரித்து, முதலாளியை அவமதித்த குற்றத்துக்குத் தண்டனையாக வேலைக்காரன் கோவிலில் நூறு தோப்புக்கரணம் போட வேண்டும் என்று தீர்ப்பளித்தார்கள். உடனே வேலைக்காரன் ஊர் கோவிலுக்குப் போனான். எல்லோரும் வேடிக்கை பார்க்க, காதைப் பிடித்துக் கொண்டு, ''முதலாளியை நாயே என்று சொன்னதற்குத் தோப்புக்கரணம் ஒன்னு... முதலாளியை நாயே என்று சொன்னதற்குத் தோப்புக்கரணம் இரண்டு: முதலாளியை நாயே என்று சொன்னதற்குத் தோப்புக்கரணம் மூன்று'' என்று இப்படியே கூச்சல் போட்டு நூறு தோப்புக்கரணம் போட்டான்!

('ஃப்ரண்ட்லைன்' பத்திரிகைக்கு அளித்த பேட்டியில், தலைமைத் தேர்தல் கமிஷனர் சேஷன் சொன்ன குட்டிக் கதை)

தகவல் : இரத்தின. மனோகரன்

# சீர்காழி சிரிப்பு!

### டைட்டில் மயக்கம்!

"கதையைக் கேட்டுட்டு அருமையா இருக்குன்னு பாராட்டின அந்தத் தயாரிப்பாளர், டைட்டிலைக் கேட்டதும் மயங்கி விழுந்துட்டார்."

"அப்படி என்ன டைட்டில்?"

"பலிகடா...!"



### திருடா திருடா!!

"தொழிலை விட்டுடலாம்னு இருக்கேன் சார்..."

"இந்த மாதிரியெல்லாம் சொல்லி மிரட்டினா, புடிச்சி உள்ளே போட்டுடுவேன், ஜாக்கிரதை!"

● ● ●

### எடுக்கவோ, கவிழ்க்கவோ!

"வேலைக்காரி தேய்க்க வச்ச பாத்திரங்களையெல்லாம் உன் கணவர் கவிழ்த்து வைக்கிறாரே ஏன்....?"

"அவர்தான் அரசியல்வாதியாச்சே.... எதையாவது கவிழ்த்துக்கிட்டே இருந்தால்தான் அவருக்குத் தூக்கமே வரும்!"

● ● ●

### தூக்கத்தில் ஷாக்!

"தூங்கறதுக்கு எதுக்கு ஆபீஸுக்கு வர்றாங்க... வீட்லயே தூங்கலாமேன்னு மானேஜர் சொல்றார் சார்...?"

"வீட்டுல ஃபேன் போட்டுக்கிட்டுத் தூங்கினா, கரண்ட் சார்ஜ் யார் கட்டுவாங்களாம்...?"

● ● ●

### கல்யாணக் கஷ்டம்!

"கல்யாணத்துக்குப் போகும்போது நல்லாத்தானே போனீங்க; திரும்பி வரும்போது ஏன் நொண்டிக்கிட்டு வர்றீங்க?"

"புது செருப்பு காலைக் கடிச்சிடிச்சு!"

● ● ●

### வேண்டாம் விமானம்!

"நான் பிளேன்ல மட்டும் போனதே இல்லே."

"ஏன்... ஒரு தடவை போக வேண்டியதுதானே...?"

"பிளேன்ல, 'வித்தௌட்ல' போக முடியாதாமே...!"

- சீர்காழி வி. ரேவதி

# பட்ஜெட் வரும் பின்னே; விலை ஏற்றம் வரும் முன்னே!

**ப**ட்ஜெட்டுக்கு முன்னர் அரசின் கட்டுப்பாட்டில் உள்ள பல பொருள்களின் விலைகளை உயர்த்தி விடுவது என்பது இப்போதெல்லாம் சகஜமாகி விட்டது. இப்படிச் செய்வதன் மூலம், பட்ஜெட்டுக்கு முன்பே அரசு, வருவாயை அதிகரித்துக் கொள்கிறது! அதனால் பட்ஜெட்டில் வரிகளை ரொம்பவும் அதிகரிக்காமலிருந்தும் சில சலுகைகளைக் காட்டியும் நிதி அமைச்சர் நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள முற்படுகிறார். இது ஒரு வகையில் மோசடியே. மக்களிடமிருந்து வரி என்ற பெயரில் பணம் பறித்தாலென்ன, விலை உயர்வு என்ற பெயரில் பணம் கறந்தால் என்ன?

முதலில் சமையல் வாயு விலை உயர்வு பலமாகத் தாக்கியது; பதினைந்து ரூபாய் உயர்த்தி, ஐந்து ரூபாய் குறைத்து ஒரு மாய்மாலம் காட்டினார்கள். அப்புறம், சர்க்கரை விலை உயர்வு மனக்கசப்பை ஏற்படுத்தியது. பிறகு ரேஷன் அரிசி - கோதுமை விலை உயர்வு இடிபோல் இறங்கியது. இப்போது பெட்ரோல் - டீசல் விலை உயர்வு வயிறு எரியச் செய்கிறது. 'பட்ஜெட்டுக்கு முன் இன்னும் எது எதற்கெல்லாம் விலை உயரப் போகிறதோ?' என்று ஸ்ரீமான் பொதுஜனம் நடுங்குகிறார்.

இந்த விலை உயர்வுக்கு அரசு காரணமும் சொல்கிறது : 'பெட்ரோல், சமையல் வாயு, கெரசின், உணவுத் தானியங்கள் போன்றவற்றின் உற்பத்திச் செலவுகள் ரொம்ப அதிகம். ஆனால் மக்கள் நலனைக் கருதி, நாங்கள் மான்யங்கள் வழங்கி, விலையைக் குறைத்து நிர்ணயித்தோம். நாளடைவில் மான்யங்கள் அதிகரிக்க அதிகரிக்க, அரசின் வருவாயெல்லாம் மான்யங்களுக்கே சரியாகப் போய்விடுகிறது. அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பணம் இருப்பதில்லை. அதனால் மான்யங்களை இப்போது குறைக்கிறோம். எனவேதான் மான்யங்களைப் பெற்று வந்த பண்டங்களின் விலை இப்போது உயர்கிறது.' இதுதான் மன்மோகன் சிங் அளிக்கும் விளக்கம்.

**மா**ன்யங்கள் எவ்வாறு வழங்கப்படுகின்றன? விவசாயிகளுக்குக் குறைந்த விலைக்கு ரசாயன உரம் கிடைக்கச் செய்கிறது அரசு. இதனால் உர உற்பத்தி ஆலைகளுக்கு ஏற்படும் நஷ்டத்தை அரசு மான்யமளித்து ஈடுகட்டுகிறது. விவசாயிகளிடமிருந்து கட்டாயக் கொள்முதலில் பெறப்படும் தானியங்களுக்குக் கூடுதல் விலை தந்து, அதையே பொது விநியோகத்தில் குறைந்த விலைக்கு அரசு விற்கிறது. இதேபோல் பெட்ரோலியப் பொருள்கள் உற்பத்திக்கும் செலவு அதிகமானாலும் விற்பனை விலை குறைத்து நிர்ணயிக்கப்படுவதாக அரசு சொல்கிறது. இரண்டுக்கும் இடையில் உள்ள வித்தியாசத்தை ஈடுகட்டுவதைத்தான் மான்யம் என்கிறது அரசு.






ஆனால் இந்த மான்யங்கள் எங்கிருந்து வருகின்றன என்று பார்க்க வேண்டும். அரசு ஆகாசத்திலிருந்து இந்தப் பணத்தைக் கொண்டு வந்து விடவில்லை. மக்களின் வரிப் பணம்தான் மான்யங்கள் வழங்கவும் பயனாகிறது. மக்களில் கணிசமான வருவாய் உள்ளவர்கள் வருமானவரி போன்ற நேர்முக வரிகளைச் செலுத்துகிறார்கள். ஏழைபாழைகள் உள்பட அனைவருமே மறைமுக வரி செலுத்துகிறோம். ஐம்பது பைசா தந்து ஒரு தீப்பெட்டி வாங்கினால் அதில் 25 பைசா வரிதான்! இப்படியாக துணிமணி, கெரசின், சிகரெட் என்று எதை வாங்கினாலும் விலையில் கணிசமான பகுதி உற்பத்தி வரியே. இது தவிர பல பொருள்களுக்கு மாநில அரசுகள் விதிக்கும் விற்பனை வரிகள் வேறு. பார்க்கப் போனால் பணக்காரர்கள் செலுத்தும் நேர்முக வரிகளை விடவும் ஏழைபாழைகள் கொடுக்கிற மறைமுக வரிகள்தாம் பல மடங்கு அதிகம். ஆனால் இது அவர்களுக்கே தெரியாது! விலை என்று நினைக்கிறார்களே தவிர, அதில் உள்ளடங்கியிருக்கிற வரி பற்றிய உணர்வே அவர்களுக்கு ஏற்படுவதில்லை! இந்த வரிகளின் பெரும் பகுதிதான் மான்யங்களாக மாறுகின்றன. ஆக மொத்தம், மான்யங்களின் பளுவைச் சுமப்பதும் மக்களே!

இப்போது, 'அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பணம் இல்லை என்பதால் மான்யங்களைக் குறைக்கும் போது, விலை உயர்கிறது' என்கிறார் மன்மோகன் சிங். அது வரை சரி; ஆனால் மான்யங்கள் குறைவதால் வரிகளும் கணிசமாகக் குறைய வேண்டுமல்லவா? இப்படிக் கேட்டால், 'குறைத்துத் தானே வருகிறேன்?' என்று மன்மோகனார் திருப்பிக் கேட்பார். இது வரை தாம் சமர்ப்பித்துள்ள பட்ஜெட்டுகளை ஆதாரம் காட்டுவார்.

ஆனால் அரசு சொல்லாமல் மறைக்கும் சில விஷயங்கள் உண்டு. மான்யங்கள் அளிக்கப்படக் காரணம், 'உற்பத்திச் செலவு அதிகமாகிறது' என்பது. இவ்வாறு உற்பத்திச் செலவு அதிகரிக்க, நியாயமான காரணம் எவ்வளவு, செயல் திறனில்லாததால் அதிகரிக்கும் உற்பத்திச் செலவு எவ்வளவு என்பதற்குக் கணக்கோ விளக்கமோ கிடையாது! உதாரணமாக, 'இங்கு நிறுவப் பட்டுள்ள ரசாயன உர ஆலைகளும் பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலைகளும் மேல் நாடுகளிலுள்ளவற்றுக்கு இணையாகத் திறம்பட இயங்குகின்றனவா?' என்பது ஒரு முக்கியமான கேள்வி. ஏனெனில், திறமைக் குறைவு காரணமாக உற்பத்திச் செலவு அதிகரிக்கவே செய்யும்.

இரண்டாவது சூட்சுமந்திரம் ஒன்றுண்டு. பெட்ரோலியம் சுத்திகரிப்பு ஆலையில் சமையல் வாயுவும் வருகிறது. பெட்ரோலும் வருகிறது. கெரசினும் வேறு பொருள்களும் வருகின்றன. இதில் பெட்ரோல் உற்பத்திக்கு ஆகும் செலவு என்ன? சமையல் வாயு உற்பத்திக்கு எவ்வளவு, கெரசினுக்கு எவ்வளவு? என்று பிரித்துச் சொல்கிற கணக்கு வழக்கு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. அப்படி இருந்தால் அந்தக் கணக்குகளை அரசு வெளியிடுவதில்லை. ஆக, விலை உயர்கிறதே தவிர, நியாயமான விலை உயர்வுதானா என்று கணிக்க முடிவதில்லை.

மூன்றாவதாக, 'உணவு தானியத்துக்கு விவசாயிக்குத் தரும் கொள்முதல் விலையை உயர்த்தியிருக்கிறோம்; அதனால் ரேஷன் விநியோகத்திலும் விலை உயர்கிறது' என்கிறார்கள். ஆனால், 'விவசாயிக்குத்



"அந்த எழுத்தாளர் எப்படி மன நோயாளி ஆனார்?"

"அவர் எழுதின கதை டீ. வி. நாடகமா வந்ததாம். அதைப் பார்த்திருக்கிறான்!"

- இராஜாக்கமங்கலம் மணி

"எட்டு ரூபாய் மொய் எழுதறீங்களே, உங்களுக்கே நல்லா இருக்கா? அதென்ன கணக்கு எட்டு ரூபாயின்னு...?"

"பின்னே, ஸ்டாம்ப் ஒட்டாமல் நீங்க அனுப்பின கல்யாணப்பத்திரிகையை இரண்டு ரூபாய் தண்டம் அழுது வாங்கினது யார் கணக்கு, சொல்லுங்க?"

- வேதபுரி எஸ். ரமேஷ்



ஆதித்யா என்ற ஒன்பது வயதான சிறுவன் இந்தி திரைப்படம் ஒன்றிற்கு இசையமைப்பாளராக அறிமுகமாகியுள்ளான். இவன் தாய் பிரபல இந்தி திரைப்படப் பின்னணிப் பாடகி அனுராதா பௌட்வால். சமீபத்தில் காலமான இவரது கணவர் அருண் பௌட்வால் மராத்தி - இந்தி இசை அமைப்பாளர்.

ஆதித்யாவின் சகோதரி கவிதாவும் இசை அமைப்பாளரே! இவர்களுக்கு சங்கீத குரு உஸ்தாத் அல்லா ரக்கா.

ஆதாரம் : ஸ்கிரீன்
தகவல் : எஸ். ஆலன்



தரப்படும் கூடுதல் விலையை விடவும் மிக அதிகமாக விநியோக விலை உயர்ந்துள்ளதே?' என்று கேட்டால் அரசிடமிருந்து பதில் இல்லை!

கடைசியாக, தற்போது ரூபாயின் மதிப்பு குறைந்து போக, ஒரு டாலருக்குத் தரப்பட வேண்டிய ரூபாய்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது; எனவே, இறக்குமதியாகும் கச்சா எண்ணெய்க்கு அதிக விலை தரவேண்டியிருக்கிறது என்கிறது அரசு. ஆனால் சர்வதேச மார்க்கெட்டில் கச்சா எண்ணெயின் விலை சரிந்திருப்பதை அரசு மக்களுக்கு எடுத்துச் சொல்வதே கிடையாது!

ஆக மொத்தம், நிதி அமைச்சர் கூற்றில் நியாயம் இருந்தாலும், அது ஓரளவுக்கு மட்டுமே நியாயம். உர உற்பத்தி, பெட்ரோலியம் சுத்திகரிப்பு போன்றவற்றின் செயல்திறனை அரசு அதிகரித்தால் மான்யங்களும் குறையும்; விலைகளும் இறங்க வாய்ப்புண்டு.

மாறாக அரிசி, சர்க்கரை விலை உயர்வோடு டீசல் விலையும் உயர்வதால் லாரி வாடகை உயர, எல்லாப் பண்டங்களின் விலையும் உயரும். இதற்கேற்ப விலைவாசிப்புள்ளி உயர, மாதச் சம்பளக்காரர்களுக்கு கிராக்கிப்படி உயரும். அதனால் மேலும் விலைவாசி உயர, மேலும் கிராக்கிப் படி ஏற, விஷ வட்டம்தான்! அன்றாடங் காய்ச்சிகளுக்கோ கிராக்கிப்படியும் கிடையாது! வாசற்படியும் வயிற்றுப் பசியும் தான்!

மக்கள் நலனை இந்த அரசு மெய்யாஒமே கருதுகிறது என்றால், 'ஒவ்வொரு எம்.பிக்கும் ஒரு கோடி' என்பது போன்ற உற்பத்திக்கு உதவாத தண்டச் செலவினங்களை அடியோடு நிறுத்த வேண்டும். வோட்டுப் பிடிக்கும் நோக்கிலும் வசதிகளைப் பெருக்கிக் கொள்ளும் வகையிலும் அரசியல்வாதிகளும் அதிகாரிகளும் கோடி கோடியாக ஊதாரித்தனமாகச் செலவிடுகிறார்கள். இப்படி கண்ணுக்குத் தெரியாமல் விரயமாகும் பணத்தை மிச்சப்படுத்தினால் மான்யங்கள் தலையில் கை வைக்காமலேயே பட்ஜெட்டில் அபிவிருத்தித் திட்டங்களுக்குப் போதிய அளவில் நிதி ஒதுக்கீடு செய்ய இயலும்.

ஆனால் வடிகட்டின சுயநலவாதிகளாகி விட்ட நமது அரசியல்வாதிகளும் அதிகார வர்க்கமும் இதற்குச் சம்மதிக்கவே போவதில்லை. மக்கள்தான் விலைவாசி உயர்வுக்குச் சம்மதிக்கும் சாதுக்களாக விளங்குகிறார்கள்.

- வி. கோபாலன்

# எம்.எல்.ஏக்களுக்கு ஒரு கட்டாயப் பாடம்!

**சி.எஸ்.ஸின் சுயசரிதையை 'திருப்புமுனை' என்ற தலைப்பில், (முதல் தொகுதி 1932-1962), நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியிட்டிருக்கிறது. வெளியீட்டு விழாவில் -**

முழு நூலையும் படித்து, நிறைய குறிப்புகள் எழுதி எடுத்துக் கொண்டு வந்திருந்தார் நாவலர். அதிலும் ஆளுநர்



● புத்தக வெளியீட்டு விழாவில்...

பற்றி, தமக்குச் சாதகமான பகுதிகளைப் புத்தகத்திலிருந்து படித்துக் காண்பித்தார். ''ஆளுநர் நியமனைப்பு இஞ்சின் மாதிரி. பிரச்னை வந்தால் மட்டுமே அவர் தலையிட்டு அதைத் தீர்த்து வைக்க வேண்டும்'' என்ற ராஜாஜியின் வாசகத்தை மேற்கோள் காட்டினார்!

''அன்றைக்கெல்லாம் சட்ட சபை எப்படி இருந்தது. இன்றைக்கு எப்படி ஆகி விட்டது!'' என்று ரொம்பவும் ஆதங்கப் பட்டார். ''அன்று 'கருத்தோடு கருத்து' மோதினார்கள். இன்று கை, கால், மைக் எல்லாம் எடுத்து மோதுகிறார்கள்!''

''குறைந்த பட்சம், அந்த நாளைய சட்ட சபை நிகழ்ச்சிகளின் ஐந்து வருடத் தொகுப்பைப் படிக்கச் சொல்லி, அதில் தேர்வு வைத்து, தேறுகிறவர்களுக்கு மட்டுமே தேர்தலில் நிற்க டிக்கட் கொடுக்க வேண்டும்'' என்று ஆர்.வி. சொன்ன போது பயங்கர கைதட்டல். டி.என். சேஷன் காதில் இது விழுந்து தொலைக்காமல் இருக்க வேண்டுமே என்று அரசியல்வாதிகள் வேண்டிக் கொண்டிருப்பார்கள்!

தாமும், சி.எஸ்ஸும் தமிழ்நாட்டு அரசியலில் இரட்டையர்கள் என்றார் ஆர்.வி. சொல்லும் போது குரலிலும், முகத்திலும் பெருமிதமும், அந்நியோன்யமும் வெகு துல்லியமாகத் தெரிந்தன.

இந்த நூலை இளைஞர்களுக்கு, குறிப்பாகச் சட்ட சபை உறுப்பினர்களுக்குப் படிக்கக் கொடுக்கலாம் என்றும் கேட்டுக் கொண்டார் சி.எஸ். நாவலருக்குத் தர்ம சங்கடமாயிருந்தது.

நாவலர் தம்மைத் தோற்கடித்தவர் என்று சி.எஸ். கூறிய போது, நாவலர் முகத்தில் சின்ன அதிர்ச்சி. ''நான் பத்து வருடங்கள் நிதி அமைச்சராக இருந்தேன். நீங்கள் அதை முறியடித்து விட்டீர்கள்!'' என்று புதிரை அவிழ்த்தார் சி.எஸ்.

பி.ராமமூர்த்தி பற்றி, சற்று நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தார் சி.எஸ். ''அவருடைய திறமை அசர வைக்கக் கூடியது. ஆட்சியில் வாய்ப்பு மட்டும் கிடைத்திருந்தால், அவர் நிச்சயம் ஒரு மிகச் சிறந்த நிர்வாகியாக இருந்திருப்பார்!''

வெளியீட்டாளர் சார்பாக ப. மாணிக்கம் சி.எஸ்.ஸின் நிர்வாக ஆற்றலைப் புகழ்ந்தார்.

சி.எஸ். ஆங்கிலத்தில் எழுதிய 'Hands of Destiny' தான் 'திருப்புமுனை'. ''விதியின் கைகள்'' என்றெல்லாம் மொழி பெயர்ப்பது எனக்குப் பிடிக்கவில்லை'' என்றார் சி.எஸ். நூலை மொழி பெயர்த்தவர் கருப்பையா.

– நம்பி

◆ ''ஜெயலலிதா பதவி இழப்பாரா?'' தலையங்கம் அருமை. படித்தவுடன் மன நிறைவைத் தந்தது. தாங்கள் கூறியுள்ளது போல் அபரிமிதமான பெரும்பான்மை யுடன் அமைந்துள்ள ஓர் அரசைக் கவிழ்ப்பது எந்த விதத்தில் நியாயம்? ஆதாரமற்ற குற்றச் சாட்டுக்கள் எதிர்க் கட்சிகளின் வீழ்ச்சிக்கே

# அமைச்சரின் கதி என்னவாகுமோ?

வித்திடும் என்பது வெள் ளிடை மலை.
சென்னை - 24, ஆர். சிவகுமாரன்.

◆ 'ஜெ'குறித்த மற்ற குற்றச்சாட்டுகள் எப்படியோ, ''டான்சி'' ஊழலுக்கு அழுத்த மான ஆதாரம் இருக்கவே செய்கிறது. இது தெரிந்திருக்கின்ற காரணத்தாலேதான் அம் மையார், சுப்ரமணிய சாமியின் மனு, தேர் தல் கமிஷனுக்கு அனுப்பப்பட வேண்டும் என்ற வழக்கில், நீதிமன்றம் நீதிமன்றமாக வழக்கைத் தள்ளி, தீர்ப்பு வெளியாவதை ஒத்திப் போட்டுக் கொண்டே இருக்கிறார்.
சென்னை - 14, பொ. வஜ்ரவேலு.

◆ 'மகாநதி'க்கான கல்கியின் பாராட்டே கமலுக்கு விருது கிடைத்த மாதிரிதான்.
தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

◆ பொள்ளாச்சி எம்.எல்.ஏ., வி.பி. சந்திர சேகரின் போலித்தனம் இல்லாத பேட்டி பாராட்டும்படி இருந்தது.
மதுரை - 16, ஆர். கார்த்திகேயன்.

◆ குட்டி யானைக்கு வனத்துறை அமைச்சர் லாரன்ஸின் பெயர் வைக்கப்பட்டுள்ள விஷ யம் முதல்வருக்குத் தெரிந்தால் அமைச்சரின் கதி என்னவாகுமோ, பாவம்!
இரணியல், இரணியல் கலை.

◆ 'இங்கே... இவர்கள்... இப்படி' பகுதி மூலம் சில ஆச்சர்யப் புள்ளிகளைப் பற்றி வெளி உலகத்திற்கு வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கிறீர்கள். பாராட்டுக்கள்.
வெள்ளலூர், ந. மாணிக்கவாசகம்.

◆ 'காந்தி அருகே பிராந்தி' என்கிற செய்தி யைப் படிக்கையில் -
காந்தி சிலையருகே
பிராந்திக்கடை -
எடுக்கச் சொல்லி போராட்டம்
எடுத்துவிட்டார்கள்
காந்தி சிலையை!
என்ற கவிதை வரிகள்தான் நினைவுக்கு வந்தன!
அரக்கோணம், ஏ.கு. சம்பத்ராஜ்.

◆ 'சுற்றுலா சொர்க்கம்' என்ற தலைப்பில் வெளியான கட்டுரை யைப் படித்ததும் பொள்ளாச்சி யைப் பார்க்காமல் இத்தனை நாள் இருந்து விட்டோமே என்று தோன்றியது. அட்டைப்படம் அழகோ அழகு.
தாராபுரம், பி. ராஜன்.

◆ 'பிறவிக்குணம்' சிறுகதை மூலம் நெஞ்சை நெகிழச் செய்துவிட்டார் ஆர்னிகா நாசர்.
சேலம் - 1, கே. ராஜபாலு.

◆ 'அஹிம்சா மூர்த்திக்கு ஓர் அவசரக் கடிதம்' மனத்தை உருக்கிய கவிதை.
திருச்சி - 4, தாயு. ஆண்டாள்.

◆ தராசு பதில்கள் பகுதியில் நடிகை ராதிகா பேட்டி பற்றிய கேள்விக்கு ''பேட்டி கண்ட வர் நம்ம ஆள் ஆச்சே!....'' என்று பதில் வழங்கியுள்ளீர்கள். எங்கள் ஊரில் மெட் ராஸ் டீ.வி. தெரிவது இல்லை. பேட்டி கண்டவர் யார் எனத் தெரியாமல் எங்கள் மண்டை குழம்பியதுதான் மிச்சம்!
திருவட்டார், தா. சிந்து குமார்.

(கல்கியில் அடிக்கடி எழுதிவரும் எஸ். சந்திரமௌலிதான் - ஆர்.)

◆ பிறவிக்குணம், மெய் இரண்டும் மனத் தைக் கனக்க வைக்கக் கூடிய அருமையான சிறுகதைகள்.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

◆ ''தேங்காய் நார்க்கழிவை என்ன செய் வது?'' இனி கவலையே வேண்டாம். பொள் ளாச்சி அருகே அரசன்பாளையம் என்னும் கிராமத்தில், விஸ்கோஸ் நிறுவனம், 'காயிர்-பிளஸ்' (Coirplus) என்னும் நவீன ஆலையை நிறுவியுள்ளது. இந்த ஆலையின் மூலப் பொருளே 'பித்' (Pyth) எனப்படும் தேங்காய் நார்க் கழிவுதான். ''டென்மார்க்'' நாட்டின் தொழில் நுட்பத்தின் அடிப்படையில் தேங்காய் நார்க்கழிவிலிருந்து ஒருவகை ஊட்ட மேற்றப்பட்ட, இயற்கை உரத்தைத் தயாரித்து, நூறுசதம் ஏற்றுமதி செய்யப் போகிறார்கள். இனி இந்தக் கழிவுப் பொருளை அங்கு அனுப்பி வைக்கலாம். இதன் மூலம் உபரி வருமானமும் கிடைக் கும்.
கோவை - 45, கலைக்கண்ணன்.

# பெறுவீர் சான்மேக் கிஃப்ட் கார்டு.




## 5வது ஆண்டு நிறைவு விழாவையொட்டி சான்மேக் சிட்ஸ் அளிக்கும் சிறப்புச்சலுகை

### சான்மேக் கிஃப்ட் கார்ட்

எந்தவொரு சீட்டு குரூப்பிலும், சேரும் ஒவ்வொரு சந்தாதாரரும் பெறும் சிறப்புரிமை இது.

இந்த கிஃப்ட் கார்ட் பெறுவதைத் தொடர்ந்து சான்மேக் சிட்ஸிலிருந்து மட்டுமின்றி மற்ற சான்மேக் குரூப் நிறுவனங்களிடமிருந்தும் பலப்பல பயன்களை பெறலாம்.



அறிமுகம்

விசேஷ சீட்டு குரூப்புகள் ரூ.10,000 முதல் ரூ.5 லட்சம் வரை ஒவ்வொரு சந்தாதாரருக்கும் பரிசு உண்டு.

## சான்மேக் சிட்ஸ் லிமிடெட்

SANMAC CHITS

பதிவு & தலைமை அலுவலகம்

'ஜெம்ஸ் கோர்ட்', A-8 முதல் மாடி, 14 காதர் நவாஸ்கான் ரோடு, சென்னை-600 006. போன்: 8250601/8251232.

கிளை அலுவலகங்கள்: சென்னை அண்ணா சாலை, போன்: 8277363 • தி.நகர், போன்: 8278515, 8258637 • அசோக்நகர், போன்: 4824757 • மயிலாப்பூர், போன்: 4992488 • அண்ணாநகர் மேற்கு, போன்: 6214454 • மேற்கு தாம்பரம், போன்: 401934 (PP) • புரசைவாக்கம், போன்: 6425036. மதுரை போன்: 23334 • கோயம்புத்தூர் போன்: 46375 • திருச்சி போன்: 25324 • திருவண்ணாமலை போன்: 22922, 23333 • கும்பகோணம்: • திருநெல்வேலி போன்: 322032.

**BID FOR A BETTER LIFE**

# நட்பில் ஏற்பட்ட விரிசல்!



● நட்பில்....



● ....விரிசல்

●● கர்நாடக முதல்வர் வீரப்பமொய்லி மத்திய அமைச்சர் ஜாபர்ஷெரீஃபுக்கு ரொம்பவும் நெருக்கமானவர். மொய்லியின் ஆதரவாளராக நின்று டெல்லியிடம் போராடியிருக்கிறார். இப்படியிருந்த இவர்களின் நட்பில் திடீரென்று விரிசல். காரணம், நரசிம்மராவின் 'கட்டளைப் படி' விலக்கப்பட்ட அமைச்சரும் மொய்லியின் எதிர்ப்பாளருமான ராஜசேகர மூர்த்தியின் வீடு தேடிச் சென்று மொய்லி சமாதானம் செய்து கொண்டதுதான். ஷெரீஃப் நிறைய ஊழல் செய்துள்ளார் என்று ராஜசேகரமூர்த்தி குற்றச்சாட்டுகள் சுமத்தியவர். இதனால் மொய்லியும் ஷெரீஃபும் கலந்து கொள்ளவிருந்த இரண்டு ரயில்வே விழாக்களிலும் மொய்லியின் பெயரை நீக்கச் சொல்லி வேறொரு அமைச்சரைப் போட்டு அழைப்பிதழ் அடிக்கச் சொன்னார் ஷெரீஃப். கடைசி நிமிடத்தில் என்ன நினைத்தாரோ அந்த அழைப்பிதழையும் ரத்து செய்யச் சொல்லி விழாவையே தள்ளிப் போட்டு விட்டார்....

●● கிண்டர்கார்டன் மற்றும் நர்சரிப் பள்ளிகளில் சேர்க்கப்படும் குழந்தைகளுக்கு இன்டர்வ்யூ, மற்றும் டெஸ்டுகள் வைத்துத்தான் சேர்த்துக் கொள்வது என்ற நடைமுறைக்கு, வரும் ஆண்டு முதல் தடை விதித்திருக்கிறது கர்நாடக அரசாங்கம். ''பள்ளிக்கூடம் போக வேண்டுமே என்ற பயத்துடனேயே வரும் பிஞ்சுமனங்களுக்கு இம்மாதிரியான முதல் அனுபவமே படிப்பின் மீது பயத்தையும் வெறுப்பையும் உண்டு பண்ணிவிடுகிறது. கிண்டர்கார்டனில் சேருவதற்கு வரும் பருவம், குழந்தைகளுக்கு ஒரு சென்ஸிடிவ் பருவம். அப்போது அவர்களிடம் கேள்வி கேட்பதும் எழுதச் சொல்லியும் படிக்கச் சொல்லியும் கட்டாயப்படுத்துவதும் மனோதத்துவ ரீதியில் சரியானதல்ல. தனியார் பள்ளிகளும் இந்த கட்டுப்பாட்டுக்குள் வரவேண்டும் என்று எதிர்பார்க்கிறேன்'' - என்று அறிவித்திருக்கிறார் கல்வி அமைச்சர் திருமதி நாகம்மா கேசவமூர்த்தி.

●● பெங்களூரிலுள்ள ஒயிட்ஃபீல்ட் நகரம் இவ்வளவு நாட்களும் சாயிபாபாவுக்காக மட்டும் புகழ்பெற்றிருந்தது. இனிமேல் அதிநவீன தகவல் தொழில் நுட்ப வளாகம் ஒன்று சிங்கப்பூர் அரசின் உதவியுடன் அங்கே அமைந்து மொத்த இந்தியாவின் கவனத்தை ஈர்க்கப் போகிறது. 'சிங்கப்பூரிலுள்ள பல தனியார் நிறுவனங்கள் இங்கே முதலீடு செய்ய ஆர்வமாயிருக்கின்றன' - என்று அறிவித்தார் சிங்கப்பூர் பிரதமர் கோக் சோக் டாங். இந்தியாவில் சிங்கப்பூரின்

● புதிய தடைச் சட்டம்...



முதல் முதலீடு இது. ஐம்பத்து நான்கு ஏக்கர் நிலப்பரப்பில் அமையப் போகும் இந்த தொழில் நுட்ப வளாகம் சாஃப்ட்வேர் மற்றும் மின்னணு கருவிகளைத் தயாரிக்கப் போகிறது. வருட உற்பத்தி மட்டும் சுமார் 20 பில்லியன் இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. சுமார் பதினெட்டாயிரம் பேருக்கு வேலை கிடைக்கும். கர்நாடகத்தைச் சேர்ந்தவர்கள் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். மற்றவர்கள், குறிப்பாகத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் ஒரு சோகப் பெருமூச்சு விடலாம்... ஏனெனில் தமிழ்நாட்டுக்கு அடித்திருக்க வேண்டிய இந்த அதிர்ஷ்டம், ஆட்சியாளர்களின் மெத்தனத்தினால் திசை மாறிச் சென்று பெங்களூருக்கு வாய்த்தது என்பதுதான்!

●● பெங்களூர் லால்பாக்கின் மேற்குத்திசை மூலையில் ஓர் அழகான ஏரி இருக்கிறது. அந்த ஏரியில் படகுச் சவாரி இருந்தது. சுற்றுலாப் பயணிகள் மகிழ்ச்சியுடன் பயன்படுத்திக் கொண்டிருந்த அந்த உல்லாசச் சவாரி இப்போது நிறுத்தப்பட்டு விட்டது. காரணம், இரவோடு இரவாகச் சில சமூகவிரோதிகள் யாரையோ கொலை செய்து அங்கே கொண்டு வந்து போட்டது, மற்றும் ஒரு சிலர் தற்கொலைக்கு அந்த ஏரியைப் பயன்படுத்திக் கொண்டது போன்றவை. மறுபடி அந்த ஏரியில் படகுச் சவாரி விட வேண்டும் என்ற கோரிக்கை எழுப்பப்பட, தனியாருக்குக் காண்டிராக்ட் விட்டு, மோட்டார் படகு சவாரி ஆரம்பித்தார்கள். வந்தது வம்பு! இப்போது எதிர்ப்பு, பறவை ரசிகர்களிடமிருந்து. 'அந்த ஏரியைச் சுற்றிலும் மற்றும் ஏரிக்கு நடுவேயிருக்கும் தீவின் மரங்களையும் பல்வேறு பறவைகள், தங்களின் பிலி சரணாலயமாக்கிக் கொண்டிருக்கின்றன. ஏரியில் மோட்டார் படகு விடுவது அவற்றின் அமைதிக்கு ஊறு விளைவிக்கும். ஆகவே அரசாங்கம் படகுச் சவாரிக்கு உடனடியாகத் தடைவிதிக்க வேண்டும்' என்று எதிர்ப்புக் கிளம்ப, அரசாங்கம் வேறு வழியில்லாமல் உடனடியாக நிறுத்திவிட்டது. காண்ட்ராக்ட் எடுத்திருப்பவருக்கு ஏதாவது செய்தாக வேண்டுமே... அதனால் மோட்டார் படகுகளைத் தடை செய்துவிட்டு, துடுப்புப் படகுகள் மற்றும் பெடலிங் படகுகளை மட்டும் அனுமதிக்கலாமா என்று யோசித்து வருகிறார்கள்.

பெங்களூரிலிருந்து :
**பெர்னாண்டஸ்**



# ரோடு ரோலர் முழுங்கிகள்!

●● மலை முழுங்கி மகாதேவனை எத்தனைபேர் பார்த்திருப்பார்களோ தெரியாது. ஆனால், ரோடு ரோலர் முழுங்கிகளைக் கேரள மக்கள் உணர்ந்து ஆச்சரியப்பட்டுப் போயிருக்கிறார்கள்! ஆமாம்; கல்லடையிலுள்ள நீர்ப்பாசனத் திட்ட அலுவலகத்தில் என்னென்ன பொருட்கள் இருக்கின்றன என்பதைக் கணக்கெடுத்தபோது, ஏழு ரோடு ரோலர்களைக் காணவில்லை! இது பற்றி விசாரணை நடத்திய எக்ஸிகியூடிவ் எஞ்சினியர், தம்மால் கண்டு பிடிக்க முடியவில்லையென்று பொறுப்பைப் போலீஸிடம் ஒப்படைத்திருக்கிறார்!

●● கேரள மின்சார வாரியம் ஏதாவது நஷ்ட ஈடு தர வேண்டுமென்று நீதி மன்றமோ அல்லது நுகர்வோர் நீதி மன்றமோ தீர்ப்பு வழங்கினால், இனி அந்த நஷ்ட ஈட்டை மின்வாரியம் கொடுக்காது; சம்பந்தப்பட்ட அதிகாரிகளோ அல்லது ஊழியர்களோதான் தர வேண்டுமென்று மின்சார வாரியம் முடிவெடுக்கப் போகிறதாம்! அந்த முடிவைச் சீக்கிரம் எடுங்கள் என்று மக்கள் கோரிக்கை விடுத்திருக்கிறார்கள். ஆனால் வாரியம் அவ்வளவு சீக்கிரம் அசைந்து கொடுத்து விடுமா, என்ன? ஊழியர்களும் அதிகாரிகளும் தான் அவ்வளவு சுலபமாக ஒப்புக் கொண்டு விடுவார்களா?

திருவனந்தபுரத்திலிருந்து :
**எஸ். எஸ். மணி**

# கபில்தேவின் உலகமகா சாதனை பற்றி..?


* உலக சாதனை!

● பத்மசிவாஜி, நீடாமங்கலம்.
? முதல்வரிடம் காணும் பிளஸ் பாயிண்ட் எது?
! மக்கள் ஆதரவு, அமோக அளவில்.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை.
? "வளர்த்த கடா மார்பில் பாய்வது என் ஜாதக விசேஷம்" என்கிறாரே, கருணாநிதி. ஜாதகத்தின் மேல் அவருக்கு நம்பிக்கை வந்து விட்டதா?
! ஜாதகத்தின் மேல் நம்பிக்கையோ இல்லையோ, பழமொழி மீது அபார நம்பிக்கை ஏற்பட்டிருக்கும்.

● வி. சிவா, மதுரை.
? "அரசியலில் தமிழக காங்கிரஸ் தலைவர்கள் விஷத்தைக் கலக்குகிறார்கள் என்று ஜெ. பிரதமரிடம் குற்றம் சாட்டியுள்ளாரே?
! 'நாங்கள் விஷயத்தைக் கலந்தால் அவருக்கு விஷமாகத் தோன்றுவது ஏன்?' என்று காங்கிரஸ்காரர்கள் கேட்கக் கூடும்!


* நியமனம் சரியா?


* ஜாதகம்!

● வே. பார்த்தசாரதி, பாண்டி.
? தபால் கட்டணங்கள் அனைத்தும் உயரப் போகிறதாமே...?
! அதனால் என்ன, இன்றைக்கு ஒரு கார்டில் பதினைந்து கேள்விகளை எழுதுவோருக்கு முப்பதாக அடைக்கத் தெரியாதா என்ன? ஹி...ஹி.. நான் உங்களைச் சொல்லலை!

● பிரான்சிஸ், கும்பகோணம்.
? 'போலீஸை இழிவுபடுத்தும் படத்தில் நடிக்க மாட்டேன்' என்கிறாரே, சரத்குமார்?
! கடைசி காட்சியில் மட்டுமே போலீஸ் வருவது கூட அவர்களை இழிவு படுத்துவதற்குச் சமானம்தான்.

● முஸ்தபா, தக்கோலம்.
? பெண்டாட்டிக்குப் புருஷன் காய்கறி நறுக்கிக் கொடுக்கலாமா?
! வீட்டில் பெண்டாட்டிக்கு மட்டும்தான் சமையல் நடக்கிறதா என்ன? எல்லோரும் தானே உட்கார்ந்து சாப்பிடுகிறோம்?

● ஆர். உமா, திருச்சி.
? ஈ, காப்பி போன்ற வசதிகள் ஜெ. போக்குவரத்துக் கழக பஸ்களில் இருந்தும் எக்ஸ்பிரஸ் பஸ்களில் உள்ள அதே கட்டணம்தானாமே?


* ஆட்டோ ஓட்ட...

! வசதிகளைக் காசு தந்துதான் பெற வேண்டும் சகோதரி! வேட்டி, புடைவை விவகாரம் என்று நினைத்து ரேஷன் கார்டோடு பஸ் ஏறாதீங்க!

● எஸ். குமார், காரைக்குடி.
? காம்ப்ளி 82, சித்து 99, டெண்டுல்கர் 96 மூவருமே செஞ்சுரியைக் கோட்டை விட்டது ஏன்?
! இதுதான் கிரிக்கெட்டில் சுவாரஸ்யத்தைக் கூட்டும் சமாசாரம்! நிற்க, செஞ்சுரியைக் கோட்டை விட்டால் என்ன? வெற்றிக் கோட்டையைப் பிடிக்க உதவியிருக்கிறார்களே!

● அபி அருண், கோவை.
? சேஷன் கார்டு, ரேஷன் கார்டு போல ஆகிவிடுமா?
! என்னைக் கேட்டால் இரண்டையும் ஒன்றாக்கி விடலாம்; செலவு பாதியாகக் குறையும். ரேஷன் கார்டு மோசடிகளும் நீங்கும்!

● பி. ராஜன், தாராபுரம்.
? சமீபத்தில் வருத்தப்பட வைத்த விஷயம்?
! 55 பேருக்கு மேல் அநியாயமாக உயிரிழந்த

நிலக்கரிச் சுரங்க விபத்து.

● ஆர். சங்கரநாராயணன், குணசீலம்.

? விளம்பரத்தில் கொண்டு போய் லட்ச லட்சமாய்க் கொட்டுகிறார்களே, சினிமாக்காரர்கள்?

! இல்லாவிட்டால் டீ.வி. போதையில் இறங்கிக் கிடப்பார்களே. அது போக, விளம்பரத்தால் சில நன்மைகளும் உண்டு. பாலக்காடு விக்டோரியா கல்லூரியில் பணத் தட்டுப்பாடு காரணமாக ஓர் ஆபரணமாளிகையை அணுக, அவர்கள் விடை எழுதுகிற வெள்ளைத் தாள்களை ''ஸ்பான்ஸர்'' செய்திருக்கிறார்கள்!


● வேறுத்து துணை தந்தார்!


● மீண்டும் ஆவாரா?

● பிரபல்யா, ஈரோடு.

? மீண்டும் கலைஞரும் வை.கோ.வும் இணைந்தால்?

! நாஞ்சிலார் அளவுக்கு வை.கோவும் நம் மதிப்பில் தாழ்ந்து போவார்!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

? 'கடையேழு வள்ளல்களின் மொத்த உருவமாக விளங்குகிறார் ஜெயலலிதா' என்று இந்திரகுமாரி வர்ணித்திருப்பது பற்றி...?

! கடவுளாகவே கருதி, கட் அவுட்களிலும் காலைப் பேப்பர்களிலும் வணங்க ஆரம்பித்து விட்ட பிறகு, (கடையேழு) வள்ளல் என்று வர்ணிப்பதுதானா பிரமாதம்?


● பிளஸ் பாயிண்ட்!


● உறுதி மொழி!

● ச. சொர்ண சண்முகம், பாப்பாங்குளம்.

? தான் படித்த படிப்புக்கு ஏற்ற வேலை கிடைத்தால்தான் பார்ப்பேன் என்று அடம் பிடிக்கும் இளைஞர்கள் பற்றி...?

! அ... ஒட்ட ரெடியாக இருக்கும் சேஷ... இவர்கள் முன்னுதாரணமாகக் கொ...ண்டும்.

● டி. ..., ஆனத்தூர்.

? டெஸ்ட் கிரிக்கெட் வரலாற்றில் அதிக விக்கெட்டுகளை வீழ்த்தியவர் என்ற சாதனையை எட்டிப் பிடித்திருக்கும் கபில் தேவ் பற்றி...?

! ஏராளமான கிரிக்கெட் ரசிகர்களைப் போல் நானும் மகிழ்கிறேன். நாட்டுக்கே பெருமை என்று பூரித்துப் போகிறேன். அதே சமயம், ஹாட்லி இவரை விடக் குறைந்த அளவு மாட்ச்கள் விளையாடி, குறைந்த அளவு பந்துகள் வீசி, குறைந்த அளவு ரன்கள் கொடுத்து 431 விக்கெட்டுகளை வீழ்த்தியிருக்கிறார் என்பதை உணர்ந்து அடக்கமும் பெறுகிறேன்.

● முருகேசன், தேனி.

? இன்பசாகரன் மீண்டும் பணி நியமனம் செய்யப்பட்டது பற்றி...?

! ஊழலுக்கு லைசென்ஸ் வழங்கி வந்த பல அரசுகளை நமக்குத் தெரியும்; ஆனால் ஊழலுக்குப் பாராட்டும் பரிசும் வழங்கும் சாதனை புரிந்திருப்பது 'ஜெ' அரசு மட்டுமே! இந்தத் துணிச்சல் அம்மையாருக்கு அன்றி வேறு யாருக்கு வரும்!

● ஆர். விஜி, அரகண்டநல்லூர்.

? 'செனட் உறுப்பினராக 'சோ'வை கவர்னர் நியமித்தது கேவலமான செயல்' என்று கூறும் வீரமணியின் கூற்று சரிதானா?

! யோசித்துப் பார்த்தால் 'சோ' வின் நியமனத்துக்கு ஆட்சேபனை தெரிவிக்கச் சில நியாயமான காரணங்கள் அகப்படக் கூடும். ஆனால் வீரமணி ஜாதியைப் புகுத்தி தமது ஆட்சேபனை சாரமிழந்து போகச் செய்து விட்டார்.

● ஈ.ஏ. அப்துன் நஸீர், வலங்கைமான்.

? ஷெரீப் பதவி ஏற்ற போது போகாத ஜெ., ஷெரீப்புக்குப் பாராட்டு விழா நடத்திய ஜெ. ஒப்பிடுக.

! முதலாவது, குதிரை கீழே தள்ளிய அநியாயம்; இரண்டாவது, குழி பறித்த அக்கிரமம்!

● குசை அருளானந்தம், காரைக்கால். ❑

? பொற்கோயிலில் பூட்டாசிங் செருப்புத் துடைத்தாராமே?

! ஆட்சியில் இருந்த போது கடமையாகக் கருதி மனச் சாட்சிக்கு விரோதமாகக் கூட அவர் சில காரியங்களைச் செய்திருக்கலாம். உள்ளுணர்வு உறுத்த தற்போது பரிகாரம் காண முற்படலாம். இந்த ஆன்மீக உணர்வுக்கு ஆட்சேபம் தெரிவிக்கும் காங்கிரஸ் காரர்கள் காந்தியத்தைக் கொலை செய்கிறார்கள்.

❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
எஸ். அருளானந்தம்,
14, கைலாசநாதர் கோயில் சந்து,
காரைக்கால் - 609 602.



# சிந்துநதி-பூ

**என்ன கதை?** டைரக்டருக்கே தெரியுமோ என்னவோ? இரண்டு மணி நேரம் பழிவாங்குவது எப்படி என்று அவரை தாராளமாய் பேட்டி எடுக்கலாம்.

அப்படி இப்படி துழாவி, படத்தின் முடிவுக் காட்சியில், 'விதவைகள் மதிக்கப்பட வேண்டும்' என்ற விஷயத்தை நாம் புரிந்து கொண்டோம்.

எல்லோரும் புது முகங்கள். டைட் குளோஸ் அப்பில் கண்ணீர் வழிந்தால் அது சோகம். ஆற்றங்கரையோரம், வரப்புகளில் நடந்தால் அது சந்தோஷம். எத்தனை நாளுக்குத்தான் சவடிச் சாங் காப்பி அடிப்பார்களோ? கொஞ்சமாவது ஒரிஜினாலிட்டி வேண்டாமா?

வாயைத் திறக்காமல் ஒரு ஹீரோ. சோகக்கடர் விளக்கு. மூக்கால் அழுகிறார். உபயோகமாக வேறொன்றும் செய்வதில்லை.

ஏரான செண்ட்டிமெண்ட்ஸ். ஆணிச் செருப்பு, முச்சந்தி தண்டனை என்று நிறையவே அளந்திருக்கிறார்கள். படத்தோடு அவையாவும் ஒட்டாமல் துண்டாய் நிற்கின்றன.

மனோரமா, வடிவேலு, ஜெய்சங்கர் என்று நிறைய எக்ஸ்ட்ரா பிட்டிங்ஸ். வஞ்சனையில்லாமல் நடித்திருக்கிறார்கள். கல்பனா தாலியை வேறு தூக்கிக் காண்பித்து கழற்றித் தருகிறார். நடிக்க இன்னொரு சான்ஸ் கிடைத்தால், சரி. விதவை என்றவுடன் பாட்டு, தாலியறுப்பு, வளையல் உடைப்பு, வெண் புடைவை கோணங்கித்தனங்கள் இதிலில்லை. ஹீரோயின் கலர் புடைவையில் வருகிறார்.

மிக அதிக வன்முறை. ரஞ்சித் பழைய ரஜினி ஸ்டைலில் கையைச் சுற்றி விட்டு, காலால் உதைக்கிறார். உயிர் பிழைப்பது இசைதான்.

எம்.ஆர். ராதா குரலில் வில்லன்; பாட்டிகள் டான்ஸ், பேபிகள் டான்ஸ்; எக்ஸ்ட்ரா. டைரக்டர் புதுசு. என்ன சொல்ல? பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்!

– துளசி

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு : 2345621. அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# மனித ஆற்றலை முடக்கும் மைக்ரேய்ன்!

## பத்து பில்லியன் டாலர் விரயம்!

**ப**த்து பில்லியன் டாலர்! இந்தத் தொகையைக் கற்பனை செய்து பார்ப்பதே நமக்குக் கஷ்டம். அமெரிக்காவில் ஆண்டு தோறும் பத்து பில்லியன் டாலர் விரயமாகிறது! எப்படி?.... 'மைக்ரேய்ன்' எனப்படும் ஒற்றைத் தலைவலி காரணமாக ஆயிரக்கணக்கான அமெரிக்கர்கள் அவதியுற, அந்தச் சமயத்தில் அவர்கள் வேலைக்குப் போகாமல் வீட்டில் முடங்க, அதனால் வீணாகும் மனித உழைப்பு நேரத்தைக் கணக்கிட்ட ஆய்வாளர்கள், அதன் மதிப்பு சுமார் பத்து பில்லியன் டாலர் என்று கணித்துள்ளனர்.

'மைக்ரேய்ன்' என்பது அமெரிக்காவுக்கு மட்டுமே உரிய பிரச்னையல்ல - உலகின் ஜனத் தொகையில் 10 முதல் 20 சத விகிதத்தினரைத் தலையைப் பிய்த்துக் கொள்ளச் செய்யும் வலி அது! ஒற்றைத் தலைவலி என்று சகஜமாக அழைக்கப் பட்டாலும் மைக்ரேய்ன் தாக்குதல் ஏற்பட்டால் தலையின் ஒரு பக்கம் மட்டும் வலிப்பதில்லை; 'கழுத்துக்கு மேல் உடலைத் தனியே கழற்றி வைத்து விட்டால் என்ன...?' என்று எண்ணும் அளவுக்குக் கபாலம் படாதபாடு படுகிறது!

உயர் ரத்த அழுத்தம் காரணமாக வரும் தலைவலி, சைனஸைடிஸ் எனப்படும் சளித் தொல்லையினால் வரும் தலைவலி, பசி முற்றியதால் வரும் தலைவலி, மூளையில் கட்டி உள்ளதால் ஏற்படும் தலைவலி என்று பலவகை தலைவலிகள் உண்டு. இவைபோல் அன்றி, மைக்ரேய்ன் என்பது தனியொரு ரகம். இதனை மருத்துவ வட்டாரத்தில் (தமிழில்) பிரதான தலைவலி என்று அழைக்கிறோம்.

உடலில் ஏற்படும் சில ரசாயன மாற்றங்களே பிரதான தலைவலிக்குக் காரணமாகின்றன. நமது ரத்தத்தில் பிளாட்லெட்ஸ்

பேராசிரியர் டாக்டர் ஆ. பன்னீர்

உடலில் ஏற்படும் சில ரசாயன மாற்றங்களே பிரதான தலைவலிக்குக் காரணமாகின்றன.

(platelets) என்ற செல் வகை இருக்கிறது. இந்த பிளாட்லெட்டின் ஓர் அம்சமாக இருப்பது செரோடோனின் என்ற ரசாயனப் பொருள். ஒருசில ரசாயன மாற்றங்கள் காரணமாக செரோடோனின், பிளாட்லெட் சிறையிலிருந்து வெளிப்பட்டு விட, அதனால் நிகழும் சங்கிலித் தொடரான விளைவுகள் நரம்பு மண்டலத்தைப் பாதிக்க, மைக்ரேய்ன் தலைவலியில் கொண்டு விடுகிறது!




## ஐந்து அங்க நாடகம்!

**ப**ல பேருக்கு எவ்வித எச்சரிக்கையும் இன்றி, திடீரென்று மைக்ரேய்ன் வந்து விடும். ஒரு சிலருக்கு மட்டுமே (சுமார் பத்து சதவிகிதத்தினர்) வாடிக்கையான சில முன்னெச்சரிக்கை சமிக்ஞைகள் முதலில் தோன்றி, பின்னர் படிப்படியாகத் தலைவலி ஏற்படும்.

'வரப் போகிறேன்' என்று எச்சரித்து விட்டு வந்து சேரும் மைக்ரேய்னை aura type migraine என்று அழைக்கிறோம். (aura சூழ்ந்திருக்கும் உணர்வு நிலை). இந்த வகை தலைவலி ஓர் ஐந்து அங்க நாடகத்தைப் போன்றது!

**முதல் அங்கம் :** தலைவலி ஏற்படுவதற்கு ஓரிரண்டு நாட்களுக்கு முன் சில மாற்றங்களை உணர முடியும். திடீரென்று, அதிக இனிப்பு சாப்பிட வேண்டும் என்ற உந்துதல், சாக்லேட் ஆர்வம், அகோரப் பசி, ஏராளமான சுறுசுறுப்பு அல்லது அதீதமான சோர்வு போன்ற உடற்கூறு மாற்றங்கள் நிகழும். குழப்பம், எரிச்சல், வெறுப்பு அல்லது அசாதாரண உற்சாகம், மகிழ்ச்சி போன்ற மனத்தளவிலான மாற்றங்களும் தோன்றும்.

**இரண்டாம் அங்கம் :** தலைவலி தோன்றுவதற்குப் பத்து, பதினைந்து நிமிடங்களுக்கு முன்னர் கண்களில் பளிச் பளிச்சென்று மின்னல் போன்ற பிரகாசம் தெரியும்; இதனால் கண் பார்வையில் இலேசான பாதிப்பு இருக்கும். பேச்சும் தடைப்பட்டு தடங்கலுடன் வெளிப்படும்; மனக் குழப்பம் உண்டாகும்... இந்தச் சங்கடங்கள் சுமார் கால் மணி நேரம் நீடித்து, மெள்ள மறைய, தலைவலி ஆரம்பமாகும்.

**மூன்றாவது அங்கம் :** ஆஹா! வலியென்றால் இதுவல்லவா வலி!' என்னும் அளவுக்கு நான்கு முதல் 72 மணி நேரம் வரை எவ்வளவு காலம் வேண்டுமானாலும் இந்தத் தலைவலி நீடிக்கும். 'விண் விண்' என்று தெறிக்கும் தலையைத் துண்டு அல்லது கைக்குட்டை கொண்டு அழுத்திக் கட்டிக் கொள்ளத் தோன்றும். சிறு அசைவு அல்லது அலுங்கல் கூட தலைவலியை அதிகப்படுத்தும்; வெளிச்சத்தைக் கண்டால் எரிச்சல் உண்டாகும். ஓசை, ஒலிகள், தூக்கலான வாசனை போன்ற எதுவுமே பிடிக்காத வெறுப்பு நிலை ஏற்படும். வீட்டின் இருட்டு மூலை ஒன்றைத் தேர்ந்தெடுத்து, முடங்கிக் கிடக்கவே தோன்றும்.

**நான்காவது அங்கம் :** 'அப்பாடா!' என்று பெருமூச்சு விடச் செய்யும் கட்டம். வலி குறைய ஆரம்பிக்கும். தலை முண்டாசைத் தளர்த்தலாம். சிலருக்குத் தலைவலி உச்சத்தை அடையும் மூன்றாவது கட்டத்தில் வயிற்றுக் குமட்டல் ஏற்பட்டு, சாப்பிட்டதெல்லாம் வெளியே வந்து விடும். இது நடந்த கையோடு தலைவலியும் போய் விடும். நான்காவது

அங்கம் நிவாரணம் பெறும் கட்டம்தான் என்றாலும் உடல் பழைய இயல்பு நிலைக்குத் திரும்பாமல் தளர்ந்து போய்த்தான் இருக்கும்.

**ஐந்தாவது அங்கம் :** நார்மல் நிலைக்குத் திரும்பும் இறுதிக் கட்டம் இது. வலி போனதோடு சோர்வும் நீங்கி உடல் இயக்கங்கள் இயல்பாகும்.

## தூண்டும் சக்திகள்

**மை**க்ரேய்ன் தொல்லைக்குப் பொதுவான காரணம் செரோடோனின்தான் என்றாலும் அந்த ரசாயனப் பொருளை ஊக்குவித்து பிளாட்லெட்டிலிருந்து வெளிப்படுத்தும் காரணங்கள் பல்வேறு :

- உக்கிரமான வெயில்
- கண் கூசச் செய்யும் வெளிச்சம்
- பயணம்
- பட்டினி
- நேரம் தவறி உண்ணுதல்
- மாத விலக்கு
- ஹார்மோன்களடங்கிய கருத்தடை மாத்திரைகள்
- ஐஸ்க்ரீம், சீஸ், சாக்லேட், கனிந்த வாழைப்பழம், புளிப்பான பழங்கள், சைனீஸ் உணவு வகையில் சேர்க்கப்படும் Mono Sodium Glutomate என்ற ரசாயனப் பொருள் போன்ற சில.
- மது பானம்
- தூக்கலான வாசனைகள்



• பேராசிரியர் டாக்டர் ஆ. பன்னீர் (நரம்பியல் துறைத் தலைவர், அரசினர் ஸ்டான்லி மருத்துவ மனை, சென்னை)

ஒரு சிலருக்கு மட்டுமே (சுமார் பத்து சதவிகிதத்தினர்) வாடிக்கையான சில முன்னெச்சரிக்கை சமிக்ஞைகள் முதலில் தோன்றி, பின்னர் படிப்படியாகத் தலைவலி ஏற்படும்.

இவை எல்லாமே செரோடோனின் ஊக்கிகள்தாம் எனினும், எல்லாருக்கும் எல்லா வகை ஊக்கிகளும் பாதகமாக அமையும் என்று சொல்ல முடியாது. இந்த ஊக்கிகளின் செயல்பாடு நபருக்கு நபர் வேறுபடும் என்பதால் அவரவர் தங்கள் தலைவலிக்கான தூண்டும் சக்திகளை அடையாளம் கண்டு, தவிர்ப்பதுதான் நல்லது.

## ஏன்? ஏன்? ஏன்?

மைக்ரேய்ன் தொல்லையால் அவதியுறாதவருக்கு அதன் கொடூரத்தைப் புரிந்து கொள்வதே ஓரளவு கஷ்டம்தான். 'நமக்கும்தான் தலைவலி வருகிறது; குரோசினோ அனாசினோ போட்டுக் கொண்டு வேலைக்குப் போய் விடறோம்; இவர் மட்டும் இப்படி ஒவ்வொரு முறையும் தலையில துணியைக் கட்டிக்கிட்டு உலகத்தைப் பறிகொடுத்த மாதிரி ஏன் இருக்கணும்?' என்று மைக்ரேய்ன் பேஷண்டைப் பார்த்து அவர் கேட்கக்கூடும். உண்மையில், அந்த வலியை அனுபவிப்பவர்களுக்குத்தான் அதன் தீவிரம் புரியும். அவர்களை அனுசரணையோடு நடத்துவது அவசியம். 'இப்படி அடிக்கடி தலைவலி வரவழைக்கக்கணுமா?' என்று நொந்து கொண்டு பயனில்லை. ஏனெனில், மைக்ரேய்ன் தலைவலிக்கான காரணங்கள் ஓரளவுதான் அவர்கள் கட்டுப்பாட்டில் இருக்கின்றன. பெரும்பாலும் உடற்கூறு அமைப்பே (genetic factors) மைக்ரேய்ன் தொல்லைக்கு ஒருவரை ஆளாக்குகிறது. வம்சாவளியாக வரக்கூடிய நோய்களுள் ஒன்று இது. புறத் தூண்டல்கள் நோயின் உள்ளிருப்பை உசுப்பி விட்டு விடுகின்றன. அந்த சமயத்தில் அவர்கள் அமைதியாய் இருப்பது மிக அவசியம். உடனிருப்போர் இதற்கு உதவ வேண்டும்.



## பாவம், பெண்கள்!

சிறு வயது முதலே மைக்ரேய்ன் தொந்தரவு ஏற்படுவதுண்டு. குழந்தைப் பருவத்தில் சரியான சிகிச்சை அளிப்பதன் மூலம் அதைக் குணப்படுத்தி விடுவது சாத்தியமே.

வயது வந்தவர்களுள் ஆண்களைக் காட்டிலும் பெண்களுக்கே மைக்ரேய்ன் அதிகம் வருகிறது. பெண்களின் உடலில் நிகழும் ஹார்மோன் சுழற்சி இதில் முக்கிய பங்கு வகிப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. கர்ப்பமுற்ற பெண்கள் மைக்ரேய்ன் தொல்லையால் அவதிப்படுவது மிக மிக அரிது என்பதைப் பார்க்கும் போது ஹார்மோன்களின் (குறிப்பாக ஈஸ்ட்ரோஜென்) சுரப்பு, சுழற்சிக்கும் மைக்ரேய்னுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்பது உறுதியாகிறது. தவிர, வயதாக ஆக, மைக்ரேய்னின் தீவிரமும் படிப்படியாகக் குறைந்து விடுகிறது என்பதும் கவனத்துக்குரிய விஷயம். நடுத்தர வயதை நெருங்கும் போது மைக்ரேய்ன் அடியோடு மறைந்து விடுவதும் உண்டு!

கருத்தடை மாத்திரைகள் உட்கொள்ளும் பெண்கள், புகை பிடிக்கும் பழக்கமும், கொலஸ்ட்ரால் உபாதையும் உடையவராயிருப்பின், அவர்களுக்கு மைக்ரேய்ன் தொந்தரவால் பராலிஸிஸ் வரும் வாய்ப்புக் கூட உண்டு.

## சிகிச்சை என்ன?

**மை**க்ரேய்னை அடியோடு ஒழிப்பதற்கான சிகிச்சை முறை இல்லை. எனினும் ஓரளவு கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்வதும் தவிர்ப்பதும் சாத்தியம்.

தலைவலி வந்தால் உட்கொள்ளக் கூடிய சில மருந்துகள் உள்ளன. ஒரு மருத்துவருடன் கலந்தாலோசித்து சரியான மருந் தைத் தேர்ந்தெடுத்துக் கைவசம் வைத்துக் கொள்ளலாம். 'தலை வலி நாடகத்தின்' முதல் அங்கத்தில் குறிப்பிட்டுள்ள முன்னறி விப்புகள் தோன்றும்போதே இந்த மாத்திரையை உட்கொண் டால் தலைவலியைத் தவிர்க்க முடியும். அதன் தீவிரத்தைக் குறைக்க முடியும்.

ஒரு மாதத்தில் இரண்டு மூன்று முறைகளுக்கும் அதிகமாக அடுத்தடுத்து மைக்ரேய்ன் படையெடுப்பு நிகழும் போது, வேறு சில வகை மருந்துகள் தருகிறோம். இவற்றைத் தொடர்ந்து ஆறு மாத காலம் உட்கொள்ள வேண்டி வரும். இவை வருமுன் காக்க ஓரளவு உதவும்.



எக்காரணம் கொண்டும் ஒருவர் தாமாக மருந்துகள் வாங்கி உபயோகிக்கக் கூடாது. டாக்டர்களின் அறிவுரைப்படியே செயல்பட வேண்டும். மைக்ரேய்னுடன் அதிகமான வாந்தி, வலிப்பு அல்லது வேறு அறிகுறிகள் இருப்பின் அந்த நோயாளியை மருத்துவ மனையில் சேர்த்து, கவனமாகச் சிகிச்சை அளிக்க வேண்டியிருக்கும். 72 மணி நேரத்துக் கும் அதிகமாகத் தலைவலி நீடித்தாலும் ஆஸ்பத்திரியில் அனுமதித்து மருத்துவர் கள் மேற்பார்வையில் சிகிச்சை தர வேண் டும்.

## தைத்து மாட்டிய சட்டை!

**ஒ**ருவர் தாமாகவே சிகிச்சை அளித்துக் கொள்வது எவ்வளவு தவறோ அவ்வளவு தவறு வேறொருவருக்குத் தரப்பட்டுள்ள மருந்தைப் பயன்படுத்துவது. நண்பரின் மைக்ரேய்னைப் போக்கிய மருந்து நமக்கு அதிக துன்பத் தையே தரும் சாத்தியக்கூறுகள் உண்டு. எனவேதான் ஒவ் வொருவருக்கும் மைக்ரேய்ன் வருவதற்கான காரணங்களைத் தீவிரமாக ஆராய்ந்து ஒரு சிகிச்சை முறையை வகுக் கிறோம் :

தலைவலியின் தீவிரம்; எந்தப் பகுதியில் வலிக்கிறது; தலைவலியுடன் கூட ஏற்பட்ட வாந்தி, வயிற்றுப் புரட்டல் போன்ற வேறு தொந்தரவுகள்; வலி தோன்றும் முன் சாப்பிட்ட உணவு; செய்த வேலைகள்; ஏற்பட்ட அறிகுறிகள்; வலி குறைவதற்கு உதவிய அம்சங்கள்; தலைவலியால் வீணான உழைப்பு நேரம் எவ்வளவு...? என்று நுணுக்கமான தகவல் களைக் கேட்டறிந்து பதிவு செய்து கொள்கிறோம். அவற்றைக் கூர்மையாக ஆராய்ந்து, அளவெடுத்துச் சட்டை தைப்பது போல், தகுந்த மருந்தைத் தேர்ந்தெடுத்து சரியான அளவில் தருகிறோம்.

## ஹாலிடே மைக்ரேய்ன்!

மருந்துகள் மட்டுமின்றி வாழ்க்கை முறையிலும் சில மாற்றங்களைச் சிபாரிசு செய்கிறோம். சிலருக்கு காப்பி, டீ அருந்துவதால் தலைவலியின் தீவிரம் அதிகரிக்கும். இவற்றைத் தவிர்க்கும்படி சொல்கிறோம். வேறு சிலருக்கு week end head ache என்று சொல்லப்படும் வார இறுதித் தலைவலி வரும்! அலுவலக நாட்களில் கடைப்பிடித்த ஒழுங்கு முறை வார இறுதி விடுமுறையில் தலைகீழாக மாறுவதால் நிகழும் விபரீதம் இது. விடுப்பு எடுத்துக் கொண்டு வெளியூர் போய் வரும் சிலருக்கு 'ஹாலிடே மைக்ரேய்ன்' வருகிறது! உடலின் ஜீவ கடிகாரம் திடீர் மாற்றத்தோடு தாக்குப்பிடிக்க முடியாமல் திணற, விளைவு : மைக்ரேய்ன்! இத்தகையவர்களுக்கு விடுமுறை நாட்களிலும் காலந்தவறாத உணவுப் பழக்கங்களை மேற்கொள்ள வலியுறுத்துவோம்.

அடிக்கடி, தீவிரமான மைக்ரேய்ன் தலைவலியால் அவதியுறுவோருக்கு மனோதத்துவ உதவி தேவைப்படக்கூடும். அவசியமானால் அதை சிபாரிசு செய்கிறோம். மைக்ரேய்ன் சிகிச்சையில் சமீபத்திய முன்னேற்றம் Bio-feedback முறை. அயல் நாடுகளில் ஓரளவு பிரபலமாகி விட்ட இம்முறை, இப்போது நம் நாட்டிலும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது. Bio feed என்ற கருவியைக் கொண்டு ஒருவரது உடல் வெளிப்படுத்தும் உடற்கூறு சமிக்ஞைகள் ஆராயப்படுகின்றன. சாதாரணமாகக் கண்ணுக்குப் புலப்படாத இந்த சமிக்ஞைகள் எலக்ட்ரானிக் கருவியின் உதவியுடன் வீடியோ திரையில் படம் பிடிக்கப்படுகின்றன.




வீடியோ திரையில் காணும் குறிப்புகள் நோயாளியின் உடற்கூறு அமைப்பையும் அதில் நிகழும் மாற்றங்களையும் உணர்த்த, அதற்கேற்ப சிகிச்சை முறை வடிவமைக்கப்படுகிறது.

## மருந்துகளைத் தவிர்க்க வேண்டிய சமயம்...

மைக்ரேய்ன் சிகிச்சைக்கான மருந்துகளில் ergotomine என்ற பொருள் அடங்கியுள்ளது. இந்தப் பொருள் அளவுக்கு அதிகமாக உடலில் சேர்ந்தால் உயிருக்கே ஆபத்தில் முடியும். கருவுறும் பருவத்தில் உள்ள பெண்கள் ergotomine அடங்கிய மருந்துகளைச் சாப்பிடவே கூடாது. மணமான பெண்கள் கு.க.வை மேற்கொண்டிருந்தாலொழிய இந்த மருந்துகளை நாங்கள் கொடுக்கவே மாட்டோம். உயர் ரத்த அழுத்தம், இதயக் கோளாறு, சிறுநீரகப் பிரச்னை, வேறு நோய்த் தொற்றுகள் உள்ளோருக்கு ergotomine எதிரி. எனவே, மைக்ரேய்ன்

சிகிச்சை எடுத்துக் கொள்வோர் மிக மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவ்வப்போது தகுந்த மருத்துவப் பரிசோதனைகள் மேற்கொள்ளல் வேண்டும்.

## மிதமே இதம்!

'என்னைப் போட்டு வருத்தாதே!' என்று உடல் ஒருவருக்கு அனுப்பும் எச்சரிக்கை சமிக்ஞைதான் மைக்ரேய்ன். அதனால்தான் மைக்ரேய்ன் தொல்லை உள்ளவர்களை எதையுமே மிதமாகச் செய்யும்படி அறிவுறுத்துகிறோம். உழைப்பானாலும் சரி, உடற்பயிற்சியானாலும் சரி, உணவானாலும் சரி, உறக்கமானாலும் சரி... அளவோடு இருப்பது நல்லது. தலையால் பந்தைத் தட்டும் (heading the ball) ஃபுட் பால் வீரர்களுக்கும் பளு தூக்கும் போட்டிகளில் பங்கேற்பவர்களுக்கும் மைக்ரேய்ன் வரும் சாத்தியக்கூறுகள் அதிகம். இவை இரண்டுமே இயல்பு மாறிய செயல்களல்லவா? அபூர்வமாக கீழ் முதுகுத் தண்டிலோ, முகத்திலோ, நெஞ்சிலோ மைக்ரேய்ன் வலி ஏற்படும். சிறு குழந்தைகளுக்கு வயிற்றுப் பகுதியில் வரும் மைக்ரேய்னை abdominal migraine என்கிறோம்.

## ஆராய்ச்சி அவசியம்!

மிக சகஜமாக விளங்கும் மைக்ரேய்ன் பிரச்னையை வெறும் தலைவலி என்று ஒதுக்கி விடுவதாலோ என்னவோ அது குறித்து அதிகம் ஆராய்ச்சிகள் இன்னும் செய்யப்படவில்லை. மருத்துவ ஆராய்ச்சிக்கு உலகம் செலவிடும் தொகையில் ஒரு சதவிகிதத்துக்கும் குறைவான அளவே மைக்ரேய்ன் தொடர்பான ஆராய்ச்சிக்கு ஒதுக்கப்படுகிறது. இந்நிலை மாற வேண்டும்.




மைக்ரேய்ன் பற்றிப் பேசவும் அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளவும் நிறையப் பேர் முன்வந்தால் மருத்துவ உலகத்துக்கும் பொது மக்களுக்கும் அது மிகவும் பயனுள்ளதாக அமையும்.

## அனுகூலமும் உண்டு!

ஓரி காரல் என்ற எழுத்தாளரின் 'ஆலிஸ் இன் வொன்டர்லாண்ட்' நூல் இன்று பேரிலக்கியமாகக் கருதப்படுகிறது. இந்நூலின் கதாபாத்திரங்களும் கற்பனை வீச்சும் பிரமிக்க வைக்கின்றன என்பதோடு குலுங்கக் குலுங்கச் சிரிக்கவும் வைக்கின்றன. மைக்ரேய்ன் நோயாளியான ஓரி காரல், பயங்கரமான தலைவலி வந்த போதுகளில்தான் தம் மனத்திரையில் ஆலிஸ் இன் வொன்டர்லாண்ட் கதாபாத்திரங்களைக் கற்பனை செய்து வடிவமைத்தார்! மைக்ரேய்ன் நோயாளிகளுக்கு இந்தத் தகவல் சற்றே ஆறுதல் அளிக்கலாம்!

## தலையில் விபத்தா? ஜாக்கிரதை!

●● ஒரு மாலை நேரத்தில், ஸ்கூட்டரில் சென்று கொண்டிருந்த போது, குறுக்கே வந்த சிறுவன் மீது மோதாமல் இருக்க, டைர் என்று பிரேக் போட்டான் சுந்தர். வேகமாக வந்த ஆட்டோ ஒன்று அவன் மீது மோதவே, சற்றுத் தள்ளிப் போய் தடால் என்று விழுந்தான். நல்ல வேளையாக ஒன்றும் பலமாக அடிபடவில்லை. ஆனால் தலையில் மட்டும் கொஞ்சம் அடிபட்ட வலி போல் தோன்றியது. அப்புறம் மெதுவாக எழுந்து, ஸ்கூட்டரை எடுத்து நிறுத்தி, உடையில் படிந்த தூசைத் தட்டி, மெதுவாக ஓட்டிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான் சுந்தர்.



ஒரு மாதம், இரண்டு மாதம்... சுந்தர் தனக்குத் தலையில் பட்ட அடியை, அடியோடு மறந்து விட்டான். ஆனால் -

அதற்குப் பிறகு, கொஞ்சம் கொஞ்சமாகத் தலையில் வலி ஆரம்பித்தது. முதலில் அதை அலட்சியம் பண்ண ஆரம்பித்தான் சுந்தர். எப்படி திடீரென்று இப்படித் தலைவலி வர ஆரம்பித்தது என்று அவனுக்குப் புரியவில்லை.

# தலைவலிக் டாட்டா!

''தினம் - தினம் தலைவலி, தலைவலி என்கிறீர்களே? டாக்டரிடம் காண்பிக்கக் கூடாதா?'' என்றாள் மிஸஸ் சுந்தர், ஒரு நாள்.

டாக்டர் பொறுமையாக சுந்தர் சொன்னதை எல்லாம் கேட்டார்.

குறிப்பாக, விபத்து குறித்து.

டாக்டர் ஜேக்கப் ஆப்ரஹாம்,
டாக்டர் கல்யாணராமன்,
டாக்டர் மீனாட்சி மோகன்ராம்

''ஒன்றும் கவலைப்பட வேண்டாம். ஒரு அரைமணி நேர அறுவைச் சிகிச்சை மட்டும் தேவைப்படும். அவ்வளவுதான்!'' என்றார் டாக்டர்.

ஆபரேஷனா?

தூக்கி வாரிப் போட்டது கந்தருக்கும், அவன் மனைவிக்கும்.

விபத்தின் போது கந்தருக்குத் தலையில் அடிபட்டதல்லவா? அப்போது, மூளைக்கும் மண்டையோட்டுக்கும் இடையே ரத்தம் மெல்ல மெல்லக் கசிய ஆரம்பித்திருக்கிறது. அந்த ரத்தக் கட்டி மூளையை அழுத்தும்போது, வலி ஆரம்பிக்கிறது. ஆபரேஷன் மூலம் கட்டியை அகற்றிவிட்டால், தலைவலி போய்விடுகிறது. இதை, குணப்படுத்தக் கூடிய வகையைச் சேர்ந்த தலை வலி என்று சொல்லுவோம். ஆனால் அலட்சியப்படுத்தி விட்டாலோ, கண்டுபிடிக்கப் படாமல் விட்டு விட்டாலோ, முடிவு வருந்தத்தக்க தாகிவிடுகிறது. இதை க்ரானிக் ஸப்ட்யூரல் ஹெமரேஜ் என்பார்கள். விபத்தினால் தலையில் அடிபட்ட பிறகு, வரும் தலைவலியை அலட்சியப்படுத்தக் கூடாது!



● டாக்டர் மீனாட்சி மோகன்ராம் (தமிழ்நாடு மருத்துவமனை)

## ஓர் அடிக்ஷன் மாதிரி...

●● புதிதாக வேலைக்குச் சேர்ந்த சுரேஷ், தினமும் நண்பர்களுடன் ஒரு கப் காப்பி சாப்பிட்டான்.

ஒரு ஞாயிற்றுக் கிழமை.

மணி பத்து இருக்கும். சுரேஷுக்கு ஏனோ தலை வலிக்கிற மாதிரி இருந்தது. ஒரு வேலையும் ஓடவில்லை.

ஒரு காப்பி சாப்பிட்டால் என்ன?

சாப்பிட்டான். தலைவலி போயே போய்விட்டது.

இது வித்ட்ராயல் எஃபெக்ட். ட்ரக் அடிக்ஷன் மாதிரிதான். தினமும் குறிப்பிட்ட சமயத்தில் காப்பி சாப்பிட்டு, அது ஒரு நாள் இல்லை எனும்போது, தன் கைவரிசையைக் காட்டுகிறது.

## குழந்தைக்குப் படிப்பில் ஆர்வமில்லையா?

●● சென்னையிலுள்ள பிரபலமான பள்ளிக்கூடம் ஒன்றில் ஒரு பெண் குழந்தை படித்துக் கொண்டிருந்தது. அடிக்கடி தலை வலி என்று சொல்லிக் கொண்டிருந்தது. அதன் காரணமாக, படிப்பில் ஆர்வம் குறைந்து வந்தது. கோபப்பட்ட ஆசிரியை அந்தப் பெண்ணைக் கடைசி பெஞ்சில் போய் உட்காரச்

சொல்லி விட்டாள், தண்டனை மாதிரி. ஆனால் இன்னும் சில அறி குறிகள் மெதுவாக வெளிப்படவே, குழந்தையை டாக்டரிடம் காண்பித் தார்கள். பிரைனின் ட்யூமர் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டு ஆபரேஷன் நடந்தது. குழந்தைக்குத் தலைவலி முழுதும் பறந்து போயிற்று. படிப் பில் மறுபடி ஆர்வம் காட்டத் தொடங்கியது! ஒன்றை மட்டும் நினைவில் கொள்ள வேண்டும். குழந்தைகளுக்கும் ப்ரெயின் ட்யூமர் வர சாத்தியம் உண்டு. ட்யூபர்குலர் மெனிஞ்சைடிஸ்-க்கும் முதல் அறி குறி தலைவலிதான். அதிலும் இந்த நோய், குழந்தைகளிடையே சர்வ சாதாரணமாக இருந்து வருகிறது. எனவே தலைவலி மூன்று நாட்க ளுக்கு மேல் நீடித்தால் டாக்டரை அணுகி பரிசோதனைகளை மேற்கொள்வது அவசியம்.

● டாக்டர் கல்யாணராமன
(பேராசிரியர், சென்னை மருத்துவக் கல்லூரி)

மேற் சொன்ன உதாரணங்களைப் பார்க்கும் போது, தலை வலி என்பது அசாதாரண காரணங்களாலும் வரும், அற்ப கார ணங்களாலும் வரும் என்று தெரிகிறது.

## தலைவலி என்பது என்ன?

"இதுவரையில் எனக்குத் தலைவலியே வந்ததில்லை!" என்று உலகத்திலுள்ள எந்த மனிதனாலும் சொல்ல முடியாது. 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்...' என்று தாயுமான வர் சொல்கிற மாதிரி, ஒவ்வொரு மனிதனுக்கும் ஏதாவதொரு காரணத்துக்காக அவ்வப்போது, தலைவலி வந்து கொண்டுதான் இருக்கிறது.

அப்படியானால், தலைவலி என்பது என்ன? ஒரு நோயா? நிச்சயமாக இல்லை. தலைவலி என்பது வேறு ஏதோ ஒரு நோயின் அறிகுறியே தவிர, தலைவலி என்பதே ஒரு நோய் அல்ல. இப்படிச் சொல்வதால் தலைவலி வருகிற யாரும் 'ஐயய்யோ... தலையை வலிக்கிறதே... இது எனக்கு வந்தி ருக்கும் எந்த நோயின் அறிகுறியோ!' என்று அலறியடித்துக் கொள்ளவும் தேவையில்லை. காரணம், நமக்கு வருகிற தலைவலிகளில் ஏறத்தாழ எண்பது சதவிகிதம் ரொம்ப ரொம்பச் சாதாரணத் தலைவலிகள் தாம்.

## உதாரணத்திற்குச் சில :

சிலருக்குப் பசி அதிகமானால் கூடத் தலைவலி வரும். சாப்பிடாத காரணத்தால் உடலில் சர்க்கரைச் சத்து குறைகிறது. எனவே, உடனடியாகத் தனக்குச் சர்க்கரைச் சத்து தேவை என்று, உடல் தனது தேவையைத் தலைவலி மூலமாகத் தெரிவிக்கிறது; அவ்வளவுதான். சாப்பிட்டதும் உடனே தலைவலி குணமாகி விடும்.

சிலருக்கு நீண்ட நேரம் தொடர்ந்து படித்தால் அல்லது டெலிவிஷன் பார்த்தால் தலைவலி வரும். இந்த நிலை ஏன் ஏற்படுகிறது? கண்ணுக்கு அளவுக்கு அதிகமான வேலையைத்



தொடர்ந்து கொடுப்பதால் வருகிறது. இதைப் போக்க, உடனே மாத்திரைகளைப் போட்டுக் கொண்டு தொடர்ந்து டெலிவிஷன் பார்ப்பதோ, படிப்பதோ கூடாது. சிறிது நேரம் ஓய்வு அல்லது கண்ணுக்கு மட்டுமே அதிகம் வேலை தராத மற்ற வேலைகளைச் செய்யலாம். அப்போது தலைவலி தானாகவே குணமாகிவிடும்.

வேறு சிலருக்கு மல்லிகைப்பூ வாசனை கூடத் தலைவலியை உண்டாக்கிவிடும். அதாவது குறிப்பிட்ட சில வாசனைகள் சில ருக்கு ஒத்துக் கொள்ளாது; அலர்ஜியைத் தந்துவிடும். இப்படிப் பட்டவர்கள், தங்களுக்குப் பிடிக்காத வாசனைகளிலிருந்து ஒதுங்கிக் கொள்வதுதான் நல்லது. சொல்லப் போனால், அப்படி ஒதுங்கிக் கொள்வதொன்றுதான் அவர்களின் தலைவலிக்கான உண்மையான மருந்து; மற்ற இரசாயன மருந்துகளல்ல. இவ்வகை வலியைத் தவிர்க்க முடியாது!



* டாக்டர் ஜேக்கப் ஆப்ரஹாம் (தமிழ்நாடு மருத்துவமனை)

இன்னும் சிலருக்கு, அதிக ஓசை அல்லது வெளிச் சம் கூட தலைவலியைத் தர லாம். இவர்களும் அது போன்ற சந்தர்ப்பங்களைத் தவிர்த்துக் கொள்வதுதான் சிறந்த மருந்து. அஜீரணத் தால் தலைவலி வரும் என் பது மருத்துவ ரீதியாக நிரூ பிக்கப்படாவிட்டாலும் மிகச் சிலர் தங்களுக்கு அப்படி வரு வதாகச் சொல்கிறார்கள்; அல் லது நம்புகிறார்கள். இதற்கு அஜீரணத்தைத் தவிர்ப்பது தான் வழி!

இவையெல்லாம், வெகு சிலருக்கு அமைந்துள்ள உடல் கூறு அமைப்புப்படி வருகின்ற தலைவலிகள் தான். பெரும்பாலானவர் களுக்கு அல்ல.

சாதாரணமாக, அனைவ ருக்குமே உடல் சோர்வாலும் தளர்ச்சியாலும் (Muscle Tension Headaches) தலைவலி வரும். மனக் கவலை, பட படப்பு, பதற்றம், டென்ஷன், தூக்கமின்மை, வெயில் போன்றவற்றாலும் தலை வலிகள் வரும். இவையெல்லாம் கூட சாதாரணமான — அமைதியாக ஓய்வெ டுத்துக் கொண்டால் அல்லது மாத்திரைகள் சாப்பிட்டால் குண மாகி விடுகிற — தலைவலிகள்தாம். கவலைப்படுவதற்கு ஏது மில்லை.

## எப்போது ஜாக்கிரதை தேவை?

இன்ன காரணத்தினால்தான் நமக்கு இப் போது தலைவலி வந்திருக்கிறது என்பது சம்பந்தப்பட்டவர்களுக்கே வெளிப் படையாகத் தெரிகிற நிலையில், பெரும்பாலும் பிரச்னைகள் ஏதும் இருப்பதில்லை.

சம்பந்தப்பட்டவர்களுக்குக் காரணமே தெரியாமல் வருகிற தலைவலிகள் விஷயத்தில்தான் அதிக எச்சரிக்கை தேவை. இதோடு, தலைவலி என்பது நெற்றிப் பொட்டுகளில் மட்டும் தான் வலிக்கும் என்பதில்லை; தலை மற்றும் முகத்தின் எந்தப் பாகத்தில் வேண்டுமானாலும் வலியை ஏறுபடுத்தும்!

## உதாரணத்திற்குச் சில :

சிலருக்குச் சளித் தொல்லையாலும் (Headaches from Sinusitis) தலைவலி வரும். இது மாதிரியான தலைவலி, கன்னங்களில் வலிக்கும் அல்லது கன்னங்களைத் தொடும்போது வலிக்கும். இருமும் போதும் தும்மும் போதும் வலி அதிகமாகும்.

சிலருக்குத் தலைக்குப் பின்புறம் வலிக்கும். இதற்குக் காரணம் முதுகுத்தண்டில் (Headaches due to C - Spini disease) ஏற்படும் பிரச்னைகள்தான்.

வேறு சிலருக்கு, இரத்த அழுத்த நோய் (Hypertension) காரணமாகவும் தலைவலி வரும்.

இன்னும் சிலருக்கு, மூளை ஜுரம் (Meningitis) மற்றும் மூளையில் இரத்தக் கசிவு (Haemorrhage) காரணமாகவும் தலைவலி வரும். இரத்தக் குழாய்கள் நோயால் பாதிக்கப்படுகிறபோதும் (Headaches due to temporal arteritis) தலைவலி வரும். முகத்திலிருக்கிற நரம்புகளின் நோய்ப் பாதிப்பினாலும் (Trigeminal Neuralgia) தலைவலி வரும். பல்வலிகூட உங்களுக்குத் தலைவலியை உண்டாக்கும் சாத்தியம் உண்டு!

பிசுச் சிலருக்கு அதிகாலை எழும்போது தலைவலி இருக்கும். வாக்கிங் போய் வந்தால் சிறிது குறைந்து காணப்படும். வாந்தி வரும். அந்த வாந்தி சாதாரணமாக எடுக்கும் வாந்தி போல் இல்லாமல் அதிக வேகத்துடன் இருக்கும். தலையின் உச்சியிலோ அல்லது பின்பகுதியிலோதான் வலி இருக்கும். இப்படியிருந்தால் பெரும்பாலும் அது மூளைக் கட்டி (Brain tumor) யால் வந்த தலைவலியாக இருக்கவே வாய்ப்புண்டு என்று கருதலாம்.

காது, மூக்கு, தொண்டை போன்றவற்றில் ஏற்படும் நோய்களினால் கூட (Referred Headaches from ear, nose and throat infections) தலைவலி ஏற்படும். சிறுநீரகப் பாதிப்பினால் கூடத் தலைவலி வரும்.

பெரும்பாலும் கண்களில் ஏற்படும் பார்வைக் கோளாறுகளினால் மட்டும்தான் சிலருக்குத் தலைவலி ஏற்படும் என்பதில்லை. Glaucoma என்று சொல்லப்படும் கண்ணுக்குள் இருக்கிற திரவங்களின் அழுத்தம் (ultra ocular pressure) அதிகரிப்பதாலும் தலைவலி வர வாய்ப்புண்டு.

• இரத்த அழுத்தத்தினாலும் தலைவலி வரலாம்...



## பெண்களுக்கான தலைவலி!

பெண்களுக்கு மட்டுமே வரக்கூடிய தலைவலியும் உண்டு. அதுதான் மாத விடாய்க்கு முன்பாக வரும் (Premenstrual Headaches) தலைவலி. மாத விடாய்க்காக உடலிலுள்ள ஹார்மோன்கள் தயாரா

ரும் போது ஏற்படும் உடல் மாற்றங்களால் ஏற்படும் தலைவலி இது. பெரும்பாலும் இந்தத் தலைவலி மாதவிடாய் ஆரம்பமாகும் போதே நின்று விடும். ஆனால், மாதவிடாய் ஆரம்பித்த பிறகும் தலைவலி நீடிக்குமானால், அதையும் வழக்கமாக வரும் சாதாரணத் தலைவலிதான் என்று அலட்சியப்படுத்திவிடக் கூடாது.

இவையன்றி இன்னொரு முறையிலும் தலைவலி வரலாம். அதாவது ஒருவருக்கு ஏற்படும் விபத்து காரணமாகத் தலையில் அடி படலாம். அப்படி அடிபடுகிறபோது பிரச்னை ஏதும் இல்லாமல் போனாலும், சிறிது காலம் கழித்துத் தலையில் வலி ஏற்படக்கூடும். அப்போது உடனடியாக டாக்டரைப் பார்த்து, அவரிடம் விபத்து முதலிய எல்லாவற்றையும் கூறி ஆலோசனை பெறுவது அவசியம்.

## ஆலோசனைக்கான அவசியம்...

**ச**ரி, சாதாரணமாக வருகிற வழக்கமான தலைவலிகளிலிருந்து மாறுபட்ட தலைவலிகள் வருகிற போது என்ன செய்வது? நிச்சயமாக உங்கள் குடும்ப டாக்டரிடம் போய் ஆலோசனை கேட்பதுதான் சிறந்த வழி. அவர் உங்களுடைய தலைவலிக்கான காரணத்தைக் கண்டறிந்து, சம்பந்தப்பட்ட நிபுணர்களுக்குச் சிபாரிசு செய்வார். அதன்படி சிகிச்சையோ மூளைக் கட்டி போன்றவற்றுக்கு அறுவைச் சிகிச்சையோ செய்து கொள்ள வேண்டும்.

சாதாரணத் தலைவலியே கூட அடிக்கடி வருகிற நிலையில் உங்கள் குடும்ப டாக்டரைக் கலந்து ஆலோசனை பெற்று மாத்திரைகள் சாப்பிடுவதுதான் சிறந்தது. குறிப்பாகக் கருவுற்றிருக்கும் பெண்கள், தாங்களாகவே ஏதாவது ஒரு மாத்திரையைச் சாப்பிடுவதோ, அல்லது கணவருக்கும் இதுபோன்ற தலைவலிக்குத்தானே டாக்டர் இந்த மாத்திரைகளைச் சிபாரிசு செய்தார் என்றோ சாப்பிட்டுவிடக் கூடாது. அது ரொம்பவும் ஆபத்தானது; கருவிலுள்ள குழந்தையைக் கூட அது ஒருவேளை பாதிக்கும் வாய்ப்புண்டு.

## சில சுலபமான வழிகள்....

**டெ**ன்ஷன், சோர்வு, பதற்றம் போன்ற சாதாரணக் காரணங்களால் வரும் தலைவலிகளுக்கு, பிறகு எப்படித் தான் மருந்து மாத்திரைகளைத் தேர்ந்தெடுப்பது? எல்லாவற்றுக்குமே டாக்டரிடம்தான் ஓட வேண்டுமா? தேவையில்லை.

சிறிது நேரம் ஓய்வெடுத்தாலோ, தூங்கினாலோ தலையில் இறுக்கமாகத் துணியைச்

# தலைவலி: சித்தவைத்திய சிகிச்சை!




"**உ**தயத்தில் வரும் தலைவலி, மத்தியானத்தில் வரும் தலைவலி, மாலையில் வரும் தலைவலி என்று மூன்று வகைப்பட்ட தலைவலியையும் குணப்படுத்த சித்த வைத்தியத்தில் தருந்த மருந்து இருக்கிறது.

"தலைக்குத் தைலமும், உள்ளுக்குச் சாப்பிட மருந்தும் தருகிறோம். மூன்றே நாட்களில் தலைவலி நின்று போய் விடும். ஆனால் தொடர்ந்து வராமல் இருக்க தைலத்தை, சூரிய உதயத்துக்கு முன்னால், வாரம் ஒருமுறை தேய்த்துக் குளித்தால் போதும். அதுவும் மூன்றே வாரங்களுக்கு!

"தலையில் நீர் கோத்துக் கொண்டு, தலைவலியினால் அவதிப்படும் நோயாளிகள் உண்டு. அவர்களுக்கு, பச்சிலையை இடித்து, சாறு பிழிந்து, சக்கையை மட்டும் தலையில் வைத்து துண்டால் கட்டி விட்டால், உள்ளே இருக்கும் நீர் முழுவதையும் சக்கை உறிஞ்சி எடுத்து விடும். இது போல் குணமான நோயாளிகள் பலர் உண்டு.

"ஆயுர்வேத முறையில் உள்ளது போலவே, வாதம், பித்தம், கபம் ஆகியவற்றின் தன்மை உணர்ந்தும் சித்த வைத்தியத்தில் தலைவலிக்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறது" என்கிறார் சித்த வைத்திய நிபுணர், டாக்டர் எம். எஸ். ராஜன்.



● கண்ணுக்குள் இருக்கிற திரவங்களின் அழுத்தம் அதிகம் இருப்பதாலும் தலைவலி வர வாய்ப்புண்டு

சுற்றிக் கொண்டாலோ அல்லது காற்றாட மொட்டை மாடியில் சிறிது நேரம் வேடிக்கை பார்த்து விட்டு வந்தாலோ உங்கள் தலைவலி குணமாகிவிடும் என்றால் அப்படியே செய்து விடுங்கள். தலைவலிக்கு 'டாட்டா' சொல்ல இவ்வளவு சுலபமான வழிகள் இருக்க, அனாவசியமாய் மருந்துகளைச் சாப்பிடுவானேன்!

## சில இக்கட்டான நேரங்கள்.....

உடலால் உழைப்போரைக் காட்டிலும் உட்கார்ந்தபடி வேலை செய்வோருக்கு அதிகமாகத் தலைவலி வர வாய்ப்பு உண்டு! ஒரு குறிப்பிட்ட வேலையை ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குள் செய்து முடித்துத் தருவதாக உங்கள் மேலதிகாரியிடமோ அல்லது உங்கள் கஸ்டமரிடமோ வாக்குக் கொடுத்துவிட்டீர்கள். நீங்கள் சொன்ன கெடு நேரம் நெருங்க நெருங்க, உங்களையறியாமல் அந்த வேலை முடிய வேண்டுமே என்கிற படபடப்பும் பதற்றமும் ஏற்பட்டு, அதனாலும் தலைவலி ஏற்பட வாய்ப்புண்டு. அந்த மாதிரி வேலைகளைத் தவிர்க்கவும் முடியாது. எனவே, அப்படிப்பட்டவர்கள் மாத்திரை ஏதாவது போட்டுக் கொண்டோ அல்லது 'பாம்' ஏதாவது தடவிக் கொண்டோதான் வேலையைத் தொடர்ந்தாக வேண்டும்.

இந்தச் சூழ்நிலையில் மாத்திரை என்றால், Paracetamol கொண்ட மாத்திரைகளைச் சாப்பிடலாம். உதாரணத்திற்குக் குரோசின். மற்ற எதுவானாலும் டாக்டரின் ஆலோசனை பெறுவதுதான் நல்லது. இந்த மாத்திரையையும் ஒரு நாளைக்கு ஒருவர் அதிகபட்சம் ஆயிரம் மில்லி கிராம் (சுமார் ஆறு மாத்திரைகள்) அளவுக்குத்தான் சாப்பிடலாம். (குழந்தைகளுக்கு அதில் பாதிதான்) அதற்குமேல் சாப்பிட்டால்தான் தலைவலி குணமாகிறது என்றால் டாக்டரிடம்தான் போக வேண்டும்!




## 'பாம்'கள் என்ன செய்கின்றன?

அப்புறம் 'பாம்'. இவற்றைத் தடவிக் கொள்வதால் அடி ஆழம்வரை ஊடுருவிச் சென்று உங்கள் தலைவலியைப் போக்கிவிடும் என்பதெல்லாம் உண்மையல்ல. 'பாம்' தருகிற எரிச்சலில், நீங்கள் உங்கள் தலைவலியை மறந்து போய் விடுகிறீர்கள் என்பதுதான் உண்மை. தவிர, இன்னொருவர் தடவி விடும்போது கிடைக்கும் பரிவு இதம் அளிக்கிறது. டென்ஷன் குறைகிறது. டென்ஷன், மலச்சிக்கல் போன்ற எளிய காரணங்களால் தலைவலி எனில் அது நீங்கி விட, தலைவலியும் பறந்துவிடுகிறது. பாம்கள் தலைவலிக்கான மூல காரணத்தைத் தாக்கி நீக்காவிட்டாலும் எப்படியோ, தலைவலியிலிருந்து உங்களுக்கு நிவாரணம் கிடைக்கிறதே, அதுதான் விஷயம்!

## சில தவறான வழிமுறைகள்!

'இலேசாகத் தலையை வலித்தது. ஒரு பெக் உள்ளே போனவுடன் ரிலாக்ஸ் ஆகி, தலைவலி போய்விட்டது' என்று சிலர் சொல்லுவார்கள். ஓரளவுக்கு மதுவும் டிராங்க்குலைசர் மாதிரிதான். ஆனால் மறுநாள் என்ன ஆகிறது? ஹேங்கோவர் - தலைவலி. போடு இன்னொரு பெக். மேலே, மேலே.... குடிகாரன் என்ற பட்டம் ஒட்டிக் கொண்டுவிடுகிறது. எனவே ஆல்கஹால், நோயைக் குணப்படுத்தாது. குறிப்பாக, தலைவலியைப் போக்க, மதுவை அருந்த வேண்டாம். தலைவலி போய் திருகுவலி வந்த கதையாகி விடும்.

பெர்சனல் பிரச்னைகளையோ, பெர்சனாலிடி பிரச்னைகளையோ மது பானம் தீர்த்து வைக்காது. இதற்காகத்தான் மது அருந்துகிறோம் என்றால், முடிவு பயங்கரமாகத்தான் இருக்கும்.

புகை பிடிப்பது, ஒரு வகையில் டென்ஷனைக் குறைத்து, தலைவலியையும் போக்கக்கூடும். ஆனால் டென்ஷனைத் தவிர்ப்பதற்காகவே புகை பிடித்துக் கொண்டே போனால், தலைவலியும் தொடர்ந்து கொண்டே இருக்கும்! அது மட்டுமல்ல, புகைபிடிப்பவருக்கு அருகில் இருக்கும் புகைபிடிக்காதவருக்குக் கூடத் தலைவலியை உண்டாக்கும்!

## குழந்தைகள் விஷயத்தில்......

சரி, குழந்தைகள் விஷயத்தில் இந்தத் தலைவலிகளை எப்படி அணுகுவது? டென்ஷன், படபடப்பு போன்ற காரணங்கள் பெரியவர்களைப் போல் குழந்தைகளுக்கு மிகவும் குறைவாகத்தான் இருக்கும் என்பதால், அவர்களுக்குத் தலைவலி வரும்போது, அதற்கான காரணத்தைக் கண்டுபிடிக்க வேண்டியது உடனடி அவசியம். நீங்கள் கண்டுபிடிக்கும் காரணங்களில் சந்தேகம் ஏற்பட்டாலோ அல்லது அடிக்கடி குழந்தைகளுக்குத் தலைவலி வருகிறது

# "கடவுளின் கோபத்தால் தலைவலி வருகிறது!"

**வேங்கடரமணா ஆயுர்வேதக் கல்லூரியின் முன்னாள் முதல்வர், டாக்டர் கே.எஸ்.வி. சர்மா சொல்கிறார் :**

வாதம், பித்தம், கபம் என்ற மூன்று பிரிவுகளில்தான் ஆயுர்வேத சிகிச்சை முறை செயல்படுகிறது. இம் மூன்று காரணங்களாலும் தலைவலி வரும். அது அதற்கு ஏற்ற மருந்து இருக்கிறது. அதனால் நாடி பிடித்துப் பார்த்து, எந்த உடற்கூறு நார்மல் ஆக இல்லை என்பதைக் கண்டு உணர்ந்து, நோயாளிக்கு மருந்து கொடுக்கிறோம். மருந்து, நோய்க்கு அல்ல; நோயாளிக்குத்தான். இளம் வயதுக்காரர் ஒருவருக்கு வரும் தலைவலிக்கான காரணமே, வயதான ஒருவருக்கு வரும் தலைவலிக்கும் காரணமாக இருக்கும் என்று சொல்ல முடியாது.

ஆயுர்வேதத்தில் என்ன சொல்லியிருக்கிறது, தெரியுமா? நம் உடம்பில் ஒரு கடவுள் இருக்கிறார். (சுயம்பூஹ ரேஷ பகவான்.) அந்தக் கடவுளுடைய கோபத்தினால்தான் உடலில் வலி என்பதே வருகிறது. அந்தக் கோபம் எத்தகையது? அப்பா பிள்ளையிடம் நல்லதுக்காகக் கோபித்துக் கொள்வதைப் போன்றது. பயங்கர நோய் எதுவும் வராமல் தடுக்கவே தலைவலியைக் கொடுக்கிறார் அந்தக் கடவுள். விரித்துக் கொண்டு மூலகாரணத்தைக் கண்டுபிடித்து சிகிச்சை பெறுவது நல்லதற்குத்தானே?



என்றாலோ, உடனடியாக உங்கள் குடும்ப டாக்டரை அணுகி ஆலோசனை பெறுவது மிகவும் அவசியம்.



## தலைவலியே வராமல் தடுக்க முடியாதா?

இவையெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும்! தலைவலியே வராமல் யாரும் தற்காத்துக் கொள்ள முடியாதா என்று கேட்டால், நிச்சயமாக முடியாது என்றுதான் சொல்ல வேண்டும்!

யோகாசனம், தியானம், உடற்பயிற்சி போன் றவையெல்லாம், ஓரளவுக்குத் தலைவலி வராமல் தடுக்கும் என்றாலும் முழுமையாகத் தடுக்க முடியாது.

பிரிட்டிஷ் மெடிகல் அசோஸியேஷன் ஒரு புத்தகம் வெளியிட்டிருக்கிறது, தலைவலியைப் பற்றி. சாதாரண மக்களுக்காக வெளியிடப்பட்ட புத்தகம். அதில் ஒரு பக்கம் பூராவும் 'ஆன்மிகமும்-தலைவலியும்' என்ற தலைப்பில் அலசப்பட்டிருக்கிறது! முடிவில், 'தேவைப் பட்டால் ஒரு பூசாரியிடம் செல்லுங்கள் - Go to a priest' என்கிறார் கட்டுரையாளர்!



✱ தமிழ்நாடு மருத்துவமனை : ஆபரேஷன் நடக்கிறது...

பல தலைவலி கேசுகளை அலசி ஆராய்ந்தால், மன ரீதியான காரணங்கள் ஒவ்வொன்றாக வெளியாகி, பிரச்னையைப் புரிந்து கொள்ள உதவும். அறுவைச் சிகிச்சையாலும் குணப்படுத்த முடியாத வகை கான்சர், துரோகம் செய்யும் கணவன், மன முதிர்ச்சி மழுங்கிய குழந்தை - இந்த மாதிரி எல்லாம் இருக்கிற சூழ்நிலையில், கடவுள் நம்பிக்கையும், பிரார்த்தனையுமே மனத்துக்குச் சாந்தி தரும். அமைதி தரும். அன்றாட வாழ்க்கையில், கர்ம யோகத்தின் கூற்றுப்படி, 'நிஷ்காம்ய கர்மா' என்பார்கள், அதைப் பின்பற்றலாம்: அதை விடுத்து, 'தலைவலிக்கிறதே' என்று அங்கலாய்த்துக் கொள்ள ஆரம்பித்தால் வேதனைதான் அதிகமாகும்.

சொல்லப்போனால், சிலவகைத் தலைவலிகள் சில அபாயமான நோய்களை நமக்கு ஆரம்பத்திலேயே அடையாளம் காட்டக் கூடியவைகளாக இருப்பதால், ஒருவகையில், தலைவலி வருவதுகூட நல்லதுதான்!

படங்கள் : கோபிநாத்

# கல்கி



# தலைவலிக்கு டாட்டா!

13.2.94 இதழுடன்
இலவச இணைப்பு

# நீங்களும் சொந்த வீடு சுலபமாக வாங்க வழியுண்டு



## ஃப்ளாட்டுகள் கட்டப்படவுள்ள இடங்கள் :

| அக்ஷயா | ஐஸ்வர்யா | ஆசீர்வாத் | ஆதித்யா |
|---|---|---|---|
| 16, 3 வது மெயின் ரோடு, நங்கநல்லூர், சென்னை - 61. | பிளாட் 1 & 2, 7 வது மெயின் ரோடு, தண்டீஸ்வரம் நகர், வேளச்சேரி, சென்னை - 42. | முதல் லேன், 2 வது மெயின் ரோடு, ட்ரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 24. | 15/4, ஜெகம்மாள் தெரு விரிவு, அமிஞ்சிக்கரை, சென்னை - 29 |

- உங்கள் பட்ஜெட்டுக்கு ஏற்ற வகையில் டீலக்ஸ் ஃபிளாட்டுகளும் பங்களாக்களும் சென்னை நகரின் பல்வேறு கௌரவமான பகுதி களில் கிடைக்கும்.
- கட்டடப் பணியின் முன்னேற்றத்தையொட்டி, வட்டியில்லாத தவணைமுறையில் கட்டணம் செலுத்தலாம். அல்லது மொத்த கட்டணமும் செலுத்தி பத்து சதவிகிதம் தள்ளுபடி பெறலாம்.
- முன்னணி நிதி நிறுவனங்கள் மூலம் கடன் வசதி செய்து தரப்படும்.
- நவீன வசதிகளுடன் கூடிய கட்டடங்கள் ரசனையுடன் அழகாக வடிவமைக்கப்படுகின்றன.
- தரமான கட்டமைப்பு; நிர்ணயித்த காலக்கெடுவுக்குள் முடிக்கப்படும்.




**ASSOCIATED BUILDERS**

II FLOOR, 26, RANGANATHAN STREET,
T. NAGAR, MADRAS - 600 017. INDIA.

✆ OFF : 440210 / 440224
Res : 2345244 Fax : 2344333

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in SriLanka



# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. போன்:582676; 564354

## கனகதாரா முதலீட்டுத் திட்டம்

**உங்கள் குழந்தைச் செல்வங்களை கோடீஸ்வரனாக்குங்கள்!**

**ரூ. 50,000/-** செலுத்துவீர். 10 ஆண்டுகளில் **ரூ. 50,000/-ஐ** திரும்பப் பெறுவீர்.

மீண்டும் 20ம் ஆண்டு நிறைவில் ரூபாய் **ஒரு கோடியை** பெறுவீர்.

(ரூ. 12,500/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும்)

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

**ரூ. 580/-** செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் **ரூ. 40,000/-** பெறுவீர்.

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | •5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும். உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம் 15 ஆண்டுகள்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |

## பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19 1/2%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

**உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா!** இதோ

ரூ. 7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் **ரூ. 1,25,000/-** பெறலாம்

ரூ. 9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் **ரூ. 1,50,000/-** பெறலாம்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

| கடன் | நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்<br>சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும். | வட்டி வீதம் ரூ. 1.85 |
|---|---|---|

(Friday Weekly Holiday)

கௌரவ ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம்,** B.Sc.
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன்,** B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும் Business Hours :
Week days 8.30 a.m. to 12.30 p.m. &
2.00 p.m. to 6.00 p.m.
Sunday 8.30 a.m. to 12 noon.

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# ஃபாரெக்ஸ்

## உணவு விழா

ஃபாரெக்ஸ் அணிவரிசை உங்கள் குழந்தையின் துரிதமான முழு வளர்ச்சிக்குத் தேவையான சத்துக்களை அளிக்கிறது.



4-வது மாதம் முதல், பாலுடன் கோதுமை தானியம் கலந்த ஃபாரெக்ஸ் அளித்து உங்கள் குழந்தையின் திட உணவை ஆரம்பியுங்கள்.

5-வது மாதம் முதல் குழந்தைக்கு ஃபாரெக்ஸ் வெஜ் அளியுங்கள். கோதுமை, பால், வைட்டமின் செறிந்த தக்காளி, கேரட் மற்றும் பயத்தம் பருப்பின் நற்பலன்கள் அனைத்தும் இதில் அடங்கியுள்ளது.

5-வது மாதம் முதல், கோதுமை, பால் மற்றும் வாழைப்பழம், மாம்பழம், ஆப்பிள் செறிந்த ஃபாரெக்ஸ் ஃப்ரூட்ஸ் கொடுத்திடுங்கள்.



# வளரும் குழந்தைகளுக்கு

6-வது மாதம் முதல் குழந்தைக்கு அளியுங்கள் ஃபாரெக்ஸ் எக். இதில் எளிதில் சீரணிக்கக் கூடிய முட்டை மற்றும் பாலின் நன்மைகள் அடங்கி—யுள்ளன.








**ஃபாரெக்ஸ்**
சுவையுடன் வளரும் வழி.

முக்கிய அறிவிப்பு: தாய்ப்பால் உங்கள் குழந்தைக்குச் சிறந்தது. நான்கு மாதங்கள் முதல் உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மட்டுமின்றி, தானிய உணவையும் கொடுங்கள்.

Gx. 931.93.Tm